மதப்புரட்சி செய்த மகான்

# ஸ்ரீ ராமானுஜர்

சாண்டில்யன்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | டிசம்பர், 1986 |
| இரண்டாம் பதிப்பு | : | பிப்ரவரி, 1991 |
| மூன்றாம் பதிப்பு | : | ஜூன், 1996 |
| நான்காம் பதிப்பு | : | மே, 2000 |
| ஐந்தாம் பதிப்பு | : | மார்ச், 2004 |
| ஆறாம் பதிப்பு | : | டிசம்பர், 2005 |
| ஏழாம் பதிப்பு | : | அக்டோபர்,2008 |
| எட்டாம் பதிப்பு | : | செப்டம்பர், 2010 |




**திருநாவுக்கரசு தயாரிப்பு**

---

**விலை : ரூ. 60.00**

| | | |
|---|---|---|
| ❒ Title | : | **Mathapuratchi Seitha Mahan SRI RAMANUJAR** |
| ❒ Author | : | **SANDILYAN** |
| ❒ Language | : | Tamil |
| ❒ Subject | : | Spiritual Biography |
| ❒ Edition | : | Eighth Edition, September, 2010 |
| ❒ Pages | : | 256 |
| ❒ Published by | : | **VANATHI PATHIPPAKAM**<br>23, Deenadayalu Street,<br>Thyagaraya Nagar,<br>Chennai-17. ☎ 24342810, 24310769<br>E-mail : vanathipathippakam@vsnl.net<br>Website : www.vanathi.in |
| ❒ Price | : | **Rs.60.00** |

---

Typeset at : Saguram Graphics, Chennai-24

*Printed at :* Novena Offset Printing Co., ☎ 28446891, 28446166



இராம. வீரப்பன்

*9, திருமலை சாலை,*
*தியாகராய நகர்,*
*சென்னை - 17*

19.12.86

## மதிப்புரை

தமிழ் எழுத்துலகில் நீண்ட காலமாக நெடுங் கதை இலக்கியங்களையும் வரலாற்று இலக்கியங் களையும் படைப்பதில் நிகரற்ற புகழோடு விளங்கு பவர் திரு. சாண்டில்யன் அவர்கள்.

எழுத்தாளர்கள், சிறந்த ஒழுக்கமும், உயர்ந்த பண்பாடும் நிறைந்த வாழ்வைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து வருபவர். ஒரு தலைமுறைக்கு மேலாக இலக்கிய உலகில் கொடிகட்டி விளங்குகிறவர்... சிறந்த சிந்தனை யாளர்... தனக்கென்று தனிப் பாணி வகுத்து யாரும் வெல்ல முடியாமல் இன்று வரை எழுத்துலகில் வெற்றி பெற்று வருகிறவர்.. எல்லோருடைய நன்மதிப்பிற்கும் உரிய பெரியவர்,

முதியவர்... அனுபவத்தில் மட்டுமல்ல, அறிவிலும் ஆற்றலிலும் முதிர்ந்தவர்... புதுமை வெள்ளத்திற்குப் பழமையைக் கரையாக்கிப் புதுமைக்குப் பெருமை சேர்க்கிறவர்.

வரலாற்று நாவல்கள் படைத்த, வரலாறு படைத்த அருமைப் பெரியவர் சாண்டில்யன். இப்பொழுது சமய நூல்கள் படைப்பதிலும் தாம் யாருக்கும் சளைத்த வரில்லை என்பதை நிலை நாட்டி இருக்கிறார்.

சாண்டில்யனின் படைப்பு என்றாலே, அதில் விறுவிறுப்புக்குக் குறைவிருக்காது. அராபிக் குதிரை யின் லாவகமான ஓட்டத்துடன் தம்முடைய தொடர் நாவல்களை ஓட்டிச் சென்று ஒவ்வொரு அத்தி யாயத்தையும் முக்கியமான கட்டத்தில் அவர் நிறுத்தும் போது, அடுத்த வாரம் என்ன நடக்குமோ என்ற ஆவலால் பல வாசகர்களின் நெஞ்சங்களைப் படபடக்க வைப்பவர் அவர்.

இவருடைய தொடர் கதைகளுக்காகவே எண்ணற்ற வாரப் பத்திரிகைகள் கடைக்கு வந்ததும் விற்றுவிடும் சாதனைகளைக் கண்டிருக்கின்றன.

வரலாற்றில் காணும் உண்மைச் சம்பவங் களுடன் கற்பனையும் கலந்து அற்புதமான எழுத் தாற்றலால் நம்மை மகிழவைக்கும் சாண்டில்யன்

அவர்கள் கற்பனைக் கலப்பிற்குச் சிறிதும் இட மில்லாமல் மகான் ஸ்ரீராமானுஜர் வரலாற்றையும் விறுவிறுப்புக் குறையாமல் படைத்திருக்கிறார் என்பதைப் பார்க்கும்போது அவருடைய அற்புத மான எழுத்தாற்றல் மேலும் நம்மை வியக்க வைக்கிறது.

நூறாண்டு காலத்திற்கும் மேல் வாழ்ந்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குச் சமுதாயத்தை வழி நடத்திச் செல்லத்தக்க மிக உயர்ந்த கருத்துக் களைப் பரப்பியவர் மகான் ஸ்ரீராமானுஜர் ஆவார். பல துறைகளிலும் புரட்சிகளைச் செய்திருக்கும் மகான் ஸ்ரீராமானுஜருடைய வரலாற்றைச் சாண்டில்யன் அவர்கள் சுவை குன்றாமல் வடித்தி ருப்பது போற்றத் தக்க ஒரு மகத்தான சமய இலக்கிய பணியாகும்.

சென்ற நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டிலும் சாதி பேதமற்ற சமுதாயத்தைப் படைக்கச் சான் றோர்கள் பாடுபட்டுள்ள வரலாற்றை நாம் அறிவோம். அவர்களுக்கெல்லாம் வழிகாட்டும் வகையில் வாழ்ந்தவர்கள் மகான் ஸ்ரீராமானுஜர் போன்றவர்களாகவே இருக்க முடியும் என்பதைத் தான் இந்நூலைப் படிக்கும்போது நம்மால் உணர முடிகிறது.

தாழ்த்தப்பட்ட பிரிவிலே தோன்றிய திருக்கச்சி நம்பிகளைத் தம்முடைய குருவாக மதித்து வணங்கி

ஏற்றுக்கொண்ட இராமானுஜர், அவ்வாறே தம் முடைய சீடர்களாகவும் உறங்கா வில்லிதாசன் போன்ற தாழ்த்தப்பட்ட பிரிவினரையும் ஏற்றுக் கொண்டிருந்த அந்த வரலாறுகள் எல்லாம் இந் நூலில் சிறப்பாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

குணத்தில் குறைந்தவளான தம்முடைய துணைவியார் தஞ்சமாம்பாளின் குற்றங்களையும் கருணையால் பொறுத்துக்கொண்ட இராமானுஜர் எவ்வாறு தம்மை மதி நுட்பத்தோடு இல்லற பந்தத்தி லிருந்து விடுவித்துக் கொண்டார் என்பதைக் காட்டும் "ஸ்ரீஇராமானுஜர் துறவறம்" என்ற பகுதி குறிப்பிடத் தக்க சிறந்த பகுதியாகும்.

மதமாற்றம் என்பது தூய்மையான மன மாற்றத்தினால் அமைய வேண்டும். பணத்தைக் கொடுத்தோ, பள்ளிக்கூடங்கள் கட்டியோ, மருத்துவ வசதிகளை அளித்தோ ஸ்ரீஇராமானுஜர் மதமாற்றம் செய்ய வில்லை என்று திரு. சாண்டில்யன் அவர்கள் குறிப்பிட்டு, திருமலை நம்பியின் வாயிலாக கோவிந்தப் பட்டரை மனமாற்றம் செய்த அந்த நிகழ்ச்சியை விளக்கியிருக்கும் மூன்று அத்தி யாயங்களும் முத்துக்களைப் போல் இந்நூலில் ஒளி வீசுகின்றன. இக்காலத்திற்கும் ஒத்ததாகவே அமைந்துள்ளது பெருஞ் சிறப்பாகும்.

வன்முறையைத் துணைக்கொண்டு சோழ மன்னன் மதமாற்றம் செய்ய முற்படுவதும் அதனால்

பெரியநம்பிகளின் கண்கள் பறிக்கப் படுவதும். அப் பாவத்தைச் செய்த சோழ மன்னனைக் கண்களால் காண்பதே பாவம் என்று கூறி, கூ ரத்தாழ்வான் தானே தன் கண்களைத் தோண்டிக் கொள்வதும் மத மாற்றத்தை வன்முறையால் நிகழ்த்தக் கூடாது என்ற ஸ்ரீ இராமானுஜரின் சித்தாந்தத்தைக் காட்டும் சிறப்புமிகும் பகுதிகள்; வன்முறையால் மதமாற்றம் செய்தவர்கள், செய்ய விரும்புபவர்கள் ஆகி யோருக்குத் தமிழ் மண்ணின் வழிகாட்டும் நெறியைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

ஸ்ரீ இராமானுஜரின் பிரபாவத்தை எழுதினாலும் எழுதலாம். அவரது சீடர்களின் பிரபாவத்தை எழுதுவது மிகவும் கடினம் என்று குறிப்பிடும் திரு. சாண்டில்யன் இந்நூலில் அனந் தாழ்வான், முதலியாண்டான், வில்லிதாசன் போன்ற பல சீடர்களின் பிரபாவங்களை விவரிக்கும் பல பக்கங்கள் நம் உணர்வுகளைத் தொடும் இதமான பகுதிகள்.

அருமைப் பெரியவர் சாண்டில்யன் அவர் களுக்கு ஒரு அன்பான வேண்டுகோள். மதப் புரட்சி செய்த மகான் ஸ்ரீ இராமானுஜரை வடித்துக் காட்டிய நீங்கள் இதைப் போலவே தமிழகத்தைத் தழைக்கச் செய்த சமயத் தலைவர்கள் அனைவரின் வரலாறு களையும் எழுதி வெளியிட வேண்டும். அந்தப் பொன்னான கடமையில் இனித் தொடர்ந்து நீங்கள்

ஈடுபட வேண்டும் என்பதே என்னுடைய அன்பு வேண்டுகோள்.

சிறந்த நூல்களை வெளியிடுவதில் சிறந்த வராகத் திகழும் நண்பர் வானதி திருநாவுக்கரசு அவர்கள் திரு. சாண்டில்யனின் இவ்வொப்பற்ற நூலையும் வெளியிடுகிறார். இருவரையும் நான் மனமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

*சென்னை* இராம. வீரப்பன்



## முன்னுரை

பெரிய பெரிய அரசியல் கட்சிகளாலும் அதிகாரம் பெற்ற அரசுகளாலும். ஒழுங்காகச் செய்யமுடியாத பெரும் மத சமுதாயப் புரட்சிகளெல்லாம் தனி மனிதனாக, தன்னந் தனியாக ஸ்ரீராமானுஜர் நிறைவேற்றிவிட்டார். ஆகவே நீண்ட நாளாகவே அவருடைய வரலாற்றை எழுதி முடிக்க வேண்டுமென்ற ஆவலில் இருந்தேன். அந்த ஆவலைப் பூர்த்தி செய்யும்படியாக 'கீதாசார்யன்' ஆசிரியர் ஸ்ரீவெங்கடகிருஷ்ணன் வாய்ப்பளித் தார். அவருக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

சுமார் நான்கு ஆண்டுகள் தொடர்ச்சியாக இந்த நூலை எழுதியிருக்கிறேன். கீதாசார்யன் மாதப் பத்திரிகை ஆதலால் இதை முடிக்க நான்கு ஆண்டுகள் பிடித்தன. வேறு வார பத்திரிகையா யிருந்தால் இரண்டாண்டுகளில் முடித்திருக்கலாம். ஆனால் நான்காண்டுகள் ஆனாலும் கூட இதை எழுதியதில் மனநிறைவு ஏற்பட்டு இருக்கிறது அப்பேர்ப்பட்ட என்ன பெரிய சாதனைகளை ஸ்ரீராமானுஜர் புரிந்துவிட்டார்? சுமார் ஒரு நூற்றாண்டு காலமாக நமது அரசியல் வாதிகள் வலியுறுத்தி வந்திருக்கும் சீர்திருத்தங்கள் வருமாறு:

1. இந்து முஸ்லீம் ஒற்றுமை.
2. தீண்டாமை ஒழித்தல்
3. தீண்டாதார்க்கு ஆலயப் பிரவேச அனுமதி.
4. தாழ்த்தப்பட்ட மக்களை மேல் நிலைக்கு உயர்த்துதல்.

இந்த நான்கு சீர்திருத்தங்களை இராமானுஜர் எப்படி செய்து முடித்தார்? பெருமாளுக்கு ஒரு துலுக்க நாச்சியாரைத் திருமணம் முடிக்க, அதைப் பன்னிரண்டு ஆழ்வார்களும் பாடிய ஸ்ரீரங்கத்தி லேயே அமுலுக்குக் கொண்டு வந்தார். அதுவும் வைதீகம் உச்சமாக இருந்த காலத்தில் நடந்தது. அதே மாதிரியே திரு நாராயணபுரத்திலும் டில்லி நவாப் பெண்ணைப் பெருமாளுக்குத் திருமணம் புரிவித்து பீபீ நாச்சியார் ஆக்கி உற்சவங்களை அமர்க்களமாக நடத்தினார்.

திருநாராயணபுரத்தில் ஹரிஜனங்களுக்கு திருக்குலத்தார் என்று இராமானுஜர் பெயரிட்டு அவர்களைக் கோவிலுக்குள் அனுமதித்தார். இந்த ஆலயப் பிரவேசம் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பு நடந்தது. பிற்பட்ட மக்களை மேல் நிலைக்குக் கொண்டு வந்ததற்கு, பிள்ளை உறங்கா வில்லிதாசன் வாழ்க் கையே உதாரணம். கீழ்க்குலத்தவனான வில்லிதாசன், ஒரு தாசியை மணந்திருந்தான். ஸ்ரீராமானுஜர் அவர்கள் இருவரை யும் தமது மடத்தில் சேர்த்துக்கொண்டு, அந்தணர்களுக்குச் சரிசமானமாக நடத்தினார்.

இதை அந்தணர் குலம் பொறுக்கவில்லை. ஆனால் ஸ்ரீராமானுஜர் கவலைப்படவில்லை. வில்லிதாசனுடைய முழுக் கதையை "கவர்ந்த கண்கள்" என்ற எனது நூலில் விவரமாக எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அதுவும் வானதி பதிப்பக வெளியீடு. வானதி வெளியீட்டை வாங்கிப் படியுங்கள்.

ஸ்ரீராமானுஜருடைய இதயம் மிக விசாலமானது! அவருடைய பரந்த நோக்கம் அற்புதமானது. அவருடைய சமதிருஷ்டி உலகமே வியந்து போற்றக்கூடியது.

ஸ்ரீராமானுஜர் காலத்திலும், அவரைப்போல் இன்னொரு வியக்தி கிடையாது. அவருக்கு முன்னும் கிடையாது. பின்னும் கிடையாது. இந்த தமிழ்நாடு செய்த புண்ணியம் அவரைப் பெற்றது. கருணையே அஸ்திவாரமாகக் கொண்ட அவரது மதம் இன்றும் ஈடு இணையில்லாமல் உயர்ந்து நிற்கிறது. அவருடைய கருணை உள்ளம் அவருடைய சீடர்களையும் கவர்ந்தது. அவரைப் போலவே அவர்களும் புத்தியை ஆயுதமாகக் கொண்டிருந்தார்கள். அவருடைய சீடர் கோவிந்தன். என்பவர் ஒரு நல்லபாம்பு தீனி தின்ன முடியால் கஷ்டப்படுவதைப் பார்த்து அதன் வாயில் கையை விட்டு நாக்கில் இருந்த முள்ளை எடுத்தார். இதைக் கண்ட ஸ்ரீராமானுஜரே அசந்து போனார்.

இப்பேர்ப்பட்ட ஒரு மகானுடைய வரலாற்றை எழுதி முடித்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்.

இந்தப் புத்தகம் வித்வான்களுக்காக ஏற்பட்டதல்ல. அவர்களுக்குத் தெரியாதது எதுவுமில்லை. என்னைப்போன்ற சாதாரண மக்களும், பள்ளிக்கூட மாணவர்களும், நமது நாட்டில் பிறந்த ஒரு மகானுடைய வாழ்க்கையை அறிந்து கொள்ள வேண்டு மென்ற அவாவினால் இதை எவ்வளவு எளிய நடையில் எழுத முடியுமோ அவ்வளவு எளிய நடையில் எழுதி யிருக்கிறேன். இதைப் படிப்பவர்கள் எல்லாம் இதைப் புரிந்து கொண்டால் அதுவே எனக்குப் பெரும் பயன் தரும்.

இந்த நூலை எழுதுவதற்கு ஊக்கமளித்த கீதாசார்யன் ஆசிரியர் திரு. வெங்கடகிருஷ்ணன் அவர்களுக்கு எனது நன்றி.

பல பக்தி நூல்களைச் சிறப்பாகக் கொண்டு வந்திருக்கும் வானதி அதிபர் உயர்திரு. திருநாவுக்கரசு அவர்கள் இந்த நூலை மிக நல்ல முறையில் பதிப்பித்துள்ளார்கள். அவருக்கும் எனது நன்றி.

மாண்புமிகு அறநிலையத்துறை முன்னாள் அமைச்சர் ஆர்.எம். வீரப்பன் அவர்கள் இதற்கு முகவுரை எழுதியிருப்பது சாலப் பொருந்தும். அவர்களைவிட இந்தப் பணியைச் சிறப்பாகச் செய்ய எனக்கு வேறு யாரும் தோன்றவில்லை.

ஸ்ரீராமானுஜர் கோவில் பணிகளிலும், சீர்திருத்தங்களிலும் பெரிதும் ஈடுபட்டிருந்தார். அதே பணியில் ஈடுபட்டிருக்கும் மாண்புமிகு முன்னாள் அமைச்சர் திரு. ஆர். எம். வீரப்பன் அவர்களைவிடப் பொருத்தமானவர் யாரும் என் புத்தியில் புலப்படவில்லை. ஆகவே அவரையே எழுதும்படி விண்ணப் பித்துக் கொண்டேன். அவருக்கும் எனது நன்றி.

உடையவர் திருவடிகளே சரணம்.

**சாண்டில்யன்**



# மதப்புரட்சி செய்த மகான்

# ஸ்ரீ ராமானுஜர்

## பிரவேசம்

கடல் சூழ்ந்த இந்த மண்ணுலகம் பிறந்த நாளாய் எத்தனையோ மகான்கள் பிறந்திருக்கிறார்கள். பிறந்தவர்களில் காலச்சுழலில் மறைந்தனர் பலர். காலம் மறைக்க முடியாதவர் சிலர். அந்தச் சிலரையும் இருவகையாகப் பிரிக்கலாம். ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டு நியாய வேதாந்தங்களுக்குப் புத்துயிர் கொடுத்து மதப்புரட்சி செய்தவர் ஒருவகை. சமுதாயத்தின் லௌகீக சௌகரியங்களை அதிகப்படுத்தவும், அநீதிகளைத் தவிர்க்கவும் புரட்சி செய்தவர்கள் இன்னொரு வகை. வைதீகப் புரட்சி செய்தவர்கள் லௌகீகப் புரட்சி செய்தவர்களை ஒப்புக் கொள்வதில்லை. சமுதாயப் புரட்சி செய்தவர்களை

வேதாந்திகளை ஒப்புக் கொள்வதில்லை. ஆத்ம நியதி வேறு சமுதாய நியதி வேறு என்ற கருத்தே நீண்ட காலம் பரவி வந்தது. எட்டு வயதில் சந்நியாசமேற்று முப்பது வயதுக்குள் நிரீச்வர வாதத்தைத் தகர்த்த நிகரில்லா மேதையும் சிந்தனைக் களஞ்சியமுமான சங்கரபகவத் பாதர் கூட உலகம் ஸத்யமல்ல, மித்யை (பொய்), அது ஒரு சொப்பனம் என்று சொன்னார்.

இப்படி உலகத்திடமிருந்து பிரிந்து நின்ற வேதாந் தத்தை உலகத்தோடு இணைக்கவும், வேதாந்தப் புரட்சியை விளைவிக்கவும் ஸ்ரீ ராமானுஜர் தோன்றினார். "உலகம் ஸத்யம், பொய்யல்ல. மனிதன் வாழப் பிறந்திருக் கிறான். கைங்கரியமே அவனுக்கு மோட்ச சாதனம்" என்று வேதாந்த நிர்ணயம் செய்தார். வாழ்க்கை ஒரு சொப்பனமல்ல, மனிதனுக்குக் கடமையென்று ஒன்றிருக் கிறது என்று சொல்லி 'கர்மண்யேவ அதிகாரஸ்தே" என்று கீதா வாக்கியத்தின் ஸத்தியத்தை நிலை நிறுத்தினார். இப்படி செய்யப்பட்ட விசிஷ்டாத்வைத வேதாந்தப் புரட்சியால் மனித ஜன்மமெடுத்தவனுக்கு உலகத்தில் ஊன்றுகோல் உண்டு என்றும் நிர்ணயம் செய்தார்.

இப்படிப் பிரம்ம சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்த தோடு நிற்கவில்லை அவர். சமுதாயத்திலும் அதுவரை யாரும் செய்யத் துணியாத புரட்சியை விளைவித்தார். பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டவர் களிடையே ஜாதி வித்யாசம் கிடையாது என்பதைப் பலமுறை தாமே நடைமுறையில் செய்துகாட்டினார். செல்லப் பிள்ளையைத் தொடர்ந்து ஓடிவந்த முஸ்லிம் பெண்ணைப் பெருமாளுக்கே திருமணம் செய்துவித்தார்.

ஆதி திராவிடர்களைத் திருக்குலத்தார் என்றழைத்து அவர்களை ஆலயப் பிரவேசம் செய்வித்தார். பிற்குலத்தவனான பிள்ளையுறங்கா வில்லிதாஸனுக்கு அந்தணர்களைவிட அதிகமான ஏற்றத்தை அளித்தார். அந்தக் கீழ்க்குலத்தான் இறந்தபோது அவனுக்கு ஈமக்கிரியைகளைத் தாமே செய்தார். வில்லியின் மனைவியும் தேவதாசியுமான பொன்னாச்சி இறந்தபோது அவளுக்கும் தகனக்கிரியையே தாமே செய்தார். எப்படி பரமாத்மா எல்லா ஜீவராசிகளையும் சமதிருஷ்டியுடன் நோக்குகிறானோ அப்படியே ஸ்ரீராமானுஜரும் நோக்கினார்.

வைதீகம் தலைதூக்கி நின்ற காலத்தில் இத்தகைய புரட்சிகளை ஸ்ரீ ராமானுஜர் செய்தார். நாம் இன்று வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டு சட்டதிட்டங்கள் போட்டும் சாதிக்க முடியாத பெரும் சமுதாய புரட்சிகளை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பகவத் ராமானுஜர் செய்து முடித்தார். அவருடைய சட்டம் பகவத் பாகவத கைங்கர்யம். அவரது ஆயுதம் கடல் போன்ற கருணை.

இப்படி வைதீகப் புரட்சியும் சமுதாயப் புரட்சியும் இணைத்து சாதனை புரிந்த மகான் இன்றுவரை யாரும் பிறந்ததில்லை. அப்பேர்ப்பட்ட ஸ்ரீராமானுஜருடைய வரலாற்றை எழுத முன் வந்திருக்கிறேன். நீண்டகாலமாக எழுதத் தயங்கிக்கொண்டிருந்த இந்தப் பெரிய சரித்திரத்தை இப்பொழுது எழுதத் துணிந்து துவங்கியிருக்கிறேன். சுலபமில்லாத காரியமானாலும் கம்பன் சொன்னபடி "ஆசைபற்றி அறையலுற்றேன்." அவன் பாட முன் வந்தது "காசில் கொற்றத்து இராமன் கதை"—

குறைவொன்றுமில்லாத ராஜ்யபாரம் செய்த இராமன் கதை. நானும், குறை வொன்றுமிலாதவர் மட்டுமல்ல, அவர் திருவடி பற்றினார்க்குக் குறை ஏதும் வைக்காத பகவத் ராமானுஜரின் வாழ்க்கையை எழுத முற்படு கிறேன். பகவானைப் போலவே சகல உயிர்களுக்கும் கருணை காட்டி இந்த வையத்தை வாழ்விக்க வந்த எந்தை இராமானுஜரின் வரலாற்றைப் புனையும் பெரும் பணியில் அவரது திருவடிகளை நினைத்து பிரவேசிக் கிறேன்.





# மதப்புரட்சி செய்த மகான்
# ஸ்ரீ ராமானுஜர்

## 1. அவதாரம்

அழகிய அல்லி மலர்கள் பூத்துக் குலுங்கிய கேணியை (புஷ்கரிணியை) உடையதால் திருஅல்லிக்கேணி என்று பிரசித்தி பெற்றதும், பார்த்தசாரதிப் பெருமாளின் திருக்கோயிலால் புனிதமானதுமான திருநகரத்திலிருந்து இருபத்து ஆறாவது மைலில் உள்ள ஸ்ரீபெரும்புதூர் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில், கலியுகம் 4118, ஶாலிவாஹன சகாப்தம் 940 - வது பிங்கள வருஷம் சித்திரை மாதம் சுக்ல பஞ்சமி வியாழக் கிழமையன்று திருவாதிரை நக்ஷத்திரத்தில் நடுப் பகலில் கடக லக்னத்தில் ஹாரீத கோத்ரத்தவரான சர்வக்ரது ஆசூரி கேசவ ஸோமயாஜிக்கும் காந்திமதி என்ற பூமிப்பிராட்டியாருக்கும் திருமகனாய், உலகத்தை உய் விக்கும் வேதங்களின் உண்மைப் பொருளை விளக்கவும், இந்தக் காலத்தில் கூட பெரிய அரசுகளால் சாதிக்க முடி யாத பெரும்புரட்சிகளை விளைவிக்கவும் அனந்தனுடைய அம்சமாக ஸ்ரீராமானுஜர் அவதாரம் செய்தார்.

அவருடைய அவதாரம் மற்றவர்களுக்குப் புதிதானாலும் அவர் தந்தையான சர்வக்ரது தீக்ஷிதர் ஸோமயாஜிக்கோ, புராணங்களுக்கோ புதிதல்ல. பகவான் தமது தேவியிடத்தில் தனக்குப் புத்திரனாய் பிறப்பான் என்று ஸோமயாஜிக்கு முன்பே தெரியும். அவதார வருஷத்திற்கு முதல் வருஷம் கேசவ ஸோமயாஜி சந்திர கிரகணத்தையொட்டி சமுத்திரத்தில் நீராடி தர்ப்பணம் செய்ய விரும்பி திருவல்லிக்கேணிக்குப் போயிருந்தார். சமுத்திர ஸ்நானம் ஆனதும் ஸ்ரீ பார்த்தசாரதியை சேவித்துப் போக கோயில் பக்கம் வந்த சர்வக்ரது, புத்திரனைப் பிரார்த்தித்து நாம் ஏன் ஒரு யாகம் செய்யக்கூடாது என்று நினைத்தார். பல யாகங்களைச் செய்து எத்தனையோ குடும்பங்களுக்கு க்ஷேமத்தை உண்டாக்கி வைத்ததால் சர்வக்கிரது என்று பட்டப் பெயரடைந்த ஸோமயாஜிக்குத் தமக்கும் ஓர் இஷ்டி யாகம் செய்யலாம் என்ற யோசனை பிறந்தது. ஆகவே சந்நிதிக்கு எதிரில் ஹோமம் வளர்த்து ஹவியைக் கொண்டு இஷ்டி யாகம் செய்தார். அன்றிரவு பகவான் சொப்பனத்தில் வந்து, "உனது இஷ்டம் சித்திக்கும். உனக்கு நாமே புத்திரனாய் வந்து சேருவோம்" என்று சொல்ல மிகவும் புளகாங்கிதராய் கேசவஸோமயாஜி பெரும்புதூர் வந்து சேர்ந்தார். யாகப் பிரசாதத்தை தமது மனைவியான பூமிப் பிராட்டிக்குக் கொடுத்தார். அன்று முதல் பூமிப் பிராட்டியார் கர்ப்ப முற்று பன்னிரண்டாவது மாதத்தில் ஸ்ரீராமானுஜனைப் பெற்றெடுத்தாள்.

ஸ்ரீராமானுஜருடைய அவதாரம் முன்னதாகவே தீர்மானிக்கப்பட்டிருந்ததைப் பற்றிப் பத்ம புராணம் பின்வருமாறு விவரிக்கிறது:

"இன்னும் நீண்ட காலத்திற்குப் பின்பு பகவானே உலகத்தில் ஒரு திரிதண்ட சந்நியாசியாக அவதாரம் செய்து தர்மத்தை நிலைநிறுத்துவான்; அந்தக் காலத்தில் நாஸ்திகர்களும், கிருத்திரிம புத்தியுள்ளவர்களும் மனிதர்களுடைய

புத்தியைக் குழப்பியிருப்பார்கள். திறமையான வாதங்களினாலும் பலவகைத் தத்துவங்களினாலும் வேதாந்தத்தைப் போலவே காணப்படும் பொய்களும் மனிதர்களின் மனங்களைப் பரமாத்மாவான விஷ்ணுவிடமிருந்து ஈர்த்து விடும். இதனால் மக்கள் ஸ்ரீமந் நாராயணனுடைய குண விசேஷங்களை மறந்து போவார்கள். இத்தகைய சமயத்தில் பக்த கோடிகளின் அதிர்ஷ்டத்தால் மேற் சொன்ன உன்னதமான அவதாரம் ஏற்படும். அந்த திரிதண்டி சந்நியாச அவதாரம் மஹரிஷி பாதராயணருடைய உபதேசங்களையும் கீதார்த்தங்களையும் உபதேசிக்கும். அந்தத் தெய்வ புருஷர் வியாச சூத்ரங்களுக்கு பாஷ்யம் எழுதி உலகத்தைப் புரட்டு வாதங்களிலிருந்து மீட்டு உண்மைப் பாதைக்குத் திருப்புவார்."

இது தவிர நாரதீய புராணமும் ஸ்ரீராமானுஜ அவதாரத்தை முன்கூட்டியே சுட்டிக் காட்டுகிறது: "அனந்தப் ப்ரதமம் ரூபம், லக்ஷ்மணச்சததப்பர: பலபத்ரஸ் த்ருதீயாஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி" என்பது புராண வாக்கியம்.

இப்படிப் புராணங்களாலும் மகான்களாலும் எதிர்பார்க்கப்பட்ட புரட்சிப் பிழம்பாக ஸ்ரீ ராமானுஜர் கி.பி. 1017 - வது ஆண்டில் அவதாரம் செய்தார்.





# 2. இளமைப் பருவம்

ஆருத்ரா நக்ஷத்திரத்துக்கே ஏற்றம் அளிக்க வந்த மகாபுருஷனாகவும், *"பொலிக பொலிக" என்ற நம்மாழ்வாரின் பாட்டில் காணப்படும் "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற வாக்கியத்தை மெய்ப்பிக்க, கலியின் இருளைக் கிழித்து ஆண்டவன் அருள் சுரக்க ஆவிர்பவித்த சூர்ய ரச்மி போலவும், திவ்யமங்கள விக்ரகமாய், விலக்ஷணத்துக்கு ஒரு இலக்கணமாய், காந்திமதியின் வயிற்றில் பிறந்து தேஜோமயமாய்க் காட்சியளித்த தமது புத்திரனைக் கண்ட சர்வக்ரது கேசவ சோமயாஜி சந்துஷ்டியின் எல்லையை அடைந்தார். இப்படித் தமக்கு ஏற்பட்ட புத்ர பாக்கியத்தைப் பற்றி தமது மைத்துனரான ஸ்ரீசைல பூர்ணர் எனும் பெரிய திருமலை நம்பிக்குத் தெரியப் படுத்தினார்.

இந்த சுபச் செய்தியைக் கேட்ட பெரிய திருமலை நம்பி பூரித்துப் போனார். பெரிய திருமலை நம்பி ஸ்ரீ ஆளவந்தாரின் மனத்துக்கினிய சீடர்களில் ஒருவர். திருவேங்கடமுடையானுக்குச் சேவை செய்வதே தமக்குக் கடமையென

---

* *திருவாய்மொழி 5 - ம் பத்து இரண்டாம் பகுதி முதல் பாட்டு.*

அந்தப் பணியிலேயே காலங்கழித்து வந்தார். ஸ்ரீ ஆள வந்தார் கருணையால்தான் அவருக்கு அந்த பாக்யமும் கிடைத்தது.

சிறு வயதிலேயே ராஜபுரோகிதனும் மகாபண்டிதனு மான ஆக்கியாழ்வானை வாதத்தில் வென்றவரும் மகா ஞானியுமான ஸ்ரீ ஆளவந்தார் திருவாய்மொழி காலட் சேபம் செய்துகொண்டிருந்த சமயம் *"ஒழிவில் கால மெல்லாம்" என்ற பாட்டுக்கு வியாக்கியானம் அருளிச் செய்து கொண்டிருந்தார். அந்தப் பாட்டில் "திருவேங் கடத்து எழில் கொள் சோதிக்கு வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என்ற பகுதிகளுக்கு ஆளவந்தார் விளக்கம் கூறியதும் பெரிய திருமலை நம்பி உளம் கரைந்தார். எழுந்து கைகட்டி வாய்புதைத்து நின்றார்.

"என்ன வேண்டும் நம்பி?" என ஸ்ரீ ஆளவந்தார் வினவ "அடியேன் திருமலைக்குச் சென்று திருவேங்கட முடை யானுக்குப் பணி செய்ய அருளவேணும்" என்றார் நம்பி.

ஸ்ரீ ஆளவந்தார் சிந்தித்தார். "நம்பிக்கு பகவத் சேவை யின் பொருள் மனத்தின் ஆழத்திலே புதைந்திருக்க வேணடும்" என்று தீர்மானித்தார். "சரி போய் வாரும்" என்று அனுமதியும் கொடுத்தார்.

அன்று திருமலை வந்த பெரிய திருமலை நம்பி திருவேங்கடமுடையானுக்கு வழுவிலா அடிமை செய்து வந்தார். அவருக்கு இரண்டு சகோதரிகள் உண்டு. ஒருத்தி காந்திமதி, கேசவ சோமயாஜியின் மனைவி. இன்னொருத்தி மழலை மங்கலம் கமலநயனபட்டரின் பார்யை த்யுதிமதி. இருவருக்கும் புத்திரப் பேறில்லாததைப் பற்றி வருந்தியி ருந்த பெரிய திருமலை நம்பி, கலி தீர்க்க வந்த கருணை வள்ளலாக காந்திமதிக்குப் புத்திர பாக்யம் ஏற்பட்டதைக்

* திருவாய்மொழி 3 - ம் பத்து 3 - வது பகுதி, முதல் பாட்டு.

கேட்டதால் பெருமகிழ்ச்சியடைந்து ஸ்ரீ பெரும்புதூருக்கு வந்தார்.

அங்கு வந்ததும் சகோதரிக்குப் பிறந்த தெய்வீகக் குழந்தையை உற்றுப் பார்த்துக்கொண்டு பரவசப்பட்டு நின்றார். "இந்தக் குழந்தை சாமான்யமான குழந்தையல்ல, ஒரு மகான் பிறந்திருக்கிறான். இளைய பெருமாளைப் போல கைங்கர்ய லக்ஷ்மி இவன் முகத்தில் ஜொலிக்கிறது" என்று எண்ணமிட்டார், அதன் விளைவாக குழந்தைக்கு லக்ஷ்மணன் என்று பெயரிட்டார். "இவன் ஸர்வலக்ஷண சம்பன்னன். சகல சாஸ்திரங்களையும் அதிகரிப்பான்" என்றும் ஆசீர்வதித்தார்.

பிறகு சோமயாஜி தமது புதல்வனுக்குக் காலா காலத்தில் அன்னப் பிராசனம் முதலியன செய்வித்து வித்தியாப்யாச வயதை அடைந்ததும் சௌளம் செய்வித்து உப நயனமும் நடத்தி வைத்தார். சர்வக்ரது தீக்ஷிதரே வேத வேதாந்தங்களிலே சிறந்த அறிவுடையவராகையால் அவரே இளையாழ்வார் என்கிற ராமானுஜனுக்குப் பாடங்களைச் சொல்லலானார்.

ஸ்ரீராமானுஜன் ஸ்ரீபெரும்பூதூரில் தமது இல்லத்தி லேயே தமது தகப்பனாரிடமே வேத வேதாந்தங்களை யெல்லாம் வாசித்தார். அபாரமான அமானுஷ்யமான அறிவின் விளைவாகப் பதினைந்து வயதுக்குள் வேத வேதாந்தங்களையெல்லாம் கற்றுணர்ந்த ஸ்ரீராமானுஜ னுக்குத் திருமணம் செய்துவைக்க விரும்பிய கேசவ சோமயாஜி தஞ்சமாம்பாள் என்ற பெண்ணை இளை யாழ்வாருக்கு வாழ்க்கைத் துணைவியாக்கினார். திரு மணம் நடந்தபோது இளையாழ்வாருக்கு வயது பதினாறு.

பதினாறு வயதில் கிருகஸ்தாசிரமத்தில் புகுந்த ஸ்ரீராமானுஜன் அவரது தந்தையும் குருவுமான கேசவ சோமயாஜியை இழந்தார். ஆகவே அடுத்த குருவைத்

தேடலானார். காஞ்சி மாநகருக்கு அடுத்த திருப்புட்குழியில் யாதவப் பிரகாசர் என்ற ஏகதண்டி சந்நியாசி ஒருவர் வேதாந்தங்களைச் சொல்லிக் கொடுப்பதாகக் கேட்டு அவரிடம் பாடம் கேட்கத் தீர்மானித்தார். அந்தத் தீர்மானம் ஸ்ரீராமாநுஜர் வாழ்க்கையில் முதல் திருப்பத்தை ஏற்படுத்தலாயிற்று. யாதவப் பிரகாசருக்கு சாஸ்திர ஞானம் ஏராளம். அவரிடம் ஒரு குறையும் உண்டு. சுய அபிப்ராயத்துக்கு எதிராக எதையும் அனுமதிக்கும் வழக்கம் கிடையாது, வாதத்தைவிட பிடிவாதத்தில் நம்பிக்கை உள்ளவர்.

யாதவப் பிரகாசர் முதலில் சங்கரரின் பக்தராயிருந்தார். பிறகு அதைவிட்டு விலகி வியாஸ சூத்ரத்துக்கு தாமே தனிப்பட்ட பாஷ்யம் எழுதினார். இப்பேர்ப்பட்ட குருவை நாடினார் ஸ்ரீராமானுஜர் பாடம் கேட்க. தென் துருவமும் வடதுருவமும் போலிருந்த குருவும் சீடனும் வெகு சீக்கிரம் மோதிக் கொண்டார்கள்.





# 3. குருவை மிஞ்சிய சீடன்

திருபுட்குழியிலே ஏகதண்டி சந்நியாசியும் குருவுமான யாதவப் பிரகாசரிடம் ஸ்ரீராமானுஜன் மற்ற சீடர்களுடன் வேதாந்தப் பாடங் கேட்டு வந்தகாலத்தில் அவருக்கு இன்னொரு துணையும் ஏற்பட்டது. பந்துவாய், பின்னொரு நாள் ஆபத்துக்கு உதவும் அருமை உறவினனாய், நண்பனாய் அவருடைய சிற்றன்னையின் புதல்வனான கோவிந்தனும் அங்கு பாடம் கேட்க வந்து சேர்ந்தார்.

கோவிந்தன் ஸ்ரீராமானுஜன் பிறந்து எட்டு ஆண்டுகள் கழித்து *அதாவது குரோதன வருஷம், தைமாதம் பௌர்ணமியும் சேர்ந்த புனர்வசு நட்சத்திரத்தில், மழலை மங்கலம் கமலநயனபட்டருக்கு அவரது மனைவியான த்யுதிமதி என்கிற பெரிய பிராட்டியாரிடத்தில் பிறந்தார்.

இந்த மகப்பேறு உண்டானதைக் கேட்ட பெரிய திருமலை நம்பி திருப்பதியிலிருந்து புறப்பட்டு வந்து அந்தக் குழந்தைக்குக் கோவிந்தன் என்று பெயரிட்டார். "இவன் பிற்காலத்தில் பெரிய மகானாக விளங்குவான். ஸத்தான ஆத்ம குணங்களை உடையவனாகவும், ஸகல

---

* *தென் கலை குரு பரம்பரை - 1880 வருஷப் பதிப்பு.*

வித்தைகளையும் கற்றுணர்ந்த அறிவாளியாகவும், வைதிக பக்ஷத்தில் அசங்காத நம்பிக்கையுடையவனாகவும் இருப்பான்" என்று ஆசீர்வதித்து கோவிந்தனுக்கும் ஜாதகர்மம் முதலானவற்றையும் செய்வித்தார்.

சிறுவயதுக்குள் ஸ்ரீராமனைப் போலவே தமது தந்தையாரிடத்தில் வேத சாஸ்திரங்களைக் கற்றுத் தெளிந்த கோவிந்தன், தனது ஒன்றுவிட்ட மூத்த சகோதரனான ஸ்ரீ ராமானுஜன் யாதவப் பிரகாசரிடத்தில் வேதாந்தம் வாசிக்கிறாரென்று கேள்விப்பட்டு, அந்த பாடசாலையில் தானும் படிக்கவெண்ணி யாதவப் பிரகாசரிடம் மாணாக்க ராய் அமர்ந்தார். ஸ்ரீராமானுஜனுடன் வேதாந்தம் படிக்கவும் தொடங்கினார். இப்படித் தனது தம்பியும் உடன் வாசிக்க வந்ததில். இளையாழ்வார் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். வேதாந்தப் பாடங்களைக் கேட்ட ஸ்ரீராமானுஜன் வெகு சீக்கிரம் எந்த மகிழ்ச்சிக்கும் மனித வாழ்க்கையில் ஓர் எல்லையுண்டு என்பதை உணர்ந்து கொண்டார். குருவிடம் பரமபக்தியுடன் பாடம் கேட்ட ஸ்ரீராமானுஜனின் குருபக்தியை உடைக்கவோ, அல்லது ஊழ்வினையின் திருவிளையாட்டாகவோ, குரு உபநிஷத் வாக்கியங்களுக்கு இஷ்டப்படி வியாக்கியானம் பண்ணத் தொடங்கினார். அந்த வியாக்கியானங்களில் ஸ்ரீராமானுஜ னுக்கும் யாதவப் பிரகாசருக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமை வரவர முற்றி, குருவைக் கொலைத் தொழிலுக் கும் துணியும்படிச் செய்வித்தது. ஸ்ரீராமானுஜனுடைய வியாக்கியானங்களையும் போக்கையும் வளரவிடுவது அத்வைத மதத்துக்குப் பேராபத்து என்ற முடிவுக்கு வந்தார் யாதவப் பிரகாசர். இந்த முடிவுக்கு அவர் வர வித்திட்டது தைத்திரீய உபநிஷத், பிரம்மானந்தவல்லி அனுவாகம்.

"ஸத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம" என்கிற உபநிஷத் வாக்கியத்துக்கு யாதவப் பிரகாசர் "கண்டத்வ முண்டத்வ பூர்ண ச்ருங்கத்வங்கள் ஒரு கோவ்யக்தியிலே கூடும்

போதிறே பிரம்மத்துக்கு இந்த விசேஷணம் கூடுவது" என்று வியாக்கியானம் சொன்னார். "பசு மாடு உடைந்த கொம்புடனும், கொம்பே இல்லாமலும், முழுக் கொம்பு களுடனும் இருக்கலாம். ஆகவே இப்படி மூன்று விதமாக தோற்றமளித்தாலும் பசு ஒன்றே என்பது போல, ஸத்யம் ஞானம் அனந்தம் என்ற மூன்று அடைமொழிகளும் பிரம்மம் ஒன்றையே குறிக்கும். மாறுபட்ட எந்த நிலையை யும் குறிக்காது" என்று அத்வைதமாக அர்த்தம் பண்ணி னார் யாதவப்பிரகாசர்.

இதைக் கேட்ட ஸ்ரீராமானுஜன் வகுப்பில் எழுந்து நின்றார்.

"என்ன ராமானுஜா! ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?" என்று குரு வினவினார்.

"சந்தேகம் ஏதுமில்லை, இந்த உபநிஷத் வாக்கியத் துக்குத் தாங்கள் சொன்ன பொருள் ஒவ்வாது. வேறு விதமாக வியாக்கியானம் சொல்ல வேண்டும்" என்றார் ஸ்ரீராமானுஜர்.

"உன் வியாக்யானத்தைக் கேட்போம் சொல்" என்று சினத்துடன் சொன்னார் யாதவப் பிரகாசர்.

ஸ்ரீராமானுஜர் பின்வருமாறு வியாக்கியானம் சொன்னார்:

"ஸத்யம் என்ற வாக்கியம் அவ்வப்பொழுது தற்காலிக மாக ஏற்படும் மாறுதல்களை (க்ஷணிகவ்யா வருத்தி) அகற்றுகிறது. ஞானம் என்ற வாக்கியம் அவன் குணத்திலே அசித் கலக்கவில்லை என்பதை நிரூபிக்கிறது. அனந்தம் என்ற வாக்கியம் அவன் குணங்களுக்கு எல்லை கட்டுவதை நிராகரிக்கிறது. அதாவது பிரம்மம் என்பது நித்யமாய், மற்ற எல்லாவற்றிலிருந்தும் மாறுபட்டு தனித்து நிற்கிறது. அதா வது, சேதநா சேதன விலக்ஷணமாய் நித்யமாயிருக்கும் பிரம்மம்."

இந்த வியாக்கியானத்தைக் கேட்ட குருவான யாதவப் பிரகாசர் ஸ்ரீராமானுஜனுக்குப் பதில் சொல்ல சிறிது நேரம் சிந்தித்தார். ஏதும் புத்திக்கு எட்டாது போகவே கோபம் மேலிட்டு "ஹூம்" என்று ஹூங்காரம் மட்டும் பண்ணி விட்டு வகுப்பைக் கலைத்து எழுந்து சென்று விட்டார்.

இந்த முதல் மோதல் மற்ற மோதல்களுக்கு இடங் கொடுக்கலாயிற்று. யாதவப் பிரகாசர் சொன்ன இடக்கான அர்த்தங்களுக்கெல்லாம் எதிரான பதில்களைச் சொல்ல லானார் ஸ்ரீராமானுஜர்.





# 4. இரண்டாவது மோதல்

அடுத்த சில தினங்கள் ஸ்ரீராமானுஜரின் சிறந்த குணங்களை எடுத்துக் காட்டின. குருவான யாதவப் பிரகா சருக்கு, தமது சீடன் தன்னை எதிர்த்து விட்டானே என்ற குரோத மனப்பான்மை உள்ளூர குமுறிக் கொண்டிருந் தாலும், ஸத்வகுணத்தின் இலக்கணமான ஸ்ரீ ராமானுஜன் தமக்கும் குருவுக்கும் உண்டான உபநிஷத் அர்த்த வேற்று மையை அந்த விநாடியே மறந்து குருவுக்குச் செய்ய வேண்டிய குற்றேவல்களைக் கண்ணும் கருத்துமாகச் செய்து வந்தார். ஆனால் குதர்க்க புத்தியுள்ள குரு மட்டும் சும்மாயிருக்கவில்லை. தமது உபநிஷத் ஞானத்தை மேலும் காட்டலானார்.

மற்றொரு நாள் ஸ்ரீராமானுஜன் குருவுக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டிருந்தார். குருவின் தலையில் தைலத்தை வைத்து அழுத்தி அழுத்தி இதமாக ஸ்ரீராமானுஜன் தேய்த்துக் கொண்டிருந்த சமயம் தர்க்க விசாரத்துக்கு ஏற்பட்டதல்லவென்றாலும், குரு சாந்தோக்ய உபநிஷத்தில் வரும் "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணி" (சாந்தோக்ய உபநிஷத், அத்யாயம் 1, பிரிவு VI, 6, 7) என்ற வாக்கியத்துக்குப் பொருள் சொல்லலானார். அதை விவரிக்கையில் எவ்வளவு விகாரமாகவும் விபரீதமாகவும் சொல்ல முடியுமோ அப்படிச் சொன்னார். கப்யாஸம் என் கிற சொல்லை கபி ஆஸம் என்று இரண்டாகப் பிரித்தார். கபி என்றால் குரங்கு, ஆஸம் என்றால் அதன் பின் பகுதி.

ஆகவே பகவானுடைய கமலக் கண்கள் குரங்கின் பின் பகுதியைப் போலச் சிவந்து இருந்தன என்று விபரீதமாக அர்த்தம் சொன்னார் யாதவப் பிரகாசர். இதைக் கேட்ட தால் உள்ளம் கொதித்த ஸ்ரீராமானுஜர் கண்களிலிருந்து நீர் பெருக அவற்றில் சில துளிகள் சுடச்சுட யாதவப் பிரகாசர் தொடைகளிலும் விழுந்தன. யாதவப் பிரகாசர் அண் ணாந்து பார்த்து, அப்பொழுது அவர் தலைக்கு எண்ணெய் வைத்துக் கொண்டிருந்த ராமானுஜனை நோக்கி, "ராமானுஜா! உனக்கு என்ன வந்துவிட்டது? எதற்காக அழுகிறாய்?" என்று வினவினார்.

ஸ்ரீராமானுஜர் எண்ணெய் தேய்க்கும் பணிவிடையை நிறுத்தாமலேயே பதில் சொன்னார், "உபநிஷத்துக்குத் தாங்கள் சொன்ன பொருள் கேட்டேன், என்னால் தாங்க முடியவில்லை. அதனால் கண்ணீர் விட்டேன்" என்று.

யாதவப் பிரகாசர் மிகுந்த இகழ்ச்சியுடன் சீடனைப் பார்த்தார். "அப்படியானால் உன் மூளையில் வேறு அர்த்தம் உதயமாயிருக்கிறது போலிருக்கிறது?" என்று விஷமமாகக் கேட்டார்.

"ஆம், ஸ்வாமி" என்று அடக்கத்துடன் பதில் சொன்னார் ஸ்ரீராமானுஜர்.

"சொல். உனது பொருளையும் கேட்போம்" என்றார் யாதவப் பிரகாசர்.

ஸ்ரீராமானுஜர் சொன்னார். "கப்யாஸம் என்ற வாக்கி யத்தை கபி ஆஸம் என்று பிரிக்கக் கூடாது. கம் பிபதி இதி கபி:, அதாவது கபி: என்றால் சூரியன். அந்த சூர்ய னின் கதிர்களால் ஆஸம் மலரச் செய்யப்பட்ட புண்டரீகம் தாமரை மலர், அந்த மலரைப் போன்ற கண்களை உடைய வன். "கப்யாஸம் புண்டரீகாக்ஷம்" என்பதற்கு இந்த அர்த்தமே பொருந்தும். இப்படித்தான் ஆன்றோர்கள் பொருள் கொண்டிருக்கிறார்கள். சூர்ய மண்டலத்தின்

மத்தியிலே சுவர்ணமாய் பொன்னே போல் ஜொலிக்கும் பகவானுடைய கண்கள் அந்த சூரியனால் மலரும் தாமரை யின் இதழ்களைப் போல் பிரகாசிக்கின்றன என்று பெரி யோர்களெல்லாம் பொருள் கொண்டிருக்கிறார்கள். அதை விட்டு பரம்பொருளின் கண்களுக்கு குரங்கின் பின் பகுதியை உபமானமாகச் சொல்வது அபசாரம், அபார்த்தம், தேவரீர் சொன்னதைக் கேட்க என் மனம் தாளவில்லை."

எந்த சாஸ்திர வாக்கியமும் பலவிதமான பொருள் களுக்கு இடங்கொடுக்குமென்றாலும், அவற்றுக்கு உசித மான பொருள் கொள்வதுதான் மரபு. அதனால் சாஸ்திரங் களை வாசிக்கும் சரியான குருவின் மூலந்தான் வாசிக்க வேண்டும் என்ற நியதி இருந்து வருகிறது. ஆனால் குரு வக்ரமானால் அவரிடம் படிக்கும் சிஷ்யன் இன்னும் வக்ரமாவான். அதிலிருந்து மீள்வதற்கு திராணியும் உசித மற்ற பொருள்களை நிராகரிக்கும் திறனும் கூரிய அறிவும் வேண்டும். அப்பேர்ப்பட்ட மகான்கள் அவசியமான போது அவதரிக்கிறார்கள். அப்படி அவதரித்த ஸ்ரீ ராமானுஜன் குரு வின் விகாரமான விமர்சனத்துக்கு மறுப்பு சொன்னவுடன் யாதவப் பிரகாசர் கோபத்திற்கு வசப் பட்டார்.

கப்யாஸம் புண்டரீகாக்ஷம் என்ற உபநிஷத் வாக்கியத் திற்குப் பலர் பலவிதமாக அர்த்தம் எழுதியிருக்கிறார்கள். பெரியவர்களுடைய சித்தங்களில் இது பெரிய விவ காரத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இதற்கு ஆறுவித பொருள்கள் எழுதப்பட்டிருப்பதாகவும், அவைகளில் பின் மூன்றே அங்கீகரிக்கத் தக்கனவென்றும் சொல்லப்படுகிறது. கப்யாஸம் என்ற வார்த்தைக்கு குரங்கின் பின் பகுதி என்று ஸ்ரீ சங்கராச்சாரியரே பொருள் கொண்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. "ஸ்ரீ சங்கராச்சாரியார் குரங்கின் பின் பகுதியை தாமரைக்கு உவமையாகச் சொன்னாரே தவிர பகவானுடைய கண்களுக்கு உவமையாகச் சொல்லவில்லை. ஆகையால் அவரைக் குறை சொல்வது தவறு" என்று துகா

ராம் தாத்யா என்பவர் தமது நூலில் விளக்கியிருக்கிறார். ஸ்ரீ ராமானுஜர் கப்யாஸம் என்பதற்கு வியாக்கியானம் எழுதுகையில் "கம்பீர அம்பஸ்ஸமுத்பூத ஸும்ருஷ்ட நாள ரவிகர விகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண:" - அதாவது ஆழ்ந்த நீரில் வாழ்வதும், நாளம் என்கிற மிருதுவான தண்டோடு கூடினதும் கதிரவன் கதிர்களால் மலர்வதுமான தாமரையின் இதழ்கள் போல அழகிய கண்களை உடையவன்" என்று விவரிக்கிறார்.

இந்த ஒரு உபநிஷத்துக்கு அர்த்தம் விளைவித்த சர்ச்சை படாதபாடு பட்டிருக்கிறது. இதைப் பற்றி திரமிட பாஷ்யகாரர், ஸ்ரீ வேதாந்த தேசிகர், ஆகிய பலபேருடைய கருத்துக்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. இந்த தர்க்கங் களை தர்க்க சாஸ்திரிகளுக்கு விட்டு, சுருக்கமாக அவசிய மான விஷயங்களுக்கு வருவோம்.

"கப்யாஸம்" - என்பதை கபி ஆஸம் என்று பிரித்து குரங்கின் ஆசனமென்றும், அதைப் போலிருக்கிறது பகவானுடைய தாமரைக் கண்கள் என்றும் அர்த்தம் செய்தார் யாதவப் பிரகாசர். அதை மறுத்து, கபி என்ற சூரியனுடைய கிரணங்களுக்கு ஆஸம் இருப்பிடமான, அவற்றால் மலர்கின்ற புண்டரீகாக்ஷம் தாமரை இதழ் களைப் போலிருக்கின்றன பகவானுடைய கண்கள் என்றார் ஸ்ரீ ராமானுஜர். இதுதான் விஷயம்.

தன்னை இப்படி இரண்டாம் முறை பேசியதால் வெகுண்ட யாதவப் பிரகாசர் "என்னைவிட உனக்கு சாஸ்திரார்த்தம் அதிகமாகத் தெரிந்திருப்பதால் நீ, இனி இங்கு வரவேண்டாம். என் கண்முன் நில்லாதே போ" என்று விரட்டினார். அதுதான் சிறந்த வழி என்று நினைத்த ஸ்ரீ ராமானுஜனும் அன்று முதல் அந்தப் பள்ளிக்குப் போவதை நிறுத்திக்கொண்டார். ஆனால் யாதவப் பிரகாசர் அத்துடன் விடவில்லை. ஸ்ரீராமானுஜனைத் தீர்த்துக் கட்ட ஒரு திட்டமும் தீட்டலானார்.



# 5. குருவின் கொலை முயற்சி

ஸ்ரீராமானுஜர் பள்ளியிலிருந்து அகன்றாரேயொழிய யாதவப் பிரகாசரின் சிந்தையிலிருந்து அகலவில்லை. இரு முறை ஸ்ரீராமானுஜரால் எதிர்க்கப்பட்டு சாஸ்திர விளக்கம் செய்யும் வழியில் தோற்றுப்போன யாதவப் பிரகாசர் "இந்த இராமானுஜனை இப்படியே வளரவிட்டால் அத்வைத சித்தாந்தம் அழிந்துவிடும்" என்று எண்ணினார். அது அழியாதிருக்க ஸ்ரீராமானுஜரை அழித்து விடுவதே முறை என்று ஒரு முடிவுக்கு வந்தார். ஆரம்பத்திலேயே தனது முடிவைச் சொல்லாமல் தனக்கு இஷ்டமான சில சீடர்களுடன் கலந்து ஆலோசிக்கும் வகையில் பிரச்னையைக் கிளப்பினார். "ராமானுஜன் போகிறபடி விட்டால் அத்வைதம் அழிந்துவிடும். நாம் சொல்லும் சாஸ்திர அர்த்தங்களை நீங்கள் அனைவரும் ஒப்புக் கொண்டிருக்க, அவன் மட்டும் எதிர்த்து வாதாடுகிறான். அவனை அடக்க என்ன செய்யலாம்?" என்று மாணவர்களை வினவினார். ஸ்ரீராமானுஜரை அடக்கவும், அழிக்கவும் மாணவர்கள் குருவுக்கு அனுகூலமான பல யோசனைகளைச் சொன்னார்கள். எல்லா யோசனைகளிலும் வன்முறை அடங்கியிருப்பதைக் கண்ட யாதவப் பிரகாசர் "இதில் எதைச் செய்தாலும் பாவம் சம்பவிக்கும். நமக்குப் பாவம் கிட்டா

மல் ராமானுஜனுக்கும் நல்ல கதி கிடைக்க வழி செய்ய வேண்டும்" என்று சூசகமாகத் தமது ஏற்பாட்டை வெளி யிட்டார்.

"அந்த வழியை அருளிச் செய்யவேண்டும்" என்று மாணவர்கள் கேட்டார்கள்.

யாதவப்பிரகாசர் சிந்தித்துவிட்டு, "நாம் காசி யாத்திரை போனாலென்ன?" என்று வினவினார்.

இவருடைய இஷ்ட சீடர்கள், "போகலாம். இப் பொழுது எதற்கு?" என்று கேட்டார்கள்.

"அங்கு கங்கையில் மணிகர்ணிகா கட்டத்தில் மூழ்கி உயிரை விடுபவர்களுக்கு மோட்சம் சித்திக்கும் என்று சொல்லப்படுகிறது..." என்று இழுத்த யாதவப் பிரகாசர் "அங்கு ஒருவேளை தற்செயலாக ராமானுஜன் மூழ்கி விட்டால் அவனுக்கும் மோட்சம், நமக்கும் பாவமில்லை. அவனை நல்ல கதிக்கு அனுப்பிய புண்ணியமும் நமக்குக் கிடைக்கும்" என்று மெதுவாகக் கூறினார்.

குருவின் கொலை யோசனையைப் புரிந்து கொண்ட அந்தக் குரூர மாணவர்களும் அதுவே சிறந்த வழி என்று தாளம் போட்டார்கள். ஸ்ரீராமானுஜரை மீண்டும் பள்ளிக்கு அழைத்து வரும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார்கள். மறுநாளே ஸ்ரீராமானுஜரை நாடி காஞ்சிக்குச் சென்றார்கள். தந்தை இறந்த பின்பு தனது தாயுடனும் மனைவி தஞ்சம்மாளுடனும் காஞ்சிக்கு வந்து குடியேறி விட்ட ஸ்ரீராமானுஜர் தமது சகமாணவர்களை அன்புடன் வரவேற்று, வந்த காரியம் யாதென்று வின வினார்.

"ராமானுஜா! நீ பள்ளியை விட்டு வந்த பின்பு பள்ளி பிரகாசமாக இல்லை. அந்தக் கிழவரை தட்டிக் கேட்க அங்கு யாருமில்லை. நீ சென்ற பிறகு நாங்களும் குருவுடன்

வாதித்து உன் சாஸ்திர விளக்கத்தில் எத்தனை உண்மை யிருக்கிறதென்று எடுத்துக் காட்டினோம். முதலில் அந்தக் கிழம் வழக்கம்போல் உறுமிற்று. பிறகு வழிக்கு வந்திருக் கிறது. தான் உனக்கு இழைத்த அநீதியை நினைத்து வருந்து கிறது. ஆனால் பிகுவின் காரணமாக அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. உன்னை மீண்டும் பள்ளிக்கு அழைத்து வரச்சொல்லி குரு கட்டளையிட்டிருக்கிறார். நீ அவசியம் வரவேண்டும்" என்று சீடர்கள் மன்றாடினர்.

எவரிடமும் கருணை காட்டும் சுபாவமுள்ள ஸ்ரீரா மானுஜர் பள்ளிக்குத் திரும்ப ஒப்புக் கொண்டார். மறு நாளே திருப்புட்குழிக்குச் சென்று குருவின் பாதங்களில் தெண்டனிட்டு நின்றார். புலி ஆட்டைப் பார்ப்பதுபோல் யாதவப் பிரகாசர் ஸ்ரீராமானுஜரை அன்புடன் பார்த்தார். "ராமானுஜா! நீ நான் சொன்னதை அப்படியே எடுத்துக் கொண்டு பள்ளியை விட்டு விலகிப் போகலாமா? ஒரு கிழ வனின் கோபத்திற்கு சலுகைகள் கொடுக்க வேண்டாமா?" என்று அன்புடன் பேசவும் செய்தார்.

நாட்கள் சில சென்றன. பள்ளியில் எந்தவித வித்தி யாசமோ விகாரமோ விவாதமோ இல்லாமல் வகுப்புகள் நடந்து கொண்டிருந்தன. ஒரு நாள் யாதவப் பிரகாசர் "மாணவர்களே; நாம் கோஷ்டியாக காசி யாத்திரை செய்து புனித கங்கையில் நீராடிவிட்டு வந்தாலென்ன?" என்று வினவினார்.

"குருவின் சித்தம்" என்று அனுகூல சீடர்கள் ஒத்துப் பாடினார்கள்.

"எனக்கும் வயதாகிறது. ஒரு வேளை கங்கைக் கரை யில் பிராணன் போவதாயிருந்தாலும் அது எனக்கு மகிழ்ச்சியாயிருக்கும்" என்று யாதவப் பிரகாசர் தமது விரக்தியையும் காட்டினார்.

ஆகவே காசியாத்திரைக்கு ஏற்பாடுகள் நடக்கலாயின. நல்லதொரு நாளில் யாதவப் பிரகாசர் தமது சீடர்களுடன் காசியாத்திரை புறப்பட்டார். குருவின் குரூர சீடர்கள் யாத்திரை நாட்களில் ஸ்ரீராமானுஜரும் அவரது சிறிய தாயார் மகன் கோவிந்தனும் கூடியவரை தனித்திருக்கா மலும் தனித்துப் பேசாமலும் பார்த்துக்கொண்டார்கள்.

பயணம் கூடியவரை துரிதமாகவே நடந்தது. புறப் பட்ட சில நாட்களிலேயே யாத்திரைக் கோஷ்டி விந்திய மலைச் சாரலுக்கு வந்து சேர்ந்தது. விந்தியமலைக் காடுகளின் செழிப்பையும் அருவிகளையும் அழகையும் பார்த்துக் கொண்டே குருவும் மாணவர்களும் பயணம் செய்தனர். ஒரு நாளிரவு பயணத்தைச் சற்று நிறுத்தி இளைப்பாறத் தீர்மானித்த குருநாதர் விந்திய மலைக் காடுகளின் அடர்ந்த பகுதியில் யாத்திரை முகாமை அமைத்தார். அன்றிரவு மாணவர்கள் அனைவரும் நன்றாக நித்திரை செய்தனர். பயணத்தின் காரணத்தை உணர்ந்தி ருந்த கோவிந்தன் மட்டும் கவலையால் கண் மூடவில்லை. இரவு நன்றாக முற்றிய சமயத்தில் மெள்ள ஸ்ரீராமானுஜர் தோள்மீது கையை வைத்து அசக்கினான். விழித்த ஸ்ரீராமானுஜரைப் பேச வேண்டாமென்று வாய்பொத்தி தன்னுடன் வரும்படி சைகை செய்தான். இருவரும் காட்டின் ஒரு பகுதியிலிருந்த பள்ளத்துக்கு வந்ததும் கோவிந்தன் மெதுவாகச் சொன்னான். "அண்ணா! இது யாத்திரையல்ல. உன்னைக் கங்கையில் மூழ்கடித்துக் கொல்ல செய்யப்படும் சதி. ஆகவே நீ தப்பி ஓடிவிடு. நான் திரும்பிப் போய் நீ தப்பியதை மறைக்க ஏதாவது சொல்லி விடுகிறேன். பெருமாள் உன்னைக் காப்பாற்றட்டும்" என்று, அண்ணனைத் தழுவிப் பிரிய மனமில்லாமல் பிரிந்தான்.

விந்தியமலைக்காட்டில் தனித்து விடப்பட்ட ஸ்ரீராமானுஜர் சிறிது நேரம் நின்ற நிலையில் சூழ்

நிலையைக் கவனித்தார். எங்கும் அடர்ந்த காடு. எங்கும் இருள். வழி தெரியவில்லை. கண்ணுக்கு ஒரு ஒற்றையடிப் பாதை மட்டும் தெரிந்தது. அதன் வழியே நடந்து சென்றார். மலைக்கற்கள் கால்களைக் குத்தியதால் பாதங்கள் ஆங்காங்கு காயப்பட்டு ரத்தம் பீறிட்டது. போகுமிடம் தெரியாமல் நடந்தார் ஸ்ரீராமாநுஜர். கால்களின் புண்களை விட அவரது மனப்புண் அதிகமா யிருந்தது. இப்படி நடந்து நடந்து பசியாலும் பட்டினி யாலும் கண்கள் பஞ்சடைய ஒரு மரத்தின் அடிக்கு வந்து விழுந்தார். "இனி என் சக்தியால் ஆவது ஏதுமில்லை. என்னைக் கருவில் காத்த நீதான் காப்பாற்ற வேண்டும். பகவானே! நீயே சரண்" என்று சரணாகதிக் கூவலுடன் மூர்ச்சையடைந்தார்.

அவர் விழித்துக்கொண்டபோது ஒரு வேடனும் அவன் மனைவியும் அவர்மீது குனிந்து அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த இருவர் கண்களிலும் கருணை பிரவகித்துக் கொண்டிருந்தது. அவர்களைக் கண்டதும் எழுந்து உட்கார முயன்று மரத்தில் சாய்ந்து கொண்ட ஸ்ரீராமானுஜர், "நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று தீனமான குரலில் வினவினார்.

"நாங்கள் சித்தாசிரமத்திலிருந்து வருகிறோம். சத்திய விரத க்ஷேத்திரத்துக்குப் போகிறோம்" என்று வேடன் பதில் சொன்னான்.

வேடன் பதிலைக் கேட்டதும் ஆவலால் துள்ளி யெழுந்த ஸ்ரீராமானுஜர் அவர்கள் வருகையால், சமீபத் தால், தமது களைப்பு அடியோடு அகன்று விட்டதையும், புத்துயிர் உடலில் ஓடுவதையும் உணர்ந்தார். "நானும் உங்களுடன் வருகிறேனே. இந்தக் காட்டைவிட்டு வெளியே செல்ல வழி தெரியவில்லை. என்னையும் அழைத்துப் போகிறீர்களா?" என்று மன்றாடினார், அந்த வேடத் தம்பதிகளிடம்.

"நன்றாக வாருங்கள்" என்ற வேடன் தனது பத்தினியுடன் முன்னே நடக்கலானான். அந்த வேட்டுவத் தம்பதிகளுக்குப் பின்னால் ஸ்ரீராமானுஜர் வெகுவேகமாக நடந்தார். அன்றிரவு மூவரும் ஒரு பெரிய மரத்தடியில் தங்கினர். அன்று மூவரும் பட்டினியும் கிடந்தனர். வேட்டுவச்சி மட்டும் தாகத்தால் தவித்தாள். "பெண்ணே! சற்றுப் பொறுத்திரு. இங்கு எங்கோ ஒரு கிணறு இருக்க வேண்டும்; அமுதம் போல் தித்திக்கும் நீர் அதில் இருந்ததாக நினைப்பிருக்கிறது எனக்கு. விடிந்ததும் அதிலிருந்து நீர் கொணர்ந்து தருகிறேன்" என்றான் வேடன்.

"நமக்கு உதவி செய்த இவர்களுக்கு நீர் கொடுக்கவும் சக்தியற்றவனாயிருக்கிறேனே" என்று வியாகூலப்பட்ட ஸ்ரீராமானுஜர் அலுப்பு மிகுதியால் கண்களை மூடி உறக்கத்தின் வசப்பட்டார்.

அவர் கண் விழித்தபோது வேடன் தூர இருந்த ஒரு கிணற்றைக் காட்டி "அதிலிருந்து உமது கையால் சிறிது நீர் அள்ளிவாரும். நம்மிடம் பாத்திரம் ஏதுமில்லை" என்றான். ஸ்ரீராமானுஜர் கிணற்றை நோக்கி விரைந்து தமது திருக்கைகளில் கிணற்று நீரை மொண்டு மும்முறை கொண்டு வந்து வேட்டுவத் தம்பதிகளுக்குக் கொடுத்தார். நான்காம் முறை வந்திருந்தபோது அந்த இருவரையும் காணவில்லை. கையில் நீரை ஏந்தியவாறே கண்களை உயர்த்தினார். தூரத்தே புண்யகோடி விமானம் காலை வெளியில் பளபளத்தது.





# 6. காஞ்சி வந்தார்! காஞ்சன முகம் கண்டார்

கைகளில் கிணற்று நீரை ஏந்தி, வேட்டுவத் தம்பதி களைக் காணாததால் சித்தம் வருந்தி, தூரத்தே தெரிந்த புண்யகோடி விமானத்தைக் கண்டும் அது யாதென்று புரியாததால் மீண்டும் கிணற்றண்டை வந்த ஸ்ரீராமானுஜர், அங்கு நீர் மொண்டு செல்லக் கூடியிருந்த சிலரை நோக்கி, “ஐயா! நான் ஒரு யாத்திரிகன். காட்டிலிருந்து வழி தவறி வந்து விட்டேன். இது எந்த ஊர்? நான் எங்கிருக்கிறேன்?” என்று கேட்டார்.

கிணற்றில் நீர் எடுக்க வந்தவர்கள் அவரை பரிதாபத் துடன் பார்த்தார்கள். “சுவாமி! உம்மைப் பார்த்தால் இந்தப் பக்கத்தை சேர்ந்தவராகத் தோன்றுகிறது. அப்படி யிருக்க இந்த ஊர் ஏதேன்று கேட்கிறீரே. அதோ தெரியும் புண்யகோடி விமானத்தைப் பார்த்தும் இந்த ஊர் ஏதென்று தெரியவில்லையா?” என்று வினவினார்கள்.

இதைக் கேட்ட ஸ்ரீராமானுஜர் சில விநாடிகள் பிர மிப்பை அடைந்தார். மீண்டும் புண்யகோடி விமானத்தை ஏறிட்டு நோக்கினார். அதன் ஜாஜ்வல்ய ஒளி ஞான ஒளியாக அவர் மன இருட்டைக் கிழித்துவிடவே “இது தான் காஞ்சி மாநகர். வரதராஜன் உறையும் புண்ய பூமி.

இது தெரியவில்லையே எனக்கு!" என்று அங்கலாய்த்தார். பிறகு மாயமாய் மறைந்துவிட்ட வேட்டுவத் தம்பதிகளை நினைத்து, "மாயனே! இந்த ஏழையிடமும் உன் மாயத்தைக் காட்ட வேண்டுமா! எனக்காக நீயும் பிராட்டியும் வேட்டுவ வேடம் போட்டு என்னைக் காப்பாற்ற நான் தவம் ஏதும் செய்யவில்லையே. உன் கருணைக்கு எல்லையே இல்லையா! எத்திறம் இது!" என்று உள்ளுக்குள்ளேயே மாய்ந்து போனார், உவகை பூத்தார், மெய் மறந்து அந்த தெய்வத் தம்பதிகளை எண்ணி நின்றார்.

அந்த அதிர்ச்சி தெளிந்ததும், "என் கையால் நீர் அருந்த நான் என்ன பாக்கியம் செய்தேன்! ஆனால் இதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? வேட்டுவச்சியான சபரியின் கையால் பழம் அருந்தினாய். அந்த தாகம் தீர வேட்டுவ வேஷம் போட்டு என் கையால் நீர் அருந்த வந்தாய். பிரபு! உன் லீலையை யார் அறிவார்?" என்று வியந்தார். "நீ விரும்பி அருந்திய இந்த சாலைக் கிணற்று தீர்த்தத்தை உனது திருமஞ்சனத்துக்குப் பிரதி தினம் கொண்டு வருகிறேன்" என்று உறுதி பூண்டவராய் மெள்ள தமது இல்லத்தை நோக்கி நடந்தார்.

கூட்டத்தோடு சென்ற தன்னந்தனியாய் திரும்பி வந்த தனது மகனை நோக்கிய ஸ்ரீராமானுஜரின் தாயார், "குழந்தாய்! அதற்குள் காசியாத்திரை முடிந்து விட்டதா?" என்று கேட்க, "இல்லை தாயே" என்றார் ஸ்ரீராமானுஜர்.

"பாதியில் திரும்பிவிட்டாயா?" என்று தாயார் விசாரித்தாள்.

"ஆம்."

"ஏன்?"

"அவன் திருவுள்ளம்" என்று கூறிய ஸ்ரீராமானுஜர் மேலே நோக்கினார். தாயார் மேலும் கேட்க, மெள்ள மெள்ள நடந்ததை விவரித்தார்.

மகன் விவரித்ததைக் கேட்ட அந்த புண்யவதி வரதனை மனமாற வாழ்த்தினாள். "அடுத்து நீ எதைச் செய்தாலும் திருக்கச்சி நம்பியைக் கேட்டுச் செய். அவர் சபரியின் அம்சம். வரதராஜப் பெருமானுக்கு அத்யந்த மானவர்" என்று மகனுக்குச் சொன்னாள்.

தாயின் கட்டளைப்படி அன்றே திருக்கச்சி நம்பியை சந்தித்து விவரங்களைச் சொன்னார் ஸ்ரீராமானுஜர். திருக்கச்சி நம்பி, வரதன் திருவருளை நினைத்து மெய்யெல்லாம் புல்லரிக்க, "நீ திருமஞ்சன கைங்கர்யத்தில் ஈடுபடு. அதுவே அவன் திருவுள்ளம்" என்றார். அவரது கட்டளையும் தனது முடிவும் ஒன்றாயிருக்கவே அன்று முதல் சாலைக் கிணற்றிலிருந்து பளபளவென்று துலக்கிய திருக்குடத்தில் திருநீர் மொண்டு தீர்த்த கைங்கர்யம் செய்யத் தொடங்கினார் ஸ்ரீராமானுஜர். நீர்மையின் இருப்பிடமான வரதப் பெருமானுக்கு, இப்படி கைங்கர்யத்தில் திளைத்த ஸ்ரீராமானுஜர் கங்கா தீர்த்தப் பிராப்தியை விட அதிகமான கைங்கர்ய பிராப்தியால் மனம் குளிர்ந்திருந்தார்.

இப்படி காஞ்சியில் வேட்டுவத் தம்பதிகள் விந்தையை விளைவித்திருக்க, காசியில் வேறொரு விதமான பிராப்தியில் அகப்பட்டுக்கொண்டான் ஸ்ரீராமானுஜரின் சிறிய தாயார் மகனான கோவிந்தன். விந்திய மலைக்காட்டில் தனித்துத் திரும்பிய கோவிந்தனைக் கண்ட யாதவப் பிரகாசர் "ராமானுஜன் எங்கே?" என்று வினவினார். "எனக்குத் தெரியாது. நான் பார்க்கவில்லையே" என்று கோவிந்தன் பதில் சொல்ல, மற்ற சிஷ்யர்களைவிட்டு ஸ்ரீராமானுஜரைத் தேடச் சொன்னார். அப்படியும் ஸ்ரீராமானுஜர் கிடைக்காது போகவே, "ஐயோ! இவன் எங்கு போனானோ திக்குத் தெரியாத இந்த அடவியில்? எந்த துஷ்ட மிருகத்துக்கு இரையானானோ?" என்று போலி துயரத்தைக் காட்டிய யாதவப் பிரகாசர் மேலும்

யாத்திரையைத் தொடர்ந்து கங்காதீரத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கு தங்கி சீடர்களுடன் நீராடிய ஒரு நாள் கோவிந்தன் கையில் கங்காப் பிரவாகம் ஒரு சிவ லிங்கத்தைக் கொணர்ந்து சேர்க்க, அதை யாதவப் பிரகாசரிடம் காட்டினான் கோவிந்தன்.

யாதவப் பிரகாசர் சீடன் உள்ளங்கையிலிருந்த சிவ லிங்கத்தைக் கண்டு உவகை பூத்தார். "அப்பனே! நீ மகா பாக்யவான். சாக்ஷாத் பரமேசுவரன் அவனாக வந்து உன்னை அடைந்தான். இனி உலகம் உன்னை 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார் என்று புகழும்' என்று பாராட்டினார். அத்துடன் கங்கா யாத்திரையை முடித்துக்கொண்டு காஞ்சி நோக்கிக் கிளம்பினார். திரும்புகையில் ஜகந்நாதம், அஹோபிலம் வழியாகப் பயணம் செய்தார். இதற்கிடையே யாத்திரையின் போது ஓரிரவில், திரிபுரமெரித்த பசுபதி, கோவிந்தனைத் தனக்கருகில் சில நாட்கள் வைத்திருக்க திருவுள்ளம் பற்றி சொப்பனத்தில் வந்து திருக்காளத்திக்கு வந்து சேருமாறு பணிக்க, அந்த சொப்பனத்தைக் கோவிந்தன் குருவிடம் சொன்னான். யாதவப் பிரகாசர் புளகாங்கிதமெய்தினார். அதே சமயத்தில் தகுந்த மரியாதைகளுடன் கோவிந்தனை அழைத்து வர காளஹஸ்தி கோவிலின் நிர்வாகிகளுக்கும் சொப்பனத்தில் உத்தரவாகவே, அவர்களும் வந்து கோவிந்தன் திருவடி பணிந்து கோவில்களின் நிர்வாகம் அனைத்தையும் கோவிந்தனிடம் அர்ப்பணித்தனர். கோவிந்தனும் கங்கையில் கிடைத்த லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து உள்ளங்கை கொணர்ந்த நாயனாராகத் திருக்காளத்திலேயே தங்கிவிட்டார்.

அவரை அங்கு விட்டுவிட்டு மற்ற சீடர்களுடன் காஞ்சி மாநகர் திரும்பிய யாதவப் பிரகாசர் காஞ்சியின் சாலையில் வந்துகொண்டிருந்த சமயத்தில் திடீரென அதிர்ச்சியுற்று நின்றார் சில விநாடிகள். மற்ற சீடர்கள்

அவர் அதிர்ச்சிக்குக் காரணம் புரியாததால் அவர் கண்கள் சென்ற திக்கை நோக்க, அவர்கள் கண்களிலும் மிதமிஞ்சிய பிரமிப்பு விரிந்தது. அவர்களுக்கு எதிரே சாலைக் கிணற்றில் நீர் மொள்ள செவ்வனே துலக்கிய குடம் காலை வெயிலில் பளபளக்க, அந்தப் பளபளப்பை விட அதிகமாக முகத்தில் கைங்கர்ய ஜோதி வீச ஸ்ரீராமானுஜர் வந்து கொண்டிருந்தார். தாம் காண்பது கனவல்ல என்பதை நிர்ணயித்துக் கொள்ள யாதவப் பிரகாசர் ஒரு முறை கண்களைக் கசக்கியும் விட்டுக் கொண்டார். கசங்காத அன்று மலர்ந்த தாமரை போலும் காஞ்சனத்தைப் போலும் பளபளத்த வதனத்துடனும், விஸ்மிதத்துடன் கூடிய செவ்விய உதடுகளுடனும் ஸ்ரீராமானுஜர் தமது குருவை அணுகி வந்தார்.





# 7. கலந்த கண்கள்

அதிர்ச்சி என்ற சொல்லுக்குப் பொருள் ஒன்று உண்டென்றால், அதற்கு இலக்கணமாக அன்று அமைந்தது ஸ்ரீராமானுஜரை எதிரே சந்தித்த யாதவப் பிரகாசர் முகம். பிரமிப்பும், விவரம் புரியாத பல உணர்ச்சிகளும் யாதவப் பிரகாசரின் முகத்தில் மாறி மாறி பளிச்சிட்டன. பரிசுத் தத்தை இழந்து கிடந்த அவர் மனமும் திக்குதிக்கென்று அடித்துக்கொண்டது. தாம் கொலை செய்ய முயன்ற சீடன் விந்தியமலைக் காட்டில் துஷ்டமிருகங்களுக்கு இரையா யிருப்பான் என மனப்பால் குடித்த தனது எண்ணத்தை திடீரென்று உடைத்துவிட்ட ராமானுஜன், தன்னை நோக்கி வந்ததும், செய்வது இன்னதென்று அறி யாமல் பதை பதைத்த யாதவப் பிரகாசர், "ராமானுஜா!" என்று கூவி சீடனை அணைத்துக் கொண்டார். "அப்பா ராமானுஜா! உன்னைக் காட்டில் காணவில்லையென்றதும் நீ என்ன ஆனாயோ, எந்த துஷ்டமிருகம் உன்னை அடித்துப் போட்டதோ என்று பதைத்தேன். உன்னைப் பார்த்ததும் அந்த மனக்கிலேசம் அகன்றது. நீ எப்படித் தப்பினாய்? எப்படி இங்கு வந்தாய்?" என்று கேள்விகளைச் சரமாரியாக வீசினார்.

ஸ்ரீராமானுஜர் குருவின் ஆலிங்கனத்திலிருந்து விலகி நின்றார். "குரு அறியாதது எதுவுமில்லை. தங்கள் ஆசி பலன் என்னைக் காப்பாற்றியது. வழி தவறி காட்டில் அலைந்தேன். வழி தெரியாதவர்களுக்கு வழிகாட்டுபவர் களும் தவறிய வழியில் செல்பவர்களைத் தடுத்து ஆட் கொள்ளும் கருணை வள்ளல்களுமான எம்பெருமானும் பிராட்டியும் வேட்டுவ வேடத்தில் வந்து என்னை இங்கு அழைத்து வந்தார்கள்" என்று நடந்த விருத்தாந்தத்தைச் சுருக்கமாகச் சொன்னார் ஸ்ரீராமாநுஜர்.

இதைக் கேட்ட யாதவப் பிரகாசரின் பிரமிப்பு உச்ச நிலையை அடைந்தது. ஸ்ரீராமானுஜரை மீண்டும் உற்று நோக்கினார். ஸ்ரீராமாநுஜரின் கருணைக் கண்கள் தமது ஆத்மாவையே அலசுவதுபோல் பார்ப்பதைக் கண்டார். "ராமானுஜன் சாமான்ய புருஷனல்ல. இவனிடம் ஏதோ மகத்தான சக்தியிருக்கிறது. இவனிடம் விளையாடுவதும் ஆபத்து" என்று முடிவுக்கு வந்தார். ஆகவே, "ராமானுஜா! ஏதோ உலகம் செய்த புண்யம் நீ தப்பி வந்தாய். வழக்கம் போல் பாடசாலைக்கு வந்து சேர்" என்று சொல்லிவிட்டு திருப்புட்குழியை நோக்கி மற்ற சிஷ்ய சிகாமணிகளுடன் நடக்க முற்பட்டார்.

அவர்களைப் பார்த்துக்கொண்டே நின்ற ஸ்ரீரா மானுஜர் சிந்தனை வசப்பட்டார். எதற்கும். தாயாருடைய யோசனையையும் கேட்டு நடக்கத் தீர்மானித்தார். தாயார் சொன்னதையே திருக்கச்சி நம்பியும் சொன்னார். "இப்பொழுது வேதாந்தம் சொல்லிக் கொடுக்க யாதவப் பிரகாசரை விட்டால் வேறு யாரும் காஞ்சி மண்டலத்தில் கிடையாது. அவரிடம் பாடம் கேட்பதே மேல்" என்றார் திருக்கச்சி நம்பி.

"எனது திருமஞ்சன கைங்கர்யம் என்ன ஆவது?" என்று விசாரித்தார் ஸ்ரீராமானுஜர்.

"இதையும் செய்துகொண்டு பள்ளியிலும் பாடம் கேட்கலாம். விடியற்காலையில் தீர்த்தம் கொண்டு கோவிலுக்குக் கொடுத்துவிட்டுப் பாடசாலைக்குப் போகலாம்" என்று திருக்கச்சி நம்பி யோசனை சொன்னார்.

அப்படியே செய்யத் தீர்மானித்த ஸ்ரீராமானுஜர் மறுநாள் முதற்கொண்டு மீண்டும் பாடசாலைக்குச் சென்றார். அன்று முதல் பாடசாலையில் மற்ற மாணவர்கள் அவரிடம் பயபக்தியுடன் நடந்து கொண்டார்கள். யாதவப் பிரகாசரும் தமது குற்றத்தை மறைக்க அதிகப் பாசத்தைக் காட்டினார். இந்த நிலையில் ஸ்ரீராமானுஜர் புகழும் பேரும் காஞ்சியின் எல்லைகளையும் மீறி வெளியிடங்களுக்குச் சென்றன. ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த யமுனைத் துறைவர் காதிலும் ஸ்ரீராமானுஜர் மகிமை விழுந்தது.

கச்சியிலிருந்து ஸ்ரீரங்கம் சென்ற இரண்டு வைஷ்ணவர்கள் ஸ்ரீராமானுஜ விருத்தாந்தத்தை யமுனைத் துறைவரிடம் சொன்னார்கள். "யாதவப் பிரகாசர் என்ற ஏக தண்டி சந்நியாசியிடம் ஸ்ரீபெரும்புதூர் இளையாழ்வார் என்றொருவர் வேதாந்தம் வாசிக்கிறார். குரு அவ்வப் பொழுது சொன்ன தவறான வேதார்த்தங்களுக்கு மறுப்பும் சொன்னார். அதனால் குருவின் சீற்றத்துக்கும் காரணமானார்" என்று விண்ணப்பித்து, "ஸத்யம், ஞானம் அனந்தம் பிரம்ம," "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீ மேவமக்ஷிணி" ஆகிய சுருதி வாக்யங்களுக்கு ஸ்ரீராமானுஜர் அனுக்கிரகித்த அர்த்தங்ளையும் விவரித்தார்கள்.

ராஜ பண்டிதனான ஆக்கியாழ்வானை மூன்றே பிரச்னங்களை மறுக்கச் சொல்லி இளவயதிலேயே முறியடித்தவரும். அதனாலேயே ஆளவந்தீரே என்று ராஜ பத்னியால் அழைக்கப்பட்டவரும், அதனால் ஆளவந்தார் என்ற நிரந்தரமான திருநாமத்தை அடைந்தவரும், மகா

ஞானியுமான யமுனைத் துறைவர், கச்சி வைஷ்ணவர்கள் சொன்ன விருத்தாந்தத்தைக் கேட்டு உள்ளம் பூரித்தார். ஸ்ரீவைஷ்ணவ உலகம் எதிர்பார்த்திருக்கும் மகாபுருஷன் தோன்றிவிட்டான் என்று உள்ளூர நிர்ணயமும் செய்து கொண்டு, இந்த மகானை உடனே பார்க்கவேண்டும் என்ற ஆசையால் காஞ்சிக்குப் புறப்படவும் தீர்மானித்தார்.

எண்ணத்தைச் செயலாக்குவதில் என்றும் தாமதம் செய்தறியாத ஸ்ரீ ஆளவந்தார் மறுநாளே காஞ்சி நோக்கிப் புறப்பட்டார். இளமையில் ராஜபதவியை ஆளவந்த யமுனைத்துறைவர் வயோதிக காலத்தில் எந்த சிரமத்தை யும் பாராது காஞ்சிப் பெருநகர் நோக்கி, திருக்கோயிலூர் வழியாகத் துரிதமாகப் பயணம் செய்து "நாம்நா காஞ்சீ இதிவிக்யாதா புரீ புண்ய விவர்த்தனி" என்று பிரசித்த மானதுமான காஞ்சிநகர் புகுந்தார். அவரது சீடரும் சீல விருத்தருமான திருக்கச்சி நம்பியும் ஸ்ரீ வைஷ்ணவர்களும் வரந்தரும் பெருமாளரையாரும் ஸ்ரீ சடகோப தீர்த்தப் பிரசாதங்களுடன் எதிர்கொண்டார்கள். ஆசார்யரான ஆளவந்தாரை நெடுஞ்சாண் கட்டையாக காஞ்சி மண்ணில் விழுந்து தெண்டனிட்டு திருக்கச்சி நம்பி வணங்கினார்.

"கஜேந்திரதாஸரே!" என்று திருக்கச்சி நம்பியை முடி பிடித்து எடுத்த ஆளவந்தார் "பேரருளாளர்க்கு திருவால வட்ட கைங்கர்யம் விடாமல் நடந்து வருகிறதா?" என்று விசாரித்தார்.

பெருமானுக்கு (விசிறி கொண்டு விசிறும்) திருவால வட்ட கைங்கர்யம் செய்து வந்த கஜேந்திரதாஸர் என்ற திருக்கச்சிநம்பி "தேவரீருடைய அருளாலே நடந்து வருகிறது" என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

பிறகு நம்பியையும் கூட்டிக்கொண்டு வரதராஜனை சேவித்துவிட்டு பிராகாரத்தில் பிரதட்சிணமாய் வரும் போது எதிரே ஒருகூட்டம் வந்ததைப் பார்த்து "இதென்ன

கூட்டம்?” என்று ஆளவந்தார் விசாரிக்க, “அதோ வருகிறவர் தான் யாதவப்பிரகாசர். அவரது சிஷ்ய கோஷ்டி அது” என்றார் திருக்கச்சிநம்பி.

“இவர்களில் ஸ்ரீ ராமானுஜர் யார்?” என்று ஆளவந்தார் விசாரித்தார்.

“அதோ சிவந்து நெடுகி ஆஜானுபாகுவாய் நடுவே வருபவர்” என்று திருக்கச்சிநம்பி பதில் சொன்னார்.

ஸ்ரீ ஆளவந்தாரின் திருக்கண்கள் ஸ்ரீ ராமானுஜர் மீது சில விநாடிகள் நிலைத்தன. அந்த ஆராய்ச்சிக்கண்கள் ஸ்ரீ ராமானுஜர் யார் என்பதையும் உணர்ந்து கொண்டன. ஸ்ரீ ராமானுஜர் கண்களும் ஸ்ரீ ஆளவந்தாரின் கண்களுடன் ஒரு விநாடி கலந்து தாழ்ந்தன.





# 8. பிளவு

ஆளவந்தாரின் கம்பீரமான கண்களால் ஊடுருவப் பட்ட இளையாழ்வாரின் இதயத்தில் பெரும் பிரகாச மொன்று ஒளிவிட்டதென்றால், ஆளவந்தாரின் இதயத்தில் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தை வளர்க்கவும் போஷிக்கவும் ஒரு மகான் கிடைத்து விட்டானென்ற பரம திருப்தி நிலவியது. அவசியமிருந்தால் ஆளவந்தார் ஸ்ரீ ராமானு ஜரை அழைத்துப் பேசியிருக்கலாம். ஆனால் பேசவில்லை. இருவர் மனங்களும் பேசிவிட்டதால் வாய்ச் சொல்லுக்கு அவசியமில்லை என்று நினைத்து ஆளவந்தார் எப்படி யாவது ஸ்ரீ ராமானுஜரை இப்பொழுதிருக்கும் கூட்டத்தி லிருந்து பிரித்து ஸ்ரீ வைஷ்ணவ தரிசன சித்திக்குக் கொடுத்தருளுமாறு வரதராஜனையே பிரார்த்தித்தார். "உயர்வற உயர் நலமுடையவனே! அயர்வறும் அமரர்கள் அதிபதியே; மதி நலம் அளிப்பவனே! முடவனை நடப்ப தற்கும், ஊமையை பேசவைப்பதற்கும், மலடிக்கு மகப்பேறு அளிப்பதற்கும் வல்ல எம்பெருமானே! வரதா! உன் திரு வடியில் சரணடைகிறேன். நம் தரிசனத்துக்கு ஸ்ரீராமானு ஜனைத் தந்தருள்" என்று பிரார்த்தித்தார். இப்படி வரதனைத் தொழுது ஸ்ரீ ரங்கத்துக்கு எழுந்தருளினார்.

பக்தர்கள் கேட்கும் வரங்களையெல்லாம் நல்குவ தாலேயே வரதராஜன் எனப் பெயர்பெற்ற பேரருளாளன் ஸ்ரீ ராமானுஜர் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை உண்டு பண்ணினான். அந்த நகரத்து அரசன் மகளை பிரம்மரக்ஷஸ் ஒன்று பிடித்துக்கொண்டது. "இந்தப் பிசாசை ஓட்ட என்ன வழி?" என்று மன்னன் மந்திரிப் பிரதானிகளை வினவ "திருப்புட்குழியில் யாதவப்பிரகாசர் என்ற மந்திர சாஸ்திர விற்பன்னர் இருக்கிறார்" என்று அவர்கள் எடுத்துரைக்க, "அப்படியானால் அவருக்கு இந்தச் செய்தியைச் சொல்லி வாருங்கள்" என மன்னன் கட்டளை யிட்டான்.

ராஜபடர்களும் அரசன் ஆக்ஞைப்படி யாதவப் பிரகாசரிடம் வந்து "ராஜாவின் பெண்ணை பிரம்மரக்ஷஸ் பிடித்திருக்கிறது. தங்களுக்குத் தெரியப்படுத்த வேண்டு மென்பது மன்னர் கட்டளை" என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

தனது மந்திர சக்தியில் அபார நம்பிக்கையுடைய யாதவப்பிரகாசர் மிகுந்த மமதையுடனும் பெருமை யுடனும் தனது சீடர்களை ஒரு முறை நோக்கினார். பிறகு ராஜபடர்களைப் பார்த்து "யாதவப்பிரகாசன் உன்னைப் போகச் சொன்னான் என்று பிரம்மரக்ஷஸிடம் சொல்லுங்கள்" என்று கூறினார். ராஜபடர்கள் அரண் மனைக்குத் திரும்பி வந்து பிரம்மரக்ஷஸ் பிடித்திருந்த அரசகுமாரியை நோக்கி யாதவப்பிரகாசன் கட்டளையை அறிவிக்க, பிரம்மரக்ஷஸ் பெரிதாக நகைத்தது. "யாதவப் பிரகாசனை அவனிருக்கும் இடத்திலிருந்து ஓடிப்போகச் சொன்னேனென்று அவனுக்குத் தெரிவியுங்கள்" என்று கூறியது நகைப்பின் ஊடே.

இதை அப்படியே ராஜபடர்கள் யாதவப்பிரகாசரி டம் போய் சொல்ல யாதவப்பிரகாசர் கோபத்தின்

வசப்பட்டவராய் தனது சீடர்களுடன் அரண்மனைக்கு வந்தார். அரசகுமாரியை அழைத்துவரச் சொல்லி அவளுக்கெதிரே முஷ்டி பிடித்து மஹா மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான். அவன் மந்திரத்துக்கும் பிரம்ம ரக்ஷஸ் மசியவில்லை. அதுவரை முடக்கிக் கொண்டிருந்த ராஜகுமாரியின் காலை யாதவப்பிரகாசனை நோக்கி நீட்டியது. "டேய்! யாதவப் பிரகாசா! நீ ஜபிக்கிற மந்திரம் எனக்குத் தெரியாதா?" என்று கேட்டு அந்த மந்திரத்தையும் இரைந்து சொல்லிற்று. "நான் இந்த மந்திரத்துக்கும் உனக்கும் போவேனோ? நீ உன் ஜன்மமும் அறியாய், என் ஜன்மமும் அறியாய்" என்றும் கூறி இடியென நகைத்தது.

"அப்படியானால் என் ஜன்மம் எது? உன் ஜன்மம் எது? நீதான் ஸர்வக்ஞனாயிற்றே, சொல்" என்றார் யாதவப் பிரகாசர்.

பிரம்மரக்ஷஸ் சொல்லிற்று: "யாதவப் பிரகாசா! போன ஜன்மத்தில் மதுராந்தகத்து ஏரிக்கரையிலிருந்த புற்றிலே நீ ஒரு உடும்பாயிருந்தாய். கோயில் ஸ்ரீவைஷ்ண வர்கள் சிலர் திருப்பதிக்குப் போகும்போது அந்த ஏரியிலே நீராடி அமுது செய்து தீர்த்தம் அருந்தினார்கள். அவர்கள் உண்டு சிந்திய உணவை நீ உட்கொண்டாய். சிந்திய தீர்த்தத்தையும் நக்கினாய். பாகவத உச்சிஷ்டத்தை உண்ட தால் இந்த வித்வத் ஜன்மம் உனக்கு உண்டாயிற்று. ஆனால் நான் நல்ல பிராம்மண ஜாதியில் பிறந்தேன். யாகம் செய்தேன். அதில் மந்திரங்களை விட்டுவிட்டேன். மந்திர லோபத்தால் பிரம்ம ரக்ஷஸாக பிறவி எடுத்தேன்."

இந்த விளக்கத்தைக் கேட்ட யாதவப் பிரகாசர் பிரமித்தார், தன்னையும் மீறிய சக்தியில் தான் சிக்கிக் கொண்டதை உணர்ந்தார். இருப்பினும் சுபாவமான பிடிவாதத்தினாலே தன் காரியத்தை சாதிப்பதில் உடும்புப் பிடியாகப்பிடித்து "அப்படியானால் நீ எப்படி போவாய்?" என்று வினவினார்.

"உன்னிடம் வாசிக்கிறவர்களிலே நித்ய சூரிகளில் ஒருவர் இருக்கிறார். அவர் சொன்னால் போவேன்" என்றது பிரம்மரட்சஸ்.

"அவர் யார்?" வியப்புடன் வினவினார் யாதவப் பிரகாசர்.

உடனே பிரம்மரக்ஷஸால் இயக்கப்பட்ட அரசகுமாரி எழுந்து ஸ்ரீராமானுஜரை தண்டனிட்டாள். "இவர் போகச் சொன்னால் போகிறேன்" என்றது பிரம்மரக்ஷஸ்.

யாதவப் பிரகாசன் இளையாழ்வாரைத் திரும்பி நோக்கினார். "அப்படியானால் இந்த பிரம்மரக்ஷஸை நீ போகச் சொல்" என்று அதிகார தோரணையில் உத்தர விட்டார்.

இளையாழ்வாரும் பிரம்மரக்ஷஸை நோக்கி "நீ இவளை விட்டு போகக் கடவாய்" என்று மிகுந்த நிதானத் துடன் சொன்னார்.

அத்துடன் விஷயம் முடிந்துவிடும் என்று எண்ணி யிருந்த யாதவப் பிரகாசருக்கு இன்னொரு பேரிடியும் காத்திருந்தது. பிரம்மரக்ஷஸ் இளையாழ்வாரை நோக்கி "மஹனீயரே! உமது திருவடித்தாமரைகளை எனது தலை மீது வைத்தாலொழிய நான் போக மாட்டேன். உமது திரு வடிகள் என்னை பாவனமாக்கும்" என்றது.

இளையாழ்வார் எழுந்திருந்து அரசகுமாரியின் சென்னி யில் தனது திருப்பாதங்களை வைக்க, பிரம்மரக்ஷஸ் சந்துஷ்டி யுடன் நகைத்து, "இதோ போகிறேன்" என்று கூற "போவதற்கு அடையாளம் காட்டிப் போ" என்றார் ஸ்ரீ ராமானுஜர்.

"எனது பாவங்கள் தேவரீர் திருவடி ஸ்பரிச அக்னி யால் தீயினில் தூசாயிற்று. நான் அதோ இருக்கும் அரச மரத்தில் இருக்கிறேன். அந்த அரச மரத்தை முறித்துக் கொண்டு போகிறேன் என்று பிரம்மரக்ஷஸ் கூறியது.

அடுத்த விநாடி அரசமரம் பளபளவென்ற சப்தத்து டன் முறிந்தது. முறிந்தது அரசமரம் மட்டுமல்ல, யாதவப் பிரகாசரின் மனமும் முறிந்தது. ராஜமாளிகையில் ராமானுஜன் வைபவமும் தனது பரிபவமும் ஒருங்கே உயர்ந்ததால் சீற்றத்துடன் தனது ஆசிரமத்துக்குத் திரும்பிய யாதவப் பிரகாசர் அன்றுமுதல் வேத வாக்யங்களுக்கு முன்னைவிட அர்த்தங்களை இடக்காகச் சொல்லலானார். ஸர்வம் கலு இதம் பிரம்ம (எல்லாம் பிரம்மமே) நேஹ நாநாஸ்தி கிஞ்சன (எந்த வித வேறுபாடும் இல்லை) என்று ஜீவாத்ம - பரமாத்ம ஐக்கிய பாவத்தைச் சுட்டிக் காட்டி யாதவப்பிரகாசர் அர்த்தம் சொல்ல, அதை மறுத்து ஸ்ரீராமானுஜர் விசிஷ்டாத்வைதபரமாக வியாக்கியானம் செய்ய, சீறினார் யாதவப்பிரகாசர். "நீ இவ்வளவு புத்திசாலியானால் நாளை முதல் இங்கு வரவேண்டாம். வேறு குருவைத் தேடிக் கொள்" என்றார். அதுவே நல்லது என்று ஸ்ரீராமானுஜருக்கும் பட்டதால் அன்றே, அந்தக் கணமே அந்தக் கூட்டத்திலிருந்து விலகி தமது இல்லம் வந்தார்.





# 9. மூன்று விரல்கள்! மூன்று சபதங்கள்

யாதவப் பிரகாசர் பாடசாலையிலிருந்தும், அவருடைய உடும்புப்பிடியிலிருந்தும், விலகி இல்லம் வந்து சேர்ந்த ஸ்ரீராமானுஜரை அவரது தாயார், "என்ன நடந்தது பிள்ளாய்?" என விசாரிக்க, ஸ்ரீராமானுஜர் நடந்த விஷயங்களை சாங்கோபாங்கமாகச் சொன்னார். அதைக் கேட்ட தாயார் "அப்பா குழந்தாய்! இதுவரைக்கும் நீ யாதவப் பிரகாசனிடம் படித்தது போதும் வரதராஜப் பெருமாளுக்கு அந்தரங்கராயிருக்கும் திருக்கச்சி நம்பியிடம் போய் அவரை சேவித்து அவர் என்ன சொல்கிறாரோ அதன்படி நடந்துகொள்" எனக் கூறினாள். தாயின் கட்டளையை சிரமேற்கொண்ட ஸ்ரீராமானுஜரும் திருக்கச்சி நம்பியிடம் சென்று அவரை சேவித்து பாடசாலை விவகாரங்களை விரியச் சொல்லி, "அடுத்து நான்செய்யக் கூடியதை நியமித்து அருள வேண்டும்" என வேண்டி நின்றார். திருக்கச்சி நம்பி சிறிதும் யோசித்தாரில்லை. "பேரருளாளரான வரதராஜப் பெருமானுக்கு சாலைக் கிணற்று நீர் மிக உகப்பாயிருக்கும். ஆகையால் பிரதி தினம் திருவாராதனத்துக்கு உதவும்படியாக முன்பு செய்தது போலவே மீண்டும் தினம் ஒரு குடம் திருமஞ்சனத்துக்கு

அக் கிணற்று நீரைக் கொண்டு வந்து சமர்ப்பித்து கைங்கர்யம் செய்யும்" என்று ஆணையிட அன்று முதல் தப்பாமல் அந்தக் கைங்கர்யத்தில் ஈடுபட்டார் ஸ்ரீராமானுஜர்.

காஞ்சியில் ஸ்ரீராமானுஜர் நிலை இப்படியிருக்கும் சமயத்தில் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீஆளவந்தாருடைய தேகநிலை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. வாலிப வயதிலே லௌகிக ராஜாவாயிருந்து, பிறகு ஸ்ரீ வைஷ்ணவ சாம் ராஜ்ய சக்கரவர்த்தியாகிவிட்ட ஸ்ரீ ஆளவந்தார் ராஜ பிளவையால் பாதிக்கப்பட்டு காலக்கிரமத்தில் மெள்ள மெள்ள அந்த நோய்க்கு பலியாகிக் கொண்டிருந்தார். அது கர்மவியாதியென அறிந்த மகானான ஸ்ரீ ஆளவந்தார் அதைப் பொருட்படுத்தாமல் வியாதியின் கடுமையைச் சகித்துக் கொண்டிருந்தார். அவரது தேக நலிவையும் கண்டு ஆளவந்தார் அதிக நாள் பிழைத்திருக்க மாட்டா ரென்ற தீர்மானத்துக்கும் வந்த அவருடைய சீடர் மாற நேர் நம்பி அந்தப் பிளவையைத் தமக்கு மாற்றும்படி விண்ணப்பித்துக்கொண்டார். "நம்பி, நான் இத்தனை நாள் இந்த வியாதியை சகித்து விட்டேன். நீ திரும்பத் திரும்பக் கேட்பதால் சிறிது காலம் இதைப் பெற்றுக்கொள். இதனால் நீ எனக்கு மிகவும் அந்தரங்கனாகி விட்டாய். உன் இருதய சுத்தமும் தவமும் இணையற்றது. எனக்கு எது நேர்ந்தாலும் பெரிய நம்பி உனக்கு எந்தக் குறைவுமில்லா மல் பார்த்துக்கொள்வார்" என்று அருளிச் செய்தார். அந்த மாற்றத்தால் ஸ்ரீ ஆளவந்தாரின் நோயின் கொடுமை சிறிது குறைந்ததே தவிர கடுமை தீரவில்லை. ஸ்ரீ ஆளவந்தார் இந்த உலகை விட்டு நீங்கும் நிலை வரவே செய்தது.

அதை உணர்ந்த திருக்கோட்டியூர் நம்பியும் பெரிய நம்பியும் திருவரங்கப் பெருமாளரையரை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீ ஆளவந்தாரை அணுகி "எங்களுக்குத் தஞ்சமாயிருக்கும் வழியொன்றை சொல்ல வேணும்" என்று

பிரார்த்திக்க, மரணப்படுக்கையிலிருந்த ஸ்ரீ ஆளவந்தார் சொல்லலானார்: "நீங்கள் இல்லத்தில் தினம் திருவாராதனம் செய்ய வைத்திருக்கும் கோயிலாழ்வாரே உங்கள் உயிர் நிலை. ஸ்ரீரங்கநாதன் பக்கத்தில் உள்ள திருப்பாணாழ்வார் விக்ரகத்தைப் பிரதிதினம் திருவடியிலிருந்து திருமுடிவரை சேவித்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னார். மேலும் கூறினார்: *குறும்பறுத்த நம்பி தமது பக்தியால் ஸ்ரீவெங்கடேசப் பெருமாள் இதயத்தில் குடிகொள்ளவில்லையா? திருக்கச்சி நம்பி தமது பக்திப் பிரவாகத்தால் வரதராஜப் பெருமானின் இதயத்தைக் கொள்ளவில்லையா? அது மட்டுமல்ல, அதோ நிற்கும் திருவரங்கப் பெருமாளரையர் திருப்பாணாழ்வாருக்கு எத்தனை வேண்டியவர் தெரியுமா?" என்று கூற இதைக் கேட்ட அரையர் வெட்கத்தால் தலைகுனிந்து நின்றார்.

பிறகு மூவரும் "எங்களுக்கு உள்ள உபாயம் எது?" என்று வினவ ஸ்ரீ ஆளவந்தார் "நீங்கள் நான்தான் உபாயம்

---

*குறும்பறுத்த நம்பியின் பெயர் பீமன். குயவர் குலத்தினர். அவரும் அவரது மனைவியும் தினம் களிமண்ணால் தாமரைப் பூக்களைச் செய்து தங்கள் வீட்டில் களிமண்ணால் செய்யப்பட்ட ஸ்ரீ வெங்கடேசப் பெருமாளுக்கு சாத்தி வந்தார்கள். அந்த ஊரிலிருந்த தொண்டைமான் என்னும் மன்னன் பொன்னால் செய்த தாமரை மலர்களை ஸ்ரீ வெங்கடேசபெருமாளுக்கு சாத்தினார். மறுநாள் காலை அவன் செய்த பொன்மலர் மாலை கீழே விழுந்து கிடந்தது. களிமண் மாலை பெருமாளை அலங்கரித்தது. இது பிரதிதினம் நடக்கவே அரசன் காவலைப் பலப்படுத்தினான். இருப்பினும் பழையபடி அவன் பொன்மாலைகள் எறியப் பட்டு களிமண் தாமரைமாலை பெருமாள் கழுத்தை அலங்கரித்தன. பிறகு விசாரித்து உண்மை உணர்ந்த மன்னன் நம்பிக்கு அடிமையானான்.

என்றிருந்தால் என் ஆத்மாவுக்குக் கெடுதல். என் சொரூ பத்துக்கும் கெடுதல். ஆகவே எம்பெருமான் தான் நமக்கு சகலமும். அவன் திருவடிகள் தான் உய்ய உபாயம்" என்று அருளிச் செய்தார்.

இப்படி நித்தம் நித்தம் ஸ்ரீ வைஷ்ணவத் தத்துவங் களையும், பிரபன்னர்களின் குண விசேஷங்களையும் போதித்து வந்த ஸ்ரீ ஆளவந்தாரின் தேகநிலை வரவர மோசமாகி வந்தது. அந்த நாளிலே காஞ்சியிலிருந்து வந்த இரு அடியார்கள் ஸ்ரீ ஆளவந்தாரை சேவிக்க அவர் "இளையாழ்வார் என்ன செய்கிறார்" என்று விசாரிக்க, அவர் யாதவப் பிரகாசரிடமிருந்து விலகி வரதராஜப் பெருமாளுக்குக் கைங்கரியம் செய்கிறார்" என்று கூறினார்கள். இதைக் கேட்டு உவகை கொண்ட ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்துக்கு நல்ல காலம் பிறந்து விட்டதற்காகப் பெருமாளை உள்ளூரத் துதித்தார். பின்பு பெரிய நம்பியை அழைத்து "இப்பொழுது இளை யாழ்வார் யாதவப் பிரகாசரிடமிருந்து விலகி பேரரு ளாளப் பெருமானிடம் சேர்ந்து விட்டாரென்று இந்த ஸ்வாமிகள் கூறுகிறார்கள். ஆகவே நீர் புறப்பட்டு காஞ்சி மாநகர் சென்று இளையாழ்வாரை இங்கு அழைத்து வந்து எம்மிடம் சேர்க்க வேண்டும்" என்று ஆக்ஞாபிக்க பெரிய நம்பியும் அவரை தெண்டனிட்டு உத்தரவு பெற்று காஞ்சி நோக்கிப் புறப்பட்டார்.

ஸ்ரீ ஆளவந்தார் உள்ளத்தை மட்டுமின்றி தேக நிலையையும் உணர்ந்த பெரிய நம்பி துரிதமாகவே பயணம் செய்து காஞ்சி வந்து சேர்ந்தார். அங்கு திருக்கச்சி நம்பியைச் சந்தித்து ஸ்ரீ ஆளவந்தாரின் அபிப்பிராயத்தைச் சொல்ல, இருவரும் வரதராஜனை சேவித்துப் பிரார்த் தித்துக் கொண்டு சாலைக் கிணற்றிலிருந்து தீர்த்தம் கொண்டு வரும் வழியில் ஸ்ரீ ஆளவந்தாரின் ஸ்தோத்தி ரத்தை சொல்லிக் கொண்டிருக்க, ஸ்ரீ ராமானுஜர் அதனால்

கவரப்பட்டு "இது யார் செய்தது?" என்று வினவினார். "இது ஆளவந்தார் செய்தது" என பெரிய நம்பி கூறினார்.

"அவரை நான் சேவிக்க வேணுமே" என்று தமது அவாவை இளையாழ்வார் வெளியிட, "அப்படியானால் என்னுடன் திருவரங்கம் வாரும்" என்று பெரிய நம்பி சொன்னார். இளையாழ்வாரும் பெருமாள் சந்நிதியில் தீர்த்தத்தை சமர்ப்பித்து விட்டு, திருக்கச்சி நம்பியின் உத்தரவையும் பெற்று, தமது அன்னையையும் சேவித்து விடை கொண்டு பெரிய நம்பியுடன் ஸ்ரீரங்கத்துக்குப் பயணமானார்.

இருவரும் கூடியவரை வேகமாகவே பயணம் செய்து ஸ்ரீரங்கத்தை அடைந்த சமயத்தில் பெருங்கூட்டம் காவிரியின் கரையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. அவர்களுடன் சென்று திருக்கரம்பன் துறையிலே பெரிய திரளைக் கண்டு "இங்கு என்ன விசேஷம்?" என்று இருவரும் வினவ "ஸ்ரீ ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளிவிட்டார்" (காலமாகிவிட்டார்) என்று விடை கிடைக்க இருவரும் திகைத்து துக்கித்து சிலையென நீண்டநேரம் நின்று விட்டனர். பிறகு கண்ணீரும் கம்பலையுமாக, அத்துறையில் கிடத்தப்பட்டிருந்த ஸ்ரீ ஆளவந்தாரைக் கண்டார். பெரிய நம்பி இளையாழ்வாரைத் தேற்றி ஸ்ரீ ஆளவந்தாரின் திருமேனியிருந்த இடத்துக்கு அழைத்துப் போனார். அங்கு கண்மூடி பிராணன் போன நிலையிலும் திவ்ய மங்கள விக்ரகமாய்க் காட்சியளித்த ஸ்ரீ ஆளவந்தாரைக் கூர்ந்து நோக்கிய ஸ்ரீ ராமானுஜர் திடீரெனப் பிரமித்தார். ஆளவந்தாரின் வலது கையில் மூன்று விரல்கள் முடங்கிக் கிடந்தன.

அதைக் கண்டு வியந்த இளையாழ்வார் பெரிய நம்பியிடம் திரும்பி, "இவருக்கு முன்பே இப்படி விரல்கள் முடங்கியிருந்ததோ?" என்று விசாரித்தார்.

"இல்லை. இப்பொழுதுதான் இப்படியிருக்கிறது" என்றார் பெரியநம்பி.

"அப்படியானால் இவர் மனத்தில் ஏதோ பூர்த்தி யாகாத கருத்து இருந்திருக்கிறது" என்ற ஸ்ரீ ராமானுஜர் "அது என்னவாயிருக்கும்" என்று மற்றவர்களைக் கேட்டார்.

ஸ்ரீ ஆளவந்தாரிடம் காலட்சேபம் கேட்பவர்களில் சிலர் சொன்னார்கள்: "நாங்கள் வேறொன்றும் அறியோம். ஆனால் ஸ்வாமிக்கு வியாசரிடமும் பராசரரிடமும் இணையிலா பக்தி. அவர்களுக்கு தமது நன்றியறிதலைக் காட்டப் பிரியப்பட்டார். சடகோபனிடம் ஆழ்ந்த பக்தியுள்ளவர். அதை நிலைநாட்டுவதிலும் பரப்புவதிலும் ஆசையுடையவர். வியாசரின் பிரும்ம சூத்திரத்துக்கு விசிஷ்டாத் வைத பாஷ்யம் செய்ய வேணுமென்று அடிக்கடிச் சொல்லுவார். தமது தேகநிலையால் இந்த மூன்று விஷயங்களிலும் ஏதும் செய்யமுடியவில்லையே என்று அடிக்கடி சோகித்துச் சொல்வார்."

இப்படி ஸ்ரீ ஆளவந்தாரின் சீடர்கள் சொல்லக் கேட்ட ஸ்ரீ ராமானுஜர் ஸ்ரீ ஆளவந்தாரின் திருமேனியை நோக்கி எல்லோரும் கேட்க இரைந்து திடமான குரலில் "ஆசார்யரே, மஹனீயரே! எனது இந்த தேகத்தில் சக்தியு மிருந்து எனக்கு ஆயுளும் இருந்து தேவரீருடைய கிருபை யும் இருக்குமானால் தேவரீருடைய மனக்குறைகள் மூன்றையும் அடியேனே தீர்த்து வைக்கிறேன்" என்று கூறினார்.

இந்த வார்த்தைகளை அவர் சொல்லி முடித்ததும் ஸ்ரீ ஆளவந்தாரின் மூடிக்கிடந்த மூன்று விரல்களும் நிமிர்ந்தன. அவர் முகத்திலும் மந்தகாசம் விரிந்தது. இதைக் கண்டவர் பிரமித்தனர். அடுத்த ஆசார்யன் தங்களுக்குக் கிடைத்து விட்டதை சந்தேகமற உணர்ந்தும் கொண்டனர்.



# 10. தந்திரத்துக்குத் தந்திரம்

ஸ்ரீராமானுஜரின் மூன்று சபதங்களையும், அவற்றின் விளைவாக நிமிர்ந்துவிட்ட ஸ்ரீ ஆளவந்தார் திருமேனியில் மூன்று விரல்களையும் கண்ட அனைவரும் பிரமித்தாலும். ஸ்ரீ ஆளவந்தாருக்கு அடுத்தபடி அந்த ஸ்தானத்தில் இருக்கக் கூடிய ஆசார்யன் ஸ்ரீராமானுஜரே என்பதையும் உணர்ந்து கொண்டாலும், யாரும் அதை எடுத்துச் சொல்லும் துணிவைக் கொள்ளாததால் திருவரங்கப் பெருமாள் அரையரே அந்தப் பணியை மேற்கொண்டார். வரரங்கன் என்ற திருவரங்கப் பெருமாள் அரையரின் கண்களிலிருந்து எதுவும் தப்புவதில்லையாகையால் விரல்கள் மூன்று விரிந்ததை முதன் முதலிலேயே பார்த்த அரையர் ஸ்வாமி ஸ்ரீ ராமானுஜரை அணுகி, "இந்த ஆசார்யருடைய கிருபையும் உமக்கு உண்டு. இவருடைய திவ்ய சக்தியும் உம்மிடத்திலே சேரும். நீரே இவருடைய இடத்தை அலங்கரிக்கத் தகுந்தவராவீர்" என்று விண்ணப் பித்துக் கொண்டார். அத்துடன் கூட்டத்தினரையும் நோக்கி "இந்த பரமாசார்யரும் நமது பரமாசார்யரும் ஒருவரை ஒருவர் சந்திக்க விரும்பினார்கள். அப்படி நேர்ந்திருந்தால் ஸ்ரீ ஆளவந்தார் தமது திவ்யகரங்களா லேயே இவரை வைணவ பீடாதிபதியாக்கியிருப்பார்.

அந்த வைபவத்தைப் பார்க்க நாம் கொடுத்து வைக்க வில்லை. ஆனால் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தின் அடுத்த நிர்வாகி நமக்குக் கிடைத்துவிட்டதை ஸ்ரீ ஆளவந்தாரே விளக்கி விட்டார். இதோ இவர்மீது அந்தச் சுமை இறங்கி விட்டது. நமது சம்பிரதாயத் தலைவரை, நமது ஆசார்யனைப் பாருங்கள். கோடிக்கணக்கான மக்களை உய்விக்க வந்த மஹானைப் பாருங்கள். ஸத்தியமான தர்மத் திற்கு வழிகாட்டும் ஒளியைப் பாருங்கள்" என்று உணர்ச்சி பொங்க ஸ்ரீ ராமானுஜரைச் சுட்டிக்காட்ட அங்கிருந்த பாகவத கோஷ்டி "ததாஸ்து" (அப்படியே ஆகக்கடவது) என்று ஒப்புதல் தெரிவித்தார்கள்.

ஆனால் ஸ்ரீராமானுஜர் மனம் அந்த பெரும் பதவியை ஒப்பும் நிலையில் இல்லை. ஸ்ரீ ஆளவந்தார் திருமேனியை நோக்கினார் மீண்டும். கூட்டத்தாரையும் நோக்கி "என் மீது பெரிய பணியை சுமத்துகிறீர்கள். நமது பரமாசார்யர் அப்பணியை நிறைவேற்ற சக்தி தருவாரானால், எம் பெருமான் கிருபையும் அப்படியிருக்குமானால், அப்படியே நடக்கும். ஆனால் ஒன்று புரியவில்லை எனக்கு. கடைசியாக ஸ்ரீ ஆளவந்தார் என்னை ஒரு முறை பார்க்க, ஒரு வார்த்தை சொல்ல நம்பெருமாள் ஏன் இடமளிக்கவில்லை? *இப் பொழுது இவ்விஷயங்களை நிதானமாக ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரும் நிலையில் என் மனம் இல்லை. எங்களிரு வரையும் சந்திக்க விடாதது அநீதியென்று நினைக்கிறேன். எம்பெருமான் கருணை உள்ளத்துக்கு இது சரியாகாதே" என்று சொல்லி பெரிய நம்பியையும் மற்றவர்களையும் கரங்குவித்து வணங்கி விடைகொண்டு பெரிய பெருமாளை ஸேவிக்காமலே திருக்கச்சிக்குத் திரும்பினார். ஸ்ரீ ஆள வந்தாருடைய அந்திமக் கிரியைகள் முறைப்படி நடந் தேறின.

---

* சுகப்பிரச்ன சம்ஹிதை - அத்தியாயம் 59

காஞ்சிபுரத்துக்குத் திரும்பிய பிறகு ஸ்ரீராமனுஜர் திருக்கச்சி நம்பியிடம் சென்று ஸ்ரீ ஆளவந்தார் பரமபதித்த விவரங்களைச் சொல்ல அவரும் துக்கத்துக்கு ஆளானார். ஆனால் தமது துன்பத்திலும் ஸ்ரீராமானுஜரின் சோகம் அதிகமாயிருப்பதைக் கண்ட நம்பி, "இளையாழ்வாரே! வரதராஜப் பெருமாள் எல்லாமறிந்தவர் அல்லவா? சர்வ சக்தி உள்ளவரல்லவா? அவரிடம் பாரத்தைப் போடும். நீர் நினைப்பது போலவே காரியத்தை நடத்திக் கொடுப்பார். அஞ்சவேண்டாம். தைரியமாயிரும்" என்று தேற்றினார். இளையாழ்வாரும் பழையபடி திருமஞ்சன தீர்த்த கைங் கர்யத்தில் இறங்கினார்.

இருப்பினும் இளையாழ்வாரின் இதயத்தில் அமைதி யில்லை. சரியான ஆசார்யனை ஆசிரயிக்காமல் பெரு மானை ஆசிரயித்துப் பயனென்ன என்று நினைத்தார். நாளாக நாளாக திருக்கச்சி நம்பியிடத்தில் தமது அன்பும் பக்தியும் வளர்ந்து வருவதை உணர்ந்தார். ஆகவே அவரையே ஆசார்யராக மனத்தில் வரித்து அவரிடம் சென்று சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, "இந்த ஆத் மாவை தேவரீர்தான் உஜ்ஜீவிக்கச் செய்யவேணும்" என்று விண்ணப்பித்துக் கைகூப்பி நின்றார்.

ஆனால் நம்பி ஸ்ரீராமானுஜர் வேண்டுகோளுக்கு ஒப்பவில்லை. "ராமானுஜரே! ஒரு பொருட்டில்லாத என்னிடம் வரதராஜப் பெருமாள் காட்டும் அன்பைக் கண்டு என்னை ஆசார்யனாக வரிக்கத் தீர்மானித்தீர். ஆனால் வர்ணாசிரம தர்மம், நமது இருவர் பிறப்பு, அதற்கு இடங்கொடாது" என்று பதில் சொன்னார்.

இளையாழ்வார் சளைத்தாரில்லை. "ஸ்வாமி! அப்படி யானால் நமது ஆழ்வார்கள், பெரியவர்கள், எல்லா ஜாதிகளிலும் பிறந்திருக்கிறார்களே. அவர்கள் ஜாதி எதுவாயிருந்தாலும் எம்பெருமானை நேராகப் பார்த்திருக் கிறார்களே! பேசியும் இருக்கிறார்களே" என்று வினவினார்.

தினம் தினம் இரவில் வரதராஜப் பெருமானிடம் நேருக்கு நேர் பேசும் திருக்கச்சி நம்பி முறுவல் கொண்டார். அந்த முறுவலுடன், "இளையாழ்வாரே! வர்ணாசிரம தர்மத்தையும் விதிகளையும் பெரியவர்கள் ஏற்படுத்தியிருக் கிறார்கள். பெரியவர்கள் நடக்கும் வழியில்தான் மற்ற சாதாரண மக்களும் நடப்பார்கள். ஆகையால் விதிகளை நாம் மீறக்கூடாது" என்று திட்டமாகச் சொல்லிவிட்டார்.

ஸ்ரீராமானுஜர் திருக்கச்சி நம்பியை எதிர்த்துப் பேச வில்லைதான். ஆனால் மனத்தில் அவரை ஆசார்யராக ஏற்றுக் கொண்ட நிலையிலிருந்தும் மாறவில்லை. ஆகவே வேறொரு யுக்தியைக் கையாண்டார். எப்படியும் ஆசார்ய சேஷத்தை (ஆசார்யன் உண்ட உணவின் மிகுதியை) சாப்பிடவேணும் என்று தீர்மானித்தார். ஆகவே சில நாட் கள் கழித்து திருக்கச்சி நம்பியை அணுகி "ஸ்வாமி! இன்று தேவரீர் அடியேன் *குடிசையிலே அமுது செய்ய வேணும்" என்று வேண்டினார். நம்பியும் சம்மதித்தார்.

அதனால் குதூகலப்பட்ட ஸ்ரீராமானுஜர் தமது இல்லம் சென்று இல்லத்தரசியான தஞ்சமாம்பாளிடம் "இன்று நமது இல்லத்தில் உணவருந்த திருக்கச்சி நம்பி வருகிறார். ஆகையால் சிறப்பாக தளிகை செய்துவை. நான் பெருமாள் கைங்கர்யத்தை முடித்துக்கொண்டு வருகிறேன்" என்று கூறி கோவிலுக்குச் சென்றார். அங்கு விரைவாக திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வந்து கொடுத்து விட்டு, வீட்டுக்கு வந்து அங்கிருந்த வரதராஜப் பெருமாளுக்கு திருவாராதனம் செய்து, தளிகை சமர்ப்பித்து திருக்கச்சி

---

* ***ஸ்ரீ வைணவ சம்பிரதாயத்தில் யாரும் தம்மையோ தமது இருப்பிடத்தையோ உயர்த்திச் சொல்லும் வழக்கமில்லை. எத்தனை பெரியவராயிருந்தாலும் தம்மை அடியவன் என்றும், தமது இல்லம் மாளிகையாயிருந்தாலும் அதை குடிசை என்றும் சொல்வது வழக்கம்.***

நம்பியை அழைத்து வர தெற்குத் திருவீதியாலே நம்பியின் இல்லத்தை நோக்கிச் சென்றார்.

அவர் வருவதற்கு முன்பே நம்பி தமது இல்லத்தினின் றும் புறப்பட்டு பெருமாளையும் சேவித்து வேறொரு வீதியாலே இளையாழ்வார் இல்லம் வந்து தஞ்சமாம் பாளை நோக்கி "அம்மணி! அடியேன் திருவாலவட்ட கைங்கர்யத்துக்கு (பெருமாளுக்கு விசிறிகொண்டு விசிறும் சேவை) போக வேணும். சீக்கிரம் அமுது படையுங்கள்" என்று கூறி அவசர அவசரமாக உணவருந்திச்சென்று விட்டார். தஞ்சமாம்பாள் ஆசுவாசப் பெருமூச்சுவிட்டாள். ஆசாரம் பிழைத்தது என்று எண்ணினாள். அவளும் நம்பி காட்டிய அவசரத்தைக் காட்டினாள். நம்பி சாப்பிட்ட இலையைக் கோலாலே தள்ளி சாணத்தைக் கொண்டு நீர் தெளித்து சுத்தம் செய்தாள். மீதியிருந்த உணவைப் பிச்சைக்காரர்களுக்குப் போட்டாள்.

தானும் தீட்டுப்போக தலை முழுகினாள். நிற்க. திருக்கச்சி நம்பியை அவர் இல்லத்தில் காணாமல் நீண்ட நேரம் காத்திருந்து தமது இல்லம் திரும்பிய இளையாழ் வார் தமது மனைவி நீராடி நிற்பதைக் கண்டு வியந்து, "என்ன நடந்தது?" என்று வினவினார். "திருக்கச்சி நம்பி வரவில்லையா?" என்றும் கேட்டார்.

"வந்தார். திருவாலவட்ட கைங்கர்யத்துக்கு நேரமாகிற தென்று முன்னதாகவே உணவருந்திச் சென்றார்" என்றாள் தஞ்சமாம்பாள்.

"இதெல்லாம் என்ன?" என்று விசாரித்தார் ஸ்ரீரா மானுஜர் கீழே சாணமிட்டிருந்த இடத்தைச் சுட்டிக் காட்டி.

"அவர் கீழ்க்குலத்தவராதலாலே அவர் உணவருந்திய இலையைக் கோலாலே எடுத்துப் போட்டேன்" என்றாள் ஸ்ரீ ராமானுஜர் மனைவி.

ஸ்ரீராமானுஜர் உள்ளம் கோபத்தணல் விட்டு எரிந்து கொண்டிருந்தது. "மீதி உணவு இருக்கிறதா?" என்று கேட்டார் மனைவியை நோக்கி.

"இல்லை, பிச்சைக்காரர்களுக்குப் போட்டேன். அவர் சாப்பிட்ட மீதியை நாம் எப்படிச் சாப்பிட முடியும்?" என்றாள் தஞ்சமாம்பாள்.

ஸ்ரீராமானுஜர் "அடிபாவி! பாகவத சேஷத்தை விரயம் செய்து விட்டாயே, பிச்சைக்காரர்களுக்குக் கிடைத்த யோகம் எனக்குக் கிடைக்கவில்லையே" என்று சினந்தார். அத்துடன் முன்னால் உண்டு தமக்கு சேஷம் கிடைக்காமல் செய்துவிட்ட திருக்கச்சி நம்பியின் தந்திரத்தையும் நினைத்துப் பார்த்தார். என் தந்திரத்துக்கு நம்பி பதில் தந்திரம் செய்துவிட்டார். இதற்கு ஏதாவது முடிவு காண வேண்டும் என்று நம்பியின் இல்லம் நோக்கி வேகமாகச் சென்றார்.

நம்பியை தரிசித்த ஸ்ரீராமானுஜர் "ஸ்வாமி! எனக்குச் சில ஆசைகள் இருக்கின்றன. அவை நிறைவேறுமா என்பதை பேரருளாளப் பெருமாளைக் கேட்டுச் சொல்லும். உமக்குப் பதில் சொல்லப் பெருமாள் மறுக்கமாட்டார்" என்றார்.

நம்பி முறுவல் கொண்டார். "அப்படியே ஆகட்டும்" என்றார்.





# 11. கேட்காத கேள்விகள்! கிடைக்காத பதில்கள்!

திருக்கச்சி நம்பியை தமது குருவாக வரிக்க முயன்று, அதற்குத் திருக்கச்சி நம்பி தமது கீழ்க்குலப் பிறப்பை நினைத்து இசையாதபடியாலே, அவர் அமுது செய்த சேஷத்தை (அவர் சாப்பிட்ட மீதியையாவது) சாப்பிட்டு அதன் மூலம் ஆத்மீக முறையில் குரு - சிஷ்ய பாவத்தை ஏற் படுத்திக் கொள்ள முயன்று, திருக்கச்சி நம்பியின் சாமர்த்தியத்தாலும் தமது தர்ம பத்தினியின் ஆசார மமதை யாலும் அதிலும் தோல்வியடைந்த ராமானுஜர் சகல சராசரங்களுக்கும் மூலப் பொருளான பகவானிடமே தமது அபிலாஷைகளுக்கு முடிவு காண வேண்டி நம்பியை அணுகி தமது மனத்தில் உள்ளவை பற்றி பெருமாளைக் கேட்கும்படி வேண்ட அவரும் அதற்கு இசைந்தார்.

அன்றிரவு வரதராஜப் பெருமாளுடன் ஏகாந்தத்தில் இருக்கையில் பெருமாளே கேட்டார்: "நம்பி! நீ நம்மை ஏதோ கேட்க விரும்புவதாகத் தோன்றுகிறது. அவை என்னவோ?"

இவ்வண்ணம் பெருமாள் கேட்டதும், "இளையாழ் வார் இன்று மாலை என்னைச் சந்தித்தார். அவர் மனத்தில்

உள்ள சில எண்ணங்கள் ஈடேறுமா என்று கேட்கச் சொன்னார். அதுபற்றி அருளிச் செய்ய வேண்டும்," என்று நம்பிகள் விண்ணப்பித்துக் கொண்டார்.

எந்த ஒரு புன்சிரிப்புக்காகப் பூதேவி, ஸ்ரீதேவி, நீலா தேவிகளும், ஆழ்வார்களும், தேவதைகளும் ஏங்கி நின்றார்களோ அந்த ஒரு புன்முறுவல் பெருமாளின் இதழ்களில் அரும்பியது. அத்தகைய முக உல்லாசத்துடன் பெருமாள் தமது இதழ்களிலிருந்து சகல சாஸ்திரங்களின் உட்பொருளும், வைஷ்ணவ தர்மத்தில் நுட்பமும் நிறைந்த வார்த்தைகளைச் சொன்னார்: "நம்பி, நமது இதயத்தில் அருகில் வசிப்பவனும் நமது அடியார்களில் சிறந்த மகானுபாவனும், சகல சாஸ்திரங்களையும் அறிந்திருப்பவனும், நமது ஆக்ஞையைத் தவிர வேறு ஆக்ஞை எதையும் அறியாதவனும், நாம் சாந்தீபிநி மகரிஷியிடம் உலக வழியையொட்டி பேருக்கு பாடம் கேட்டதுபோல் கேட்பவனுமான இந்த வாலிபன் உமது மூலம் நம்மைக் கேட்கிறான். இப்படி, நாம் சாந்தீபிநி மகரிஷியிடம் பாடம் கேட்டது போல் இவனும் உலகானுபவத்தையொட்டி பல ஆசார்யர்களிடம் தர்மத்தைக் கேட்பான். மற்றபடி அவன் அறியாதது ஒன்றுமில்லை. அவன் உம்மிடம் கேள்விகளைச் சொல்லவில்லை. ஆகவே நாமும் பதில்களை மாத்திரம் சொல்கிறோம். அவனிடம் தெரிவித்துவிடும்" என்று சொன்ன பெருமான் ஆறு வார்த்தைகளை திருவாய் மலர்ந்தருளினார்:

1. பரத்வம் நாமே
2. பேதமே தர்சனம்
3. உபாயமும் பிரபத்தியே
4. அந்திஸ்மிருதியும் வேண்டா

5. சரீர அவஸானத்திலே மோக்ஷம்

6. பெரிய நம்பி திருவடிகளிலே ஆசிரயிப்பது.

சம்பிரதாய ரீதியில் அமைந்துள்ள இந்த வார்த்தைகளுக்குப் பொருள் இப்படி: 1. நாமே சகலத்துக்கும் உயர்ந்த சத்தியமான மூலப்பொருள். 2. ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அவசியமான பேதம் உண்டு என்பதே உண்மையான தத்துவம். 3. என்னை அடைய ஒரே நேரான வழி நம்மிடம் அடைக்கலம் புகுவதுதான். 4. இப்படி வாழ்பவன் உடல் உயிரைவிட்டுப் பிரியும் நேரத்தில் நம்மைத் துதி செய்ய அவசியமில்லை. 5. உயிர் உடலிலிருந்து பிரிந்ததும் இவன் நம்மிடம் வந்து நிரந்தரமான ஆனந்தத்தை அடைவான். 6. பெரிய நம்பியின் திருவடிகளை இவன் ஆசிரயிக்கட்டும்.

இப்படிப் பெருமாள் சொல்ல, ஆனந்தத்தின் எல்லையை அடைந்த நம்பி மறுநாட் காலை ஸ்ரீராமானுஜரை வரும்படிச் செய்தியனுப்பினார். ஸ்ரீ ராமானுஜர் வந்ததும் அவரிடம் பெருமாள் திருவாய் மலர்ந்து அருளிய ஆறு வார்த்தைகளைச் சொல்லி "இளையாழ்வாரே! இவைதானே நீர் அறிய விரும்பியது. பெருமாள் பதில்கள் உமது கேள்விகளுக்கு விடையிறுத்துவிட்டன என்று நினைக்கிறேன்" என்றார்.

"ஆசார்யரே! வேறு எப்படியிருக்க முடியும்? இப்படிப் பெருமாள் அருளைப் பெற நான் என்ன புண்ணியம் செய்தேன்?" என்று கூறி மெய்சிலிர்த்து நம்பியின் திருவடிகளில் அவர் தடுக்குமுன்பே விழுந்து விட்டார்.

இம்முறை நம்பி அவரைத் தடுக்கவில்லை. நம்பியின் இதயத்தில் ஸ்ரீராமானுஜரிடம் அருளும், மெய்ப்பொருள் அருளிய பதில்களால் பரமசந்துஷ்டியும் இணைந்து நின்றதால் நம்பி நாதழுதழுக்க "ராமானுஜா! வேறு யாருக்கும் கிட்டாத அளவுக்கு பெருமாள் அருள் உமக்குக்

கிடைத்திருக்கிறது. இதுவரை நிறைவேறாத அளவுக்கு உன் மூலம் ஸ்ரீ வைஷ்ணவம் பரவி உலகத்தைக் காப்பாற்றப் போகிறது" என்றார். "இளையாழ்வார் நினைப்பும் பெரு மாள் திருவுள்ளமும் ஒன்றாக இணைந்த விசித்திரந்தான் என்ன!" என்று மனத்துக்குள் வியந்தும் கொண்டார்.

இப்படி காஞ்சீபுரத்திலே இந்த விசித்திரம் நிகழ்ந்து கொண்டிருந்த அதே சமயத்தில் திருவரங்கத்திலே ஸ்ரீ ஆள வந்தார் சீடர்களெல்லாரும் பிரசன்னமாயிருந்த பெரிய சதஸில் சீடர்கள் பெரிய நம்பியை நோக்கி "ஆசார்யரே! இனி நமது ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்துக்கு அடுத்த நிர்வாகி யார்?" என்று வினவினர்.

பெரிய நம்பி சொன்னார்: "ஸ்ரீ ஆளவந்தார் முதலில் திருவுள்ளம் கொண்டு காஞ்சீபுரம் சென்று பிற்கால வைஷ்ணவ தர்சன நிர்வாகியைக் கண்டதும், பிறகு அவர் காலமான பின் அவர் திருமேனியில் மடங்கியிருந்த மூன்று விரல்களைப் பார்த்து அந்த மகான் சபதம் பண்ணியதால் விரல்கள் நிமிர்ந்ததும் உங்களுக்கு நினைவில்லையா? ஸ்ரீ ஆளவந்தார் அபிமானம் என்றாவது பொய்யாகுமா?"

இதைக் கேட்ட ஸ்ரீ ஆளவந்தார் சீடர்கள் "ஸ்வாமி! அப்படியானால் இன்னும் ஏன் தாமதம்? தேவரீர் சென்று அவரை அழைத்துவர வேண்டியதுதானே?" என்று பிரார்த்திக்க, பெரிய நம்பி சம்மதித்து திருவரங்கனை சேவித்து விடைகொண்டு காஞ்சிமாநகர் நோக்கிப் பயணமானார். ஸ்ரீராமானுஜரும் பெருமாள் அளித்த பதில்களால் பெரிய நம்பியின் திருவடிகளில் சரணடைய ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார். இருவரும் மதுராந்தகத் தில் ஏரிகாத்த ராமன் சந்நிதியில் சந்தித்தனர். தூரத்திலி ருந்தே பெரிய நம்பியைக் கண்டு விட்ட ஸ்ரீராமானுஜர் அளவிலா ஆச்சரியத்தின் வசமாகி "எண்ணிய பலம் எதிரே வாய்த்தது போல நம்பி நமக்கெதிரே எழுந்தருளி கிருபை

புரிய வந்த விசித்திரம் கண்டாய் நெஞ்சே?" என்று புளகாங்கிதம் கொண்டு கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழிய பெரிய நம்பியின் திருவடிகளில் விழுந்து தமது கண்ணீராலே ஆசார்யன் புனிதமான திருவடிகளை அலம்பினார். பகவானுடைய சங்கல்பத்தை நினைத்து, "எம்பெருமானே நீ இயக்காமல் உலகத்தில் எது இயங்கு கிறது? எனக்குப் புகலிடமும் காட்டி அந்த இடத்தையும் இங்கேயே கொண்டு வந்து விட்டாயே! உன் அருள் இருந்த படி என்?" என்று மனத்துள் நினைத்துப் பெரிய நம்பியின் திருவடிகளிலேயே நீண்ட நேரம் விழுந்து கிடந்தார்.





# 12. கிணற்றடிச் சண்டை

மதுராந்தகம் ஏரிகாத்த பெருமாள் சந்நிதியில் தமது காலடியிலே விழுந்து, தமது பாதங்களை ஆனந்தக் கண்ணீரால் அலம்பிய ஸ்ரீராமானுஜரை தமது இரு கைகளாலும் தூக்கி நிறுத்திய பெரிய நம்பி அவரை இறுக அணைத்துக் கொண்டார். அப்படி அணைத்த பெரிய நம்பியிடம் ஸ்ரீராமானுஜர் கேட்டார், "ஸ்வாமி, என்னை இப்பொழுதே சீடனாக ஏற்றுக் கொண்டு உபதேசம் செய்ய வேண்டும்" என்று.

தமது அரவணைப்பிலிருந்த இளையாழ்வாரை நீக்கி உற்று நோக்கிய பெரிய நம்பி "இத்தனை அவசரம் எதற்கு? காஞ்சீபுரம் போய் புண்யகோடி விமான மத்தியிலே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பேரருளாளப் பெருமாள் முன்பு உமக்கு உபதேசம் செய்கிறோமே" என்று சொன்னார்.

இதற்கு ஒப்பவில்லை ஸ்ரீராமானுஜர். "ஸ்வாமி! ஸ்ரீ ஆளவந்தாரிடம் உபதேசம் பெற்ற நான் தேவரீரை முன்னிட்டுச் சென்றபோது நடந்தது நினைப்பில்லையா? மின்னலைப் போல் நிலையில்லாத இந்த உயிர் அடுத்த விநாடி என்ன ஆகும் என்பது யாருக்குத் தெரியும்? ஆகை

யால் இப்பொழுதே உபதேசம் செய்தருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

ஆச்சரியம் ததும்பிய கண்களால் இளையாழ்வாரை நோக்கினார் பெரிய நம்பி. 'உபதேசம் பெறுவதில் என்ன ஆவல்? என்ன துரிதம்?' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட பெரிய நம்பி "அப்படியே ஆகட்டும்" என்று கூறி ஸ்ரீ ராமானுஜரை அழைத்துக் கொண்டு அந்தக் கோவிலில் இருந்த மகிழ மரத்தடியில் தானும் அமர்ந்து சீடரையும் அமரச் செய்தார். அங்கேயே அக்னி மூட்டி திருவிலச்சினை சாதித்தார். (சங்கு சக்கர முத்திரைகளை ஸ்ரீராமானுஜர் தோள்களில் பொறித்தார்.)

பிறகு ஸ்ரீராமானுஜரை தமது வலப்புறத்திலே உட்கார வைத்துத் தமது வலது கையை அவர் தலையிலேயும் இடது கையை அவரது இருதயத்துக்கு அருகிலும் வைத்து, தமது குருவான ஸ்ரீ ஆளவந்தாருடைய திருவடிகள் தமது தலையில் இருப்பதாக சங்கல்பம் செய்து கொண்டு ஸ்ரீ ராமானுஜர் கண்களைத் தமது கண்களால் கூர்ந்து நோக்கினார். பிறகு ஸ்ரீ ராமானுஜர் வலது செவியில் மந்திரரத்தினமான த்வயத்தை உபதேசித்தார். பிறகு ஸ்ரீ ராமானுஜரை நோக்கிச் சொன்னார்: "இளையாழ்வாரே! இன்று உமக்கு உபதேசம் செய்தது நானல்ல. பரதாழ்வானுக்கு பாதுகைகளை அளித்துக் காட்டுக்கு எழுந்தருளின ஸ்ரீராமரைப் போலவே ஸ்ரீ ஆளவந்தாரும் உமக்காகத் தமது திருவடிகளை என் தலைமேலே வைத்துச் சென்றார். அந்தக் கடமையை இன்று பூர்த்தி செய்தேன். ஆகவே உமக்கு ஆசார்யர் ஸ்ரீ ஆளவந்தார்தான்."

இச்சொற்களை நிதானமான திடமான தொனியில் சொன்னார் பெரிய நம்பி. ஸ்ரீ ஆளவந்தாருக்குக் காரணபூதராக பெரிய நம்பி ஸ்ரீ ராமானுஜருக்கு மந்திரோபதேசம் செய்த காரணத்தினாலே "எதிகட்கு இறைவன் யமுனைத்

துறைவன் இணையடியாம், கதி பெற்றுடைய இராமாநு ஜன்" என்று பிற்காலத்தில் பிள்ளையமுதனாரும் அருளிச் செய்தார். இப்படி வாழையடி வாழையாக வந்த குரு பரம்பரையில் ஸ்ரீஆளவந்தாருக்கு அடுத்த ஸ்தானத்தை அடைந்தபோதிலும் பெரிய நம்பியையே குருவாக நினைத்த ராமாநுஜர் குருவைக் கேட்டார்: "ஸ்வாமி இந்த ஒரு விஷயத்தை எனக்கு விளக்கியருள வேணும்? பிர மாணம் எது? பிரமேயம் எது? பிரமாதா யார்? (சத்தியமான வழி எது? அடையும் லயம் எது? அடைய இச்சைப் படுகிறவன் யார்?")

பெரிய நம்பி பதில் சொன்னார்: "பிரமாணம் (அதாவது சத்தியமானது) இப்பொழுது உமக்கு உபதேசித்த த்வய மந்திரம். அதாவது எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லுவது. ப்ரமேயம் (அடையவேண்டிய லயம்) ஹஸ்திகிரியிலே காஞ்சியில் நிற்கும் எம்பெருமான். ப்ரமாதா (அடைய ஆசைப்படுகிறவர்) நீர்தான். ஆகவே த்வயமாகிற மந்திரத்தைக் கொண்டு பெருமாளை சேவிக்க வாரும்."

இந்த உபதேசங்களும் விளக்கங்களும் முடிந்த பிறகு பெரியநம்பி இளையாழ்வாருடன் காஞ்சிபுரம் சென்று திருக்கச்சி நம்பியையும் அழைத்துக்கொண்டு வரதராஜப் பெருமாளை சேவித்தார். பிறகு ஸ்ரீ ராமாநுஜரின் வேண்டு கோளின்படி அவரது இல்லத்திலேயே தங்கவும் முடிவு செய்தார். ஸ்ரீராமாநுஜரும் பேருவகை எய்தி தமது இல்லத்தில் மேல் பாதியை ஒழித்துவிட, பெரியநம்பியும் தமது மனைவியை ஸ்ரீரங்கத்திலிருந்து வரவழைத்து, அங்கு குடியேறி இளையாழ்வாருக்கு திராவிட வேத பிரபந்தங் களை விளக்கி அருளலானார்.

இப்படி ஸ்ரீராமாநுஜர் பிரபந்த காலட்சேபம் பண்ணுகின்ற காலத்தில் பெருமாளுக்கு எண்ணெய்க்

காப்பு சாத்த வந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் ஸ்ரீராமாநுஜர் இல்லம் வந்து மிகவும் பசியாயிருக்கிறதென்று சொல்ல, ஸ்ரீராமாநுஜர் தமது மனையாளைப் பார்த்து, "இந்த பிராம்மணனுக்கு ஏதாவது அமுது இருந்தால் போடு" என்றார். "சிறிதும் இல்லை" என்று விடை பகர்ந்தாள் தஞ்சமாம்பாள். ஸ்ரீ வைஷ்ணவர் போய் விட்டார். பிறகு உள்ளே சென்று பார்த்த ஸ்ரீராமாநுஜர் சாதம் நிரம்ப இருப்பதைப் பார்த்து மனம் நொந்தார். எதன் மேலும் வெறுப்புக் கொள்ளாத சாந்தசீலரான ஸ்ரீராமாநுஜர் அன்று மனைவி மீது பெரு வெறுப்பு கொண்டார்.

மாதங்கள் ஓடின. பெரியநம்பி ஒரு நாள் இல்லாத சமயத்தில் வாயில் கிணற்றடியில் ஸ்ரீராமாநுஜர் மனைவிக்கும் பெரிய நம்பிகள் மனைவிக்கும் பெரிய சண்டை ஏற்பட்டது. அந்த சமயம் ஸ்ரீராமாநுஜர் ஊரில் இல்லை. ஏதோ அலுவலாக ஸ்ரீபெரும்பூதூர் போயிருந்தார்.

தஞ்சமாம்பாளால் தூற்றப்பட்ட பெரியநம்பி மனைவி அவர் வந்ததும் விஷயத்தைச் சொன்னாள். உடனடியாக மூட்டை கட்டிய நம்பி தமது மனைவியுடன் அன்றே ஸ்ரீரங்கத்துக்குப் பயணமானார். குருவைத் தரிசிக்கும் ஆவலுடன் திரும்பி வந்த ஸ்ரீராமாநுஜர் இல்லத்தில் பெரிய நம்பி குடும்பம் இல்லாததைக் கண்டு "ஸ்வாமி எங்கே?" என்று விசாரித்தார்.

அங்கிருந்தவர்கள் நடந்ததைச் சொல்ல ஸ்ரீராமாநுஜர் கோபத்தால் மத்திய கால சூரியனைப் போல் கொதித்தெழுந்தார். தமது மனைவியை அணுகி "அடீ பாவி! எத்தனை பாகவத அபராதங்களை என் மேல் சுமத்தி விட்டாய். முதலில் திருக்கச்சி நம்பியின் சேஷத்தை நான் புசிக்காதபடி செய்தாய். இரண்டாவது, பசித்த ஏழை

வைஷ்ணவனுக்கு உணவு மறுத்தாய். இப்பொழுது எனது குருவையே விரட்டி விட்டாய். இன்னும் என்னென்ன பாவங்களை என் தலைமீது சுமத்தப் போகிறாய்?" என்று சீறினார். என்றும் கோபத்தை அறியாத கணவன் கோபத்தைக் கண்டு தஞ்சமாம்பாள் நடுங்கினாள்.

அன்றே மனத்தினால் துறவறம் பூண்டார் ஸ்ரீராமா நுஜர். அதை நிச்சயமாக்கிக்கொள்ள உபாயம் ஒன்றையும் கடைப்பிடித்தார்.





# 13. ஸ்ரீ ராமானுஜர் துறவறம்

துறவிகளில் மூன்று வகை உண்டு. ஆசாபாசங்களை அறவே அறுத்து பகவானுடைய சேவையொன்றிலேயே மனத்தை திடமாக நிறுத்திவிடும் துறவிகள் ஒரு வகை. காஷாயம் தரித்துக் கொண்டு பிறகு ஏன் இந்த ஆசிரமத்தில் சிக்கிக் கொண்டோம் என்று சஞ்சலப் பட்டு திண்டாடும் துறவிகள் ஒரு வகை. வேஷத்தினால் துறவியாகி, அந்த துறவறத்துக்குப் பின்பு குடும்ப ஆசை முன்னை விட அதிகமாகி, தமது பிள்ளை பெண்களின் கலியாணம் முதலிய விஷயங்களில் தீவிர சிரத்தை காட்டி மனத்தில் எல்லா கிரகஸ்தர்களையும் விட அதிக கிரகஸ்தர்களாகும் சம்சார சந்நியாசிகள் ஒருவகை.

ஆனால் ஸ்ரீராமானுஜர் மேற்கொண்ட துறவறம் அப்பழுக்கற்றது. "விடுமின் முற்றவும்" என்ற நம்மாழ்வார் வாக்குப் படி பந்தங்கள் அனைத்தையும் உதறி முதலில் மனத்தினால் சந்நியாசியானார். மனத்தில் உறுதி ஏற்பட்ட பின்பு அதை செயல்படுத்துவது ஸ்ரீராமானுஜருக்கு பிரமாத மான விஷயமல்ல. ஆனால் எதிரிகளிடத்தும் கருணை காட்டும் இதயமுள்ள ஸ்ரீராமானுஜர் மனைவியை பகிரங்க மாகத் தண்டிக்கவோ, அடித்து விரட்டவோ இஷ்டப்பட வில்லை. முள்ளின் மேல் போட்ட வேஷ்டியை மிக ஜாக்கிரதையாக எடுக்கத் தீர்மானித்தார். அதற்காக ஒரு

உபாயத்தையும் கைப்பிடித்தார். தஞ்சமாம்பாளால் உணவு மறுக்கப்பட்ட ஒரு வைஷ்ணவரை அழைத்து "ஸ்வாமி! உமக்கு எனது மனவி உணவு மறுத்தாளல்லவா?" என்று வினவினார்.

"ஆம்" என்றார் ஸ்வாமி வெறுப்புடன்.

"எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டார் ஸ்ரீராமானுஜர்.

"என்ன உதவி?"

"மீண்டும் ஒரு முறை என் மனைவி கையால் உண வருந்த வேணும்."

"முடியாது. மீண்டும் அவமானப்பட என்னால் முடியாது."

"இம்முறை கிடைக்கப்போவது அவமானமல்ல. வெகுமானம். நான் ஒரு கடிதம் கொடுக்கிறேன். அதைக் கொண்டு என் மனைவியிடம் கொடும். அவள் பெற்றோர் ஊரிலிருந்து இப்பொழுதுதான் வந்ததாகச் சொல்லும்" என்ற ஸ்ரீராமானுஜரின் வாக்கியத்தைக் கேட்ட பிராம் மணர் பிரமித்தார். ஸ்ரீராமானுஜர் ஏதோ பெரிய திட்டத்துக்கு அடிகோலுகிறார் என்பதைப் புரிந்து கொண்டு சம்மதித்தார்.

ஸ்ரீராமானுஜர் கோவிலில் உட்கார்ந்தவாறே தமது மாமனார் எழுதுவதுபோல் ஒரு கடிதம் எழுதினார். தஞ்சமாம்பாளின் சகோதரனுக்கு விவாகமென்றும் உடனடியாக இருவரும் வரவேணுமென்றும் தமது மாமனார் எழுதியதுபோல் ஒரு கடிதம் எழுதி அந்தணர் கையில் கொடுத்து, "ஸ்வாமி! தேவரீர் அடியவன் கிருகத் திற்குச் சென்று அடியேன் மாமனார் ஊரிலிருந்து வருவ தாகத் தெரிவிக்க வேணும். நான் வாங்கித் தரும் வேஷ்டி, புடவை, புஷ்பம், வெற்றிலை, பாக்கு, பழங்களை எனது மாமனார் அனுப்பியதாகச் சொல்லவேண்டும். பிறகு

நடப்பதைப் பாரும். இந்தக் கடிதத்தையும் தஞ்சமாம்பாளி டம் கொடுக்கவேணும்" என்று வேண்டிக் கொண்டார். பிறகு கடை வீதிக்குச் சென்று வேஷ்டி, புடவை, புஷ்பம் பழம், பாக்கு, வெற்றிலை முதலியவற்றை வாங்கிப் பிராம்மணரிடம் கொடுத்தார்.

அந்த ஸ்ரீவைஷ்ணவரும் மிகுந்த சந்துஷ்டியுடன் ஸ்ரீராமானுஜர் இல்லத்தை நோக்கிச் சென்று கதவைத் தட்டினார். தஞ்சமாம்பாள் கதவைத் திறந்து தீவிழி விழித்தாள். "எங்கு வந்தீர்?" என்று உஷ்ணமாக வின வினாள்.

பிராம்மணர் தமது நடிப்பின் திறமையைக் காட்டி னார். "அம்மணி! அடியவன் தங்கள் திருத் தகப்பனார் ஊருக்குப் போயிருந்தேன், ஒரு சேதியும் கொண்டு வந்தேன்" என்றார்.

தஞ்சமாம்பாள் இரு கதவுகளையும் திறந்தாள். "ஸ்வாமி வாசலில் நின்றுகொண்டு பேசலாமா! உள்ளே வாருங்கள்" என்று முகமலர்ச்சியுடன் அழைத்தாள்.

பிராமணர் தமது மூட்டையுடன் உள்ளே சென்று கூடத்து ஊஞ்சலில் அமர்ந்தார். "அம்மணி! இரண்டு தட்டுகள் கொண்டு வாருங்கள்" என்றார்.

தஞ்சமாம்பாள் அவர் கூறியபடிச் செய்ய, அந்த பிராம்மணர் மூட்டையை அவிழ்த்து, புடவை, வேஷ்டி, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றை வெகு அலங்காரமாக வைத்தார். பிறகு "அம்மணி! எடுத்துக்கொள்ளுங்கள்" என்றார்.

"இதெல்லாம் என்ன, ஸ்வாமி" என்று வியப்புத் தாங்காமல் கேட்டாள் தஞ்சமாம்பாள்.

"உங்கள் தகப்பனார் கொடுத்தார். உங்கள் சகோதரருக்கு விவாகம். உங்களையும் உங்கள் பர்த்தாவை யும் தவறாமல் வரச் சொன்னார். முகூர்த்தம் அருகிலிருப்ப

தால் அவர் நேரில் வர முடியவில்லையாம். இதோ அவர் கொடுத்திருக்கும் கடிதம்" என்று கூறிக் கடிதத்தை தஞ்சமாம்பாளிடம் கொடுத்தார்.

பிறந்தகத்து வரிசையையும் திருமண அழைப்பையும் கண்ட தஞ்சமாம்பாள் மகிழ்ச்சியின் எல்லையை எய்தினாள். முன்பு இதே பிராமணனுக்கு, தான் உணவு மறுத்ததை மறந்தாள். செய்த அபசாரங்களையெல்லாம் மறந்தாள்.

"ஸ்வாமி! முன்பொருகால் நான் செய்த அபசாரத்தை மன்னிக்க வேண்டும். எப்படியும் பெண் புத்தியல்லவா?" என்று தன்னை நொந்து கொண்டாள். "இங்கு அமுது செய்துவிட்டுத்தான் போக வேண்டும். ஒரு நொடியில் தளிகை ஆகிவிடும்" என்றாள்.

தளிகை பண்ணுவதில் இணையற்ற தஞ்சமாம்பாள் தளிகையை வெகு சீக்கிரம் முடித்து அந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு உணவையும் பரிமாறினாள். அவர் சாப்பிடுகையில் தனது பிறந்தகத்து விஷயங்கள் பலவற்றையும் விசாரித்தாள். ஸ்ரீவைஷ்ணவர் தஞ்சமாம்பாளின் பிறந்தகத்தை பார்த்ததில்லையாகையால் சமயோசிதமாகப் பதில்களைச் சொன்னார் அங்கு கிளம்பியவர் கோவிலுக்கு வந்து ஸ்ரீராமானுஜரைச் சந்தித்து நடந்த விவரங்களைச் சொன்னார்.

ஸ்ரீராமானுஜர் புன்முறுவல் கொண்டார். தமக்கு உதவியதற்காக ஸ்ரீ வைஷ்ணவருக்கு நன்றி தெரிவித்தார். பின்பு ஏதுமறியாதவர்போல் இல்லம் வந்தார். தஞ்சமாம்பாள் அவரை எதிர்கொண்டு *திருவடி சோதிக்கத் தீர்த்தம் கொண்டு வந்து கொடுத்துப் பலவிதத்திலும் உபசரித்து உள்ளே அழைத்துச் சென்றாள். பிறகு அவருக்கு *அமுது படைக்கும்போது மெதுவாக சகோதரன் திருமணத்தைப் பற்றி பிரஸ்தாபித்தாள்.

---

* *திருவடி சோதிப்பது - கால் அலம்புவது, அமுது படைப்பது சாதம் போடுவது.*

ஸ்ரீராமானுஜர் உற்சாகம் காட்டினார். அவர் சாப்பிட்டு முடித்ததும், "தஞ்சா! நீ இன்றே புறப்பட்டு விடு" என்று கூறினார்.

"நீங்கள் வரவேண்டாமா? ஆத்து மாப்பிள்ளை இல்லாமல் கல்யாணமா?" என்று கொஞ்சினாள் தஞ்சமாம்பாள்.

"என்ன அப்படிக் கேட்டுவிட்டாய் தஞ்சா? அவசியம் வருவேன்: இங்கு அவசர வேலை இருக்கிறது. அதை முடித்துக்கொண்டு சமயத்துக்கு வந்துசேருவேன்!" என்றார். "எனக்காக நீ தாமதிக்காதே. முன்னதாகப் போய்விடு" என்றும் கூறினார்.

அன்றே தஞ்சமாம்பாளை வண்டி கட்டி பிறந்தகத்துக்கு அனுப்பி வைத்தார் ஸ்ரீராமானுஜர். தஞ்சமாம்பாளின் வண்டி ஊர் எல்லையைக் கடந்ததும் ஸ்ரீராமானுஜர் நேராகக் கோவிலுக்குச் சென்று பேரருளாளர் முன்பு நின்றார். "அடியேனுக்கு சந்நியாச ஆசிரமம் சித்திக்க அருள வேணும்" என்று பிரார்த்தித்தார்.

அன்று சந்நிதியில் திருக்கச்சி நம்பியும் காஞ்சியின் ஸ்ரீ வைஷ்ணவர்களும் நிரம்பியிருந்தனர். "ராமானுஜரே! நீர் உள்ளளவும் திரிதண்ட காஷாயாதிகளைத் தரிக்கக்கடவீர்" என்று பெருமாள் ஆக்ஞாபித்தார். "இன்று முதல் நீர் இராமானுசமுனி என்ற திருநாமத்தையும் பெறுகிறீர்" என்றும் அனுக்கிரகித்தார். பிறகு "திருக்கச்சி நம்பி! நம் இராமானுசனை நல்லதொரு மடத்திலே வைத்து வாரும்" என்று திருக்கச்சி நம்பிக்கும் எம்பெருமான் கட்டளையிட்டார்.

ஸ்ரீவைஷ்ணவ தர்சன நிர்வாகத்துக்காகப் பிறந்த ஸ்ரீராமானுஜர் அன்றே திரிதண்ட காஷாயாதிகளை அணிந்து தமக்கு ஏற்படுத்தப்பட்ட மடத்தில் எழுந்தருளினார்.



# 14. ஆரம்ப சீடர்கள்

ஸ்ரீராமானுஜர் சன்னியாசியான அந்தக் கணத்தி லேயே குடும்பத்தை அறவே மறந்து, ஆசிரம அபி விருத்தியிலும் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தைத் திடப் படுத்தவும் விஸ்தரிக்கவும் அவசியமான பணிகளில் தமது சிந்தை முழுவதையும் செலுத்தலானார். ஸ்ரீ ராமானுஜர் வரலாற்றில் எந்த இடத்திலும் தஞ்சமாம்பாள் மீண்டும் தலை காட்டாததே அவரது அப்பழுக்கற்ற துறவறத்துக்குச் சான்று.

பேரருளாளன் ஆக்ஞைப்படி திருக்கச்சி நம்பி காட்டிய மடத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீராமானுஜர், ஸ்ரீ ஆளவந்தாரைப் பற்றி நினைத்து, அவர் தனது பந்தங்களை ஒவ்வொன்றாக அறுத்து தம்மை ஆட்கொண்ட விந்தையை எண்ணினார். அதிகமாகக் காலம் கடத்தாமல் அவரது கடைசிக் கோரிக்கைகளைச் செயலாக்க வேண்டிய அவசியத்தையும் உணர்ந்தார். அந்த மகத்தான பணிக்கு வேண்டிய உதவியைப் பற்றியும் எண்ணமிட்டார். அவரு டைய எண்ணங்கள் அவரது ஒன்றுவிட்ட சகோதரனும் யாதவப் பிரகாசரிடம் பள்ளித் தோழனுமாயிருந்த கோவிந்தன் மீது திரும்பின. "கோவிந்தன் அசைக்க முடி யாத வைராக்கியமுடையவன் சாஸ்திரங்களில் நல்ல பயிற்சி

உடையவன். எனக்கு மிகவும் அனுகூலன். உலகப் பற்று களை அறுத்த விரக்தன். அவனே ஸ்ரீ வைஷ்ணவத்தைப் பரப்பும் பெரும் சேவையில் எனக்குத் துணை நிற்க வல்லவன் நல்லவன்" என்று எண்ணமிட்ட ஸ்ரீராமானுஜர் "இப்பேர்பட்டவன் ஸ்ரீவைஷ்ணவ நன்மார்க்கத்திலிருந்து நழுவிவிட்டானே, அவனை யார் திருத்தி அழைத்து வர முடியும்?" என்று சிந்தித்தார். அவருக்கு வழியும் புலப் பட்டது. திருவேங்கடமுடையானை சதா வழிபட்டுக் கொண்டிருக்கும் ஸ்ரீசைல பூர்ணரான பெரிய திருமலை நம்பியைவிட வேறு யாரும் கோவிந்தனைத் திருத்தவோ, திருப்பவோ முடியாதென்று தீர்மானித்து திருமலை நம்பிக்குத் தூது விடுத்தார். "எப்படியாவது கோவிந்தனை நம்மிடம் சேர்ப்பிக்க வேண்டும்" என்று ஒரு ஸ்ரீ வைஷ்ண வரிடம் சொல்லியனுப்பினார். தம்மால் இயன்றதைச் செய்வதாகப் பெரிய திருமலை நம்பியும் பதில் செய்தி யனுப்பினார்.

இதற்கிடையில் ஸ்ரீ ராமானுஜர் மடம் துரிதமாக விரிவடையலாயிற்று. மகத்தான மாணிக்கங்கள் இரண்டு அவருடைய மடத்தில் சேர்ந்து தங்கள் ஆத்மாக்களையும் மடத்தின் சிறப்பையும் உயர்த்தின. அந்த மாணிக்கங்களில் ஒன்று தாசரதி என்னும் முதலியாண்டான். இன்னொன்று திருமறுமார்பன் என்கிற திருநாமத்தையுடைய கூரத்து ஆழ்வான்.

தாசரதி என்ற இயற்பெயருடைய முதலியாண்டான் ஸ்ரீ ராமானுஜரின் சகோதரியான பூமிப்பிராட்டியாருக்கும் புருஷமங்கலம் அனந்தத் தீக்ஷதருக்கும் பிறந்தவர். வாதூல கோத்திரத்தவர். 105 ஆண்டுகாலம் வாழ்ந்தவர். முதலி யாண்டான் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றவர் பிற் காலத்தில் ஸ்ரீராமானுஜருடைய திரிதண்டமென்றும், அவரது பாதுகையென்றும் அழைக்கப் பட்டவர். இப் பேர்ப்பட்ட மகான் ஸ்ரீராமானுஜர் துறவறம் எய்திய

செய்தியைக் கேட்டதும் ஸ்ரீராமானுஜர் மடத்துக்கு வந்து சேர்ந்தார்.

ஸ்ரீராமானுஜர் சந்நியாசத்தைக் கேட்ட ஹாரீத கோத்ரத்தவரும் காஞ்சிக்கு அடுத்த கூரம் என்ற ஊரில் வசித்து வந்தவருமான பெரும் செல்வந்தரான திருமறு மார்பன் என்பவரும் ஸ்ரீராமானுஜர் மடத்தில் கைங்கர்யம் செய்ய தமது ஊரிலிருந்து புறப்பட்டார். பிற்காலத்தில் இவர் கூரத்தாழ்வான் என்று பிரசித்தியானவர். ஸ்ரீராமானு ஜரிடம் சேவை செய்யவேண்டுமென்ற ஆசையால் தனங்களையும் நிலன்களையும் விட்டு காஞ்சீபுரத்துக்குப் பயணமானார். அவர் மனைவியும் அவரைத் தொடர்ந் தாள். ஒரு காட்டு மார்க்கத்தில் வருகையில் அவரது மனைவியார் "பயமாயிருக்கிறது" என்று ஆழ்வானிடம் சொல்ல அவர் நகைத்து, "மடியில் கனமிருந்தால்தான் வழியில் பயம். ஏதாவது கொண்டு வந்திருக்கிறாயா?" என்று வினவினார்.

"'ஏதும் கொண்டு வரவில்லை. தேவரீர் தினம் சாப்பி டும் தங்கப்பாத்திரத்தை மட்டும் கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள் கூரத்து தேவி.

"அதை இப்படிக் கொடு" என்று ஆழ்வான் கையை நீட்டினார்.

மனைவி மடியிலிருந்து எடுத்துக் கொடுத்த அந்த பொற் கிண்ணத்தை வாங்கிய கூரத்தாழ்வான் அதை தூரத்தில் எறிந்து, "இனி பயம் இல்லை வா" என்று அழைத்துக் கொண்டு காஞ்சிமாநகர் வந்து சேர்ந்தார்.

இப்படியாக முதலியாண்டானும் கூரத்தாழ்வானும் ஸ்ரீராமானுஜர் திருவடிகளில் ஆசிரயித்துத் தங்களை மடத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று விண்ணப் பம் செய்ய ஸ்ரீராமானுஜர் அவ்விருவருக்கும் பஞ்ச ஸம்ஸ்

காரங்களைச் செய்து தமது சீடர்களாக ஏற்றுக் கொண்டார்.

இன்னொரு விசித்திரமும் காஞ்சியில் நிகழ்ந்தது. ஸ்ரீராமானுஜர் தத்துவம் எங்கும் வளர்ந்ததால் ஏக தண்டி சந்நியாசியான யாதவப் பிரகாசருடைய தாயாரும் தனது மகனது நிலையைக் கண்டு வருந்தினாள். "யாதவப் பிரகாசா! நீயும் எல்லோரையும் போல் ஸ்ரீராமானுஜனிடம் சேர்ந்து நல்ல வழிக்குப் போகக் கூடாதா?" என்று ஒரு நாள் கேட்டாள்.

யாதவப் பிரகாசர் உடனடியாக இணங்கவில்லை. "அம்மா! நான் குடுமியை விட்டேன். பூணூலை நீக்கி விட்டேன். இதற்கெல்லாம் பிராயச்சித்தம் பூமியைப் பிரதக்ஷணம் பண்ணுவதுதான். இந்த வயோதிக காலத்தில் நான் எப்படி அதைச் செய்வேன்?" என்று கேட்டார்.

அன்றிரவு, யாதவப் பிரகாசர் உறங்குகையில் தேவப் பெருமாள் அவர் கனவில் தோன்றி "யாதவப் பிரகாசா! கவலைப்படாதே! ஸ்ரீராமானுஜனை பிரதட்சிணம் செய். அது பூமியை வலம் வந்ததற்கு சமம்" என்று கூறி மறைந்தார்.

இதனால் சந்துஷ்டி மிகுந்த மனத்துடன் மறுநாள் எழுந்த யாதவப்பிரகாசர் கனவு சரியாயிருக்குமா என்ற சிந்தனையில் திருக்கச்சி நம்பியிடம் சென்று, "நம்பி என் மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அது சரியா என்று பெருமாளைக் கேட்கிறீர்களா?" என்று கேட்டார். விவரத்தைச் சொல்லவில்லை யாதவப் பிரகாசர்.

அன்றிரவு திருக்கச்சி நம்பி பெருமாளிடம் இதைக் கேட்டபோது "கனவில் கண்டது உண்மைதான் என்று சொல்" என்று கூறினார் பெருமாள்.

இதை மறுநாள் நம்பி யாதவப் பிரகாசரிடம் தெரி விக்க, யாதவப் பிரகாசர் மேற்கொண்டு தாமதிக்கவில்லை.

நேராகத் தமது பழைய மாணவரிடம் சென்று அவர் காலில் விழுந்தார். பிறகு அவரைப் பிரதட்சிணம் செய்து தண்டனிட்டார். ஸ்ரீராமானுஜரும் அவருக்குத் திரிதண்ட கஷாயம் அளித்து அவருக்குக் கோவிந்த ஜீயர் என்ற பட்டமும் கொடுத்தார்.

பிறகு சொன்னார் ஸ்ரீராமானுஜர், "ஜீயரே! உமது ஆழ்ந்த படிப்பு வீணாகக் கூடாது. சன்னியாசிகளின் கடமைகளைப் பற்றி ஒரு நூல் இயற்றும்" என்று.

"கட்டளைப்படி" என்றார் முதலில் குருவாயிருந்து பிறகு சீடனான யாதவப்பிரகாசர். ஸ்ரீராமானுஜர் உத்தரவுப்படி "யதிதர்ம ஸமுச்சயம்" என்ற நூலை பதினொரு அத்தியாயங்களில் இயற்றினார்.





# 15. இசைக்கு இசைந்த இறைவன்

யதிராஜரான ஸ்ரீராமானுஜருக்கு ஒரு காலத்தில் குருவாயிருந்து, கொலைத் தொழில் வரையில் செல்லும் புத்தியைப் பெற்றிருந்த யாதவப் பிரகாசர், அதே யதி ராஜரின் குணங்களுக்கும் ஞான விசேஷத்துக்கும் அடிமையாகி, யதிராஜரின் சீடராகத் திரிதண்டத்தையும் காஷாயத்தையும் ஏற்று கோவிந்த ஜீயர் எனும் சிறப்புப் பெயருடன் நல் வாழ்வு வாழ்ந்து, யதிராஜர் கட்டளைப்படி யதிதர்ம ஸமுச்சயம் என்ற நூலையும் எழுதி முடித்து சிலகாலம் குரு பக்திக்கு ஆட்பட்டிருந்து அதன் விளைவாக கடைசியில் உத்தமமான பரம பதத்தை அடைந்தார்.

இப்படி எதிரிகளையும் ஈர்க்கவல்ல சக்தியுடைய ஸ்ரீராமானுஜர் கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் மீமாம்ஸா சாஸ்திரத்தைப் போதித்துக்கொண்டு காஞ்சியில் இருந்த காலத்தில் அவரது ஆசிரம விசேஷங்களும், ஸ்ரீ வைஷ்ணவ பிரசார சக்தியும் ஸ்ரீரங்கத்துக்கும் எட்டவே, அங்கிருந்த ஸ்ரீ ஆளவந்தாரின் சீடர்கள் எப்படியும் ஸ்ரீராமானுஜரை அழைத்து வந்து ஸ்ரீ ஆளவந்தாரின் பீடத்திலே ஏற்றிவைக்க வேண்டுமென்ற ஆசை நிரம்பப் பெற்றவர்களாய் பெரிய பெருமாளின் சந்நிதிக்குச் சென்று "ஸ்ரீராமானுஜர் இங்கு வந்து நிரந்தரமாக வசிக்க கிருபை

செய்யவேண்டும்" எனப் பிரார்த்திக்கவே பெருமாளும், சங்கீதத்தாலும் நாட்டியத்தாலும் எவரையும் வசீகரிக்கச் செய்யும் சக்தி வாய்ந்த திருவரங்கப் பெருமாள் அரையரை அந்தப் பணிக்கு ஏவ, அரையரும் பெருமாளைத் தெண்டனிட்டுக் காஞ்சிக்குக் கிளம்பினார். இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழையும் கரை கண்ட திருவரங்கப் பெருமாளரையர் தாம் எடுத்துக் கொண்டிருக்கும் பணி யின் கஷ்டத்தை உணர்ந்தவரானாலும். "புல்லையும் பிரம்மாஸ்திரமாக்கி காகாசுரனை மூவுலகமும் ஓடவிட்ட பரந்தாமன் இந்த புல்லையும் ஒரு பொருட்டாக எண்ணிய தால் சக்தியையும் அவனே அளிப்பான்" எனக் கருதிக் கொண்டும் அரங்கனைத் தியானித்துக் கொண்டும் பயணம் செய்து ஸத்யவ்ரத க்ஷேத்ரமான காஞ்சி மாநகரை அடைந்தார்.

முத்தமிழ்க் கலைஞரின் வருகை பற்றி முன்னமே அறிந்த வரந்தரும் பெருமாளைரையர் என்ற காஞ்சி அரை யரும் அவரை எதிர்கொண்டு தமது திருமாளிகைக்கு அழைத்துச் சென்றார். மறுநாள் விடியற்காலையில் வரத ராஜப் பெருமாளை சேவிக்க காஞ்சி அரையருடன் சென்ற ஸ்ரீரங்கம் அரையர் பேரருளாளனின் சேவையைக் கண்டு அதில் மூழ்கினார். கச்சிக்கு வாய்த்தான் என்கிற திருமண்ட பத்திலே வரதராஜப் பெருமாள் முன்பு கோவில் ஊழியர் களும் இதர சேவார்த்திகளும் கூட்டமாய் நிற்க, திருக்கச்சி நம்பி பெருமாளுக்குக் கவரி வீச, ஸ்ரீராமானுஜர் வரத ராஜாஷ்டகத்தை அனுசந்திக்க, திரிலோக சக்ரவர்த்தியாய் காட்சியளித்த வரதராஜனுடைய புண்ய சதஸின் ஓரமாய் நின்றார் அரையர். ஆனால் அவரைக் கண்டுவிட்ட திருக் கச்சி நம்பிகள் ஓடோடி வந்து பெருமாளின் அருகிலே அவரை அழைத்துச் செல்ல அங்கு அரையருக்குத் தீர்த்தம் பிரசாதங்கள் அளிக்கப்பட்டு சடகோபமும் சாதிக்கப் படவே திருவரங்கப் பெருமாளரையர் "உன் அருள்

என்னே?" என்று மெய் மறந்து நின்றார். பிறகு பெருமாளுடைய முகத்திலிருந்த பாட உத்தரவு வர திருவரங்கப் பெருமாளரையர் மெள்ள முத்தமிழ்க் கலைகளை அருட் கணைகளாகத் தொடுக்கலானார்.

"என்னெஞ்சமேயான் என் சென்னியான்" என்ற பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதியை இன்னிசையிலே குழைத்து பாடத் துவங்கினார். பிறகு அதிலே அவரே மூழ்கி ஆடவும் துவங்கினார். அடுத்து "பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர் கொல் யானறியேன்" என்ற திருமங்கை மன்னனின் பெரிய திருமொழிப்பாடலும் இப்படியே இதர ஆழ்வார்களின் பாடல்கள் பலவும் இசை யமுதத்திலே இழைந்து வந்தன. திருவரங்கப் பெருமாளரையர் ஆழ்வார்களின் அமுதத் தமிழிலே, அந்தத் தமிழ் எடுத்தளித்த தேனிலும் இனிய பாடல்களிலே மெய் மறந்தார். அவர் தமது இனிமையான சாரீரத்திலே, ராகஸுதாரஸத்திலே, ஆழ்வார்களின் இயற்றமிழைச் சுவையுடன் உச்சரித்தும், அந்தத் தமிழ்ப் பாடல்களிலே தோய்ந்து அந்தர் வாகினியாக (உள்ளூர) பிரவகித்துக் கொண்டிருந்த இசையையும் கலந்து, அபிநயம் பிடித்ததாலே, ஆடியதாலே, நாட்டியத்தமிழுக்கும் இடங் கொடுத்துப் பேரருளாளர் சதஸிலே சுழன்றார்.

ஆத்மாவை சாதாரணமாகவே தொடும் சக்தி வாய்ந்த ஆழ்வார்களின் பாடல்கள், அன்று திருவரங்கப் பெருமாளரையரின் பக்தியில் தோய்ந்த தேனான சாரீரத்தாலும், இஷ்டப்படி வளைந்து முத்திரைகளைப் பொறித்த சரீர விசேஷத்தாலும் வைகுண்டத்தையே அங்கு சிருஷ்டித்து விட்டபடியால், சபை உருகி நின்றது. அரையரின் அசைவுக்கு, அவரது சரீரத்தில் இசைவுக்கு, பாவ நாட்டியத்துக்கு இதயங்களைப் பறிகொடுத்தது சதஸ். சதஸ் மட்டும் பறி கொடுத்தால் அரையர் வந்த காரியம் நிறைவேறியிருக்காது.

'வேதானாம் ஸாம வேதோஸ்மி' - வேதங்களில் நான் ஸாம வேதமாகிறேன், என்று கீதையில் கூறிய பகவான் அன்று அதற்கு அத்தாட்சி காட்டுவான் போல், ஸாம வேதத்திலிருந்து பிறந்து வளர்ந்த சங்கீதத்துக்கும், சங்கீதத்தின் அங்கமான நாட்டியத்துக்கும் 'தனது திருவுள்ளத்தை பறி கொடுத்தான். தனது திருவாழியால் (சக்கராயுதத்தால்) மிகப் பெரிய ராக்ஷஸர்களையெல்லாம் அழித்திருக்கும் பிறர்க்கு அரிய வித்தகனான எம்பெருமான், அன்று முத்தமிழ் வித்தகரான திருவரங்கப் பெருமாளரையருக்கு ஆட்பட்டு நின்றான். அவருக்குத் தான் சாத்திக் கொண்டிருந்த திருமுகத்தின் தாழ்வடம், திருப்பரியட்டம் சத்ர சாமரங்கள் அனைத்தையும் கொடுக்கக் கட்டளையிட்டான். அரையர் அவற்றை ஏற்க மறுத்தார். "நாயகனே, இவையொன்றிலும் எனக்கு ஆசையில்லை" என்று சொன்னார். "நான் வேண்டுவதைத் தர வேண்டும்" என்றும் விண்ணப்பித்தார்.

பத்துடை அடியவர்க்கு எளியவனான பகவான் "உமக்கு வேண்டியதைக் கேளும். தருகிறோம்" என்று வாக்குக் கொடுத்தார்.

திருவரங்கப் பெருமாளரையர் மெய் சிலிர்த்தார். ஸ்ரீராமானுஜரைக் காட்டி, "இவரை அடியேனுக்குத் தர வேணும்" என்றார்.

வரதராஜன், "அப்பொழுதே அறியவில்லையே நான். இவரைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் கேளும்" என்றார்.

"வரதராஜா! எம்பெருமானே! 'ராமோ த்விர் நாபிபாஷதே' ராமன் இரண்டாவது வார்த்தை பேச மாட்டான். சத்தியமான ஒரே சொல்லைத்தான் சொல்லுவான். இப்படியிருக்க தேவரீர் இப்படி இரண்டு வார்த்தை பேசலாமா?" எனக் கேட்டார்.

பரம பக்தரான ஸ்ரீராமானுஜரைப் பிரிய மனமில்லாத பேரருளாளப் பெருமாள், "சரி! உமது இஷ்டப்படியே அழைத்துப்போம்" என்று வரம் அருள திருவரங்கப் பெரு மாளரையர் ஸ்ரீராமானுஜர் கையைப் பிடித்துக்கொண்டு "பெருமாள் உத்தரவாகி விட்டது. வாரும்" என்று அழைத்தார்.

வரதராஜனைப் பிரிய அப்பொழுதும் மனமில்லாத உடையவர் கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் நோக்கி "நீங்களிருவரும் நமது மடத்துக்குச் சென்று நமது திருவாராதனமூர்த்தியான பேரருளாளரையும் அது சம்பந்தமான வட்டில்கள் முதலியவற்றையும் கொண்டு வாருங்கள்" என்று பணிக்க அவர்கள் இருவரும் மடத்துக்குச் சென்று ஸ்வாமி ஆக்ஞைப்படி பெருமாளை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு வர, ஸ்ரீராமானுஜர் ஸ்ரீரங்கத்துக்குத் தமது சீடர்களான கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் உடனழைத்துக்கொண்டு பயணப் பட்டார். திருக்கச்சி நம்பி அவர்களைக் காஞ்சி எல்லை வரை கொண்டுவிட்டு விடை பெற்றுத் திரும்பினார்.

ஸ்ரீராமானுஜரை வரவேற்க ஸ்ரீரங்கமே திரண்டு நின்றது. அரங்கனால் நியமிக்கப்பட்டு, சேனைமுதலியார். பெரியநம்பி முதலான அடியார்களும், மற்ற சீடர்கள், ஏகாங்கிகள் முதலிய ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருங்கூட்டம் வடதிருக்காவிரிக்கரை அருகே வந்தது. ஸ்ரீராமானுஜரும், சேனை முதலியாரையும், பெரிய நம்பிகளையும் தெண்ட னிட்டு அந்தப் பெரிய கூட்டம் பின் தொடர வீதிகளை வலம் வந்து கோவிலுக்குள் புகுந்தார். எந்தப் பகவானைக் கண்டு அனைத்து ஆழ்வார்களும் பரவசத்துடன் பாடினார் களோ அந்த அழகிய மணவாளனும் திருக்கைத்தலத்திலே புறப்பாடாகி யதிராஜரை எதிர்கொண்டான்.





# 16. கோவில் நிர்வாகம்

ஸமுத்திரம் போன்ற ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியால் வரவேற்கப்பட்டு வட திருக்காவேரியிலிருந்து பெரும் ஊர்வலமாக அந்தக் கோஷ்டி தொடர்ந்துவர, கொடி, மதிளையும் தாமோதரன் திருக்கோபுரத்தையும் கிட்டி, சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, வீதிகளைப் பிரத க்ஷிணம் செய்து கோவிலுக்குள்ளே எழுந்தருளி பலி பீடத்தருகில் சேவித்து, தாயாரை சேவித்துவிட்டு, சந்திர புஷ்கரணியிலே தீர்த்தம் ஸ்வீகரித்து ப்ரணவாகாரமான விமானத்தையும் தரிசித்து அழகிய மணவாளன் திரு மண்டபத்தே எழுந்தருளியதைக் கண்டு அவன் ஸௌலப் யத்தை (அடியார்க்கு சுலபனாயிருக்கும் தன்மை) நினைத்து ஆனந்தக் கண்ணீர் பெருக சிறிது நேரம் சிலையென நின்றார். பின்பு பெருமாளை விழுந்து சேவித்து எழுந்து பெருமாளுடனே எம்பெருமான் திருப்பள்ளி அறையிலே புகுந்து நெஞ்ச மெல்லாம் அவனிடம் ஆட்பட்டு நின்றார். "அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று திருப்பாணாழ்வார் கடைசியாகச் சொன்ன பாசுரத்தை நினைத்து, "எத்தனை உண்மை! எத்தனை உண்மை!" என்று அரவணைப் பள்ளி கொண்டி ருந்த பெருமாளை சேவித்த வண்ணம் அங்கிருந்து அகல

இஷ்டமில்லாமலும் கண்களை பெருமாளை விட்டு அகற்றாமலும் நின்றார். பிறகு உணர்வு வந்தபோது எம் பெருமான் தன்னை கைத்தலத்தில் புறப்பட்டு எதிர் கொண்டதை நினைத்துத் திருப் பல்லாண்டையும் ஸ்ரீ ஆள வந்தார் சுலோகத்தையும் பாடி பெருமாளைப் பிரார்த்தித்து, "அப்பனே! இந்த ஏழையை எதிர் கொள்ள நீ வரவேணுமா?" என்று இறைஞ்சினார்.

பெரிய பெருமாளும் தமது திருக்கண்ணாலே ஸ்ரீராமானுஜரை கடாட்சித்து, தனது கமல வாய் திறந்து "ராமானுஜா! என்னைக் காண எத்தனை தூரம் வந்திருக் கிறீர்? உம்மை எதிர் கொள்ள நாம் வந்தது ஒரு பொருட்டோ?" என்று கூறி "ராமானுஜா! கடல் சூழ்ந்த மண்ணுலகையும் விண்ணுலகையும் ஆகிய இரு விபூதிகளை யும் நாமே பாதுகாத்து வந்தோம். அந்தச் சுமையை, உபய விபூதிச் செல்வத்தை உமக்கும் உம்மைச் சேர்ந்தவர் களுக்கும் தந்தோம். அதை ஏற்று நீ வரித்து நம்முடைய வீட்டில் கார்யத்தை யெல்லாம் ஆராய்ந்து நடத்தும். இனி உம்மை அனைவரும் உடையவர் என்று கொண்டாடுவர்" என்று ஆக்ஞாபித்தருளினார்.

பெருமாள் நியமனத்தைக் கேட்ட உடையவர் பெரிய நம்பியை நோக்கித் திரும்பி, "இத்தனை பெருமையும் தேவரீர் திருவடி சம்பந்த விசேஷமல்லவா?" என்று விண்ணப்பம் செய்தார்.

உடையவரை மேற்கொண்டு பேசவிட்டால் தன்னை மேலும் புகழ்ந்து தர்ம சங்கடத்துக்குள்ளாக்கி விடப் போகிறார் என்ற பயத்தால் பெரிய நம்பி உடையவரைப் பார்த்து "ஸ்ரீராமானுஜரே! பின்னால் ஒரு மகான் வருவார். அப்பொழுது 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்று நம்மாழ்வார் முன்பு சாதித்து இன்று உண்மையாயிற்று என்று கூறி இனி பெருமாள் நியமனப்படிக் கார்யத்தில் பிரவேசிக்கலாமே என்று சுட்டிக் காட்ட, அங்கிருந்து எல்

லோருடனும் பெரிய திருமண்டபத்துக்கு எழுந்தருளினார் ஸ்ரீராமாநுஜர். அன்றே அங்கேயே கோயில் நிர்வாகத்தைச் சீர்திருத்தும் பணியில் இறங்கினார்.

நிர்வாக சீர்திருத்தத்தில் இறங்கு முன்பு முதன் முதலில் யார் - யார் என்ன கைங்கர்யம் செய்கிறார்கள் என்பதை விசாரித்தார். அவரவர் பணிகளைக் கேட்டதும் அந்தந்தப் பணியாட்களை நேரில் பார்வையிட்டு ஆராய்ந்தார். அமுதுபடி, சாத்துப்படி. திருமாலை. திருவிளக்குகள் இவற்றையெல்லாம் பார்த்து, கணக்கெடுத்து ஆராய்ந்த, பிறகு திருவாரதனத்துக்கு வேண்டிய அனைத்தையும் ஆராய்ந்து அவை குறைவற நடப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். பிறகு கோவில் சிப்பந்திகளையும் அவரவர் பணிகளையும் நிர்ணயித்து எந்தெந்த இடத்தில் எத்தனை கொத்துகள் தேவை என்பதையும் தீர்மானித்தார். பிறகு கோவில் நந்தவனங்களை ஆராய்ந்து அங்குள்ள செடிகளை பராமரிக்க ஏற்பாடுகள் செய்தார். பிறகு இதையெல்லாம் குறைவற நடத்த அகளங்க நாட்டாழ்வான் என்பவரைத் தமக்கு சிஷ்யனாக்கி, கோவில் பணியாட்களுக்கு மேல் காவலராக நியமித்தார்.

இப்படிக் கோவிலில் ஒவ்வொரு இடத்தையும் சீர் திருத்திக் குறையொன்றுமில்லாத நிர்வாகத்தை ஏற்படுத்தி, நித்யோத்ஸவம், பக்ஷத்து உத்ஸவம், மாத உத்ஸவம், வருஷோத்ஸவம், இவை காலம் தவறாமல் முறையாக நடக்க ஏற்பாடு செய்தார்.

இப்படிக் கோவில் நிர்வாகத்தை நிர்விக்னமாகவும் சிறப்பாகவும் நடத்திக் கொண்டு போன உடையவரின் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியிருந்தது. இருப்பினும் அந்த ஆனந்தத்தில் ஒரு குறையும் இருந்தது. தமது தம்பியான கோவிந்தன் பரம உத்தமமான ஸ்ரீ வைஷ்ணவ தர்சனப் பாதையிலிருந்து இன்னொரு வழிக்குத் திரும்பி

விட்டானே என்ற கிலேசம் இருந்ததால் அவனைத் திருத்தி ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்துக்குத் திருப்பத் தீர்மானம் செய்துகொண்டார். அதைப் பற்றிப் பெரிய திருமலை நம்பிக்கும் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மூலம் செய்தியனுப்பினார்.

"பூர்வாசிரமத்தில் அடியேனுடைய சகோதரனும் தேவரீர் மருமானுமான கோவிந்தன் திசை தப்பி யிருக்கிறானே, அவனைத் திருத்த வேண்டாமோ?" என்று கேட்டனுப்பினார்.

அந்தப் பணியின் கஷ்டத்தைப் பெரிய திருமலை நம்பி உணர்ந்தேயிருந்தார். உள்ளங்கை கொணர்ந்த நாயனாரைத் திருப்புவது அத்தனை சுலபமல்லவென்றாலும், சுமையை உடையவர் திருவடியிலே போட்டு, திருமலையிலிருந்து திருக்காளத்திக்குக் கிளம்பினார் பெரிய திருமலை நம்பி.





# 17. முதல் வித்து

ஸ்ரீராமானுஜரைப் பற்றி நினைக்கும்போதோ, எழுதும் போதோ அவருக்கு முன்னாலும் அவரைப் போன்ற ஈடு இணையற்ற மகான் தோன்றியதில்லை, பின்னாலும் தோன்றப் போவதில்லை என்ற முடிவுக்கே வருகிறோம். அவருக்கு முன்பு தோன்றிய மகான்கள், எந்த சமயத்தவராயிருந்தாலும் சரி, ஏதாவது ஒரு பாதையில் சிறந்தவர்களாயிருந்தார்கள். எல்லாப் பாதைகளிலும் சிறந்து, முன்னால் சென்றோர்க்கு பின்னால் வந்த பெரு விளக்காய், பின்னால் தோன்றினார்க்கு கலங்கரை விளக்க மாய் இருந்தவர்கள் யாருமில்லை என்று சொன்னால். அது சத்திய வாக்கியமே தவிர, வீண் பாராட்டாக அமையாது.

ஸ்ரீ ராமானுஜருக்கு முன்பு பெரிய சந்நியாசிகள் இருந்திருக்கிறார்கள்; நிர்வாகிகளாக இருந்ததில்லை. பிற மதத்திலிருந்து தமது மதத்துக்கு மக்களைத் திருப்பியவர்கள் இருந்திருக்கிறார்கள்; ஆனால் அந்த மத மாற்றங்களில், ராஜாங்க செல்வாக்கு, பணம், அச்சுறுத்தல் இவை கலந்து விளையாடின. மதத்திலிருந்து ஒருவரைத் திருப்பும்போது உடலை மட்டுமின்றி மனத்தைத் திருத்தி மதமாற்றம் செய்தவர்கள் மிக சொற்பம். மதமாற்றம் என்பது இருக்கிற

மதஸ்தர்களை திருப்புவதாக அமைந்ததே தவிர சமுதாயத்தில் கீழ்த்தளத்திலிருந்தவர்கள் மேல்நிலைக்கு ஏற கை கொடுத்துதவ அமைந்ததில்லை.

ஸ்ரீராமானுஜர் இத்தனைக்கும் விலக்காக இருந்தார். அப்பழுக்கில்லாத சந்நியாசியாயிருந்தார். இணையற்ற நிர்வாகியாயிருந்தார். இறைவன் கோவில் திருப்பணியில் மதமாற்றத்திற்கு வலுக்கட்டாயமாக யாரையும் இழுத்ததில்லை. மனத்தை மாற்றி ஒளிவழியைக் காட்டி அவர்களாக ஸ்ரீ வைஷ்ணவத்துக்குத் திரும்ப வழிவகுத்தார். இதைத் தவிர சமுதாயம் வேறு தாம் வேறு என்று விலகி இருக்கவில்லை உடையவர். சமுதாயத்தில் தாமும் ஒருவன் என்பதை உணர்ந்தார். கீழ்த்தர மக்களைத் திருத்தி மேலே இழுத்து அவர்களுக்கும் பரமாத்மாவின் நிலையங்களில் இடமுண்டு என்பதை நிர்ணயம் செய்தார். நிர்ணயத்தோடு நில்லாமல் இந்தப் பணியை நிறைவேற்றவும் செய்தார்.

இப்பேர்ப்பட்ட உடையவர் ஸ்ரீரங்கன் முன்பே தமது நிர்வாகப்பணியை ஏற்று சீர்திருத்தத்தில் இறங்கிய சுருக்கம் ஏற்கனவே கொடுக்கப்பட்டது. அவர் செய்த நிர்வாகத்தை விவரமாகப் பார்த்தால் அவர் எப்பேர்ப்பட்ட மேதை என்பது புலனாகும். பெரிய பெருமாளான ஸ்ரீரங்க நாதனால் உபய விபூதிக்கும் சகல கார்யங்களுக்கும் நியமிக்கப்பட்ட உடையவருக்கு இருப்பிடத்தை எம்பெருமானே சுட்டிக் காட்டினான். திருவிக்கிரமன் திரு வீதியில் வடக்கு மாடவீதியின் கீழ்ப்பக்கத்தில் முதல் வீடான சேரன் மடத்தில் உடையவரை விட்டு வரும்படி பகவான் நியமிக்க அவருக்கு அந்த மடத்தையே ஸ்ரீ வைஷ்ணவ தாஸர்கள் ஏற்பாடு செய்து அங்கு உடையவரை இருக்கச் செய்தார்கள். மடத்திற்கு எழுந்தருளு வதற்கு முன்பாகக் கோவல் பணிகளை ஆராய்ந்து சில

சீர்திருத்தங்களை முடிவு செய்த ஸ்ரீராமானுஜர் மறுநாள் முதற்கொண்டு சீர்திருத்தங்களை சாங்கோபாங்கமாகச் செய்யலானார். யார் யாரை எந்தப் பணிக்கு நியமிக்கலாம் என்று தீர்மானமும் செய்து அந்த அலுவல்களுக்கு அவர்களை நியமித்தார்.

கூரத்தாழ்வானைத் தமக்குத் துணையாக வைதிக காரியங்களை நிர்வகிக்க நியமித்துக் கொண்டார். முதலி யாண்டானை கோவில் உள்துறை நிர்வாகியாக நியமித்தார். இப்படியே ஒவ்வொரு இடத்துக்கும் பரிசனங்களை நியமித்து பணியாளருக்கெல்லாம் தலைவராக அகளங்க நாட்டாழ்வானை நியமித்தார். இப்படி கோவிலின் பல துறைகளையும் சீர்திருத்தி வைகானஸ முறைப்படி இருந்த கோயிலை பாஞ்சராத்ர முறைக்கு மாற்றினார். இதற்காக ஐந்து பேருக்கு தீக்ஷை பண்ணி வைத்து அவர்களுக்கு மண்டல நாமம் என்ற பட்டப்பெயரையும் அளித்தார்.

இவற்றைத் தவிர நிர்வாகங்களைச் செய்தபோது உடையவர் தமது தமிழ்ப்பற்றையும் காட்டினார். நிர்வாகக் கிரமத்திலிருந்தவர்களுக்கு பாகவத நம்பிமார், கோயில் கணக்கன், சடகோபதாசன் என்ற தமிழ்ப் பெயர்களைச் சூட்டினார். இதன்றி அழகிய மணவாளன் சந்நிதி பணி யாளரை பத்து கொத்தாகப் பெருக்கினார். தமது திரு வடிகளை ஆராதித்தவர்களைத் திருப்பதியார் என்று அழைத்து ஒரு கொத்தாக அமைத்து அவர்களின் பணி களையும் நிர்ணயித்தார். இன்னும் மற்ற இடங்களில் பணி செய்தவர்களை, திருப்பணிச் செய்வார், உள்ளூரார், விண்ணப்பம் செய்வார், திருக்கரகக்கையார், என்று இப்படியாகக் கோயில் கைங்கர்ய பத்து பிரிவுகளுக்கும் தமிழ்ச் சிறப்புப் பெயர்களைக் கொடுத்து கோவிலை குறை வொன்றுமில்லாமல் முடிவு செய்த பின்பு ஸ்ரீ ராமானுஜர் வழிதவறிப் போயிருக்கும் கோவிந்தனை நினைத்து பெரிய திருமலை நம்பிகளுக்குச் செய்தியும் அனுப்பினார்.

ஸ்ரீராமானுஜர் கட்டளைப்படிக் கோவிந்தனைத் திருத்திப் பணி கொள்ளக் காளஹஸ்திக்குச் சென்றார் பெரிய திருமலை நம்பி.

கோவிந்தனைத் திருத்துவது அவ்வளவு சுலபமாயில்லை பெரிய திருமலை நம்பி எனும் ஸ்ரீசைலபூர்ணருக்கு. ஒரு பயணத்தில் காரியம் முடியாததால் மும்முறை போனார் ஸ்ரீசைலபூர்ணர் திருக்காளத்திக்கு. அவர் எப்படி கோவிந்தனைத் திரும்பவும் தங்கள் குலவொழுக்கத்துக்குத் திருப்பினார்? என்னென்ன வாதங்களைக் கிளப்பினார்? என்பதை அவருடன் சென்ற ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் ஸ்ரீரங்கத்துக்கு வந்து உடையவரிடம் விளக்கிச் சொன்னார்.

"கோவிந்தன் திருந்தித் திரும்பிவிட்டானா?" என்று ஸ்ரீராமானுஜர் கேட்டார்.

"திருந்திவிட்டார், திரும்பிவிட்டார்" என்றார் ஸ்ரீ வைஷ்ணவர்.

"திருத்தியது எப்படி?" என்று ஸ்ரீராமானுஜர் விசாரித்தார்.

"திருத்தியவை ஸ்ரீஆளவந்தாரின் ஸ்ரீசூக்தியும், திருவாய்மொழியின் பாசுரமும்" என்றார் அந்த ஸ்ரீவைஷ்ணவர்.

ஸ்ரீராமானுஜர் மெய்மறந்து, "இரண்டிலும் வேத சாஸ்திரங்கள் அடங்கிவிட்டன" என்று உவகை கொண்டார்.

"திருத்திய விதமும் உண்டு" என்றார் ஸ்ரீ வைஷ்ணவர்.

அந்த விசித்திரக் கதையை, தீக்ஷாதரனான கோவிந்தனை ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்துக்குத் திருப்பிய முறையை, ஸ்ரீ வைஷ்ணவர் ஸ்ரீராமானுஜருக்கு எடுத்துரைக்கலானார்:

"தேவரீர் கட்டளையிட்டதைக் கேட்டதும் பெரிய திருமலை நம்பி என்னையும் இன்னும் சில பாகவதர்களை

யும் அழைத்துக்கொண்டு திருக்காளத்திக்குப் பயணமாகி அந்த ஊர்க் குளத்தங்கரையில் ஒரு மரத்தடியிலே எழுந்தருளியிருந்தார். அப்பொழுது உள்ளங்கைக் கொணர்ந்த நாயனாரும் நீராடி நெற்றியில் திருநீறு அணிந்து கழுத்தில் ருத்ராட்ச மாலை தரித்து சிவப்பழமாய் ருத்திரமூர்த்திக்கு அபிஷேகம் செய்வதற்காகத் தீர்த்த மெடுக்க ஒரு குடத்துடன் ருத்ர ஸ்தோத்திரம் செய்து கொண்டு அந்தக் குளத்துக்கு வந்தார். பெரிய திருமலை நம்பி அவரை எழுந்து மறிக்கவுமில்லை, மருமான் என்ப தால் பெயர்கொண்டு அழைக்கவுமில்லை. 'கொன்றைச் சடையானை குளிர நீராட்டினால், என் உனக்குண்டாகும் பயன்?' என்று ஒரு பாசுரத்தை மட்டும் சேவித்தார். உள்ளங்கைக் கொணர்ந்த நாயனார் பெரிய திருமலை நம்பியை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்துவிட்டுக் குடத்தில் அபிஷேக ஜலம் மொண்டு விரைந்தார் காளத்திநாதன் கோவிலை நோக்கி. அவர் நடையில் அதிக வேகமிருந்தது. அந்த வேகத்தைக் கவனித்த பெரிய திருமலை நம்பி 'வித்து ஊன்றியாகிவிட்டது. முளைக்கட்டும். பிறகு வருவோம்' என்று கூறிக்கொண்டு மீண்டும் திருமலைக்கு வந்தார்..." இந்த இடத்தில் சிறிது நிதானித்தார் ஸ்ரீ வைஷ்ணவர்.

"வித்து முளைத்திருக்க வேண்டும். அதுவும் பெரிய திருமலை நம்பி ஊன்றியது. பாசுரவித்து பதிந்துவிட்டால் பலன் நிச்சயம்" என்றார் உடையவர்.

ஸ்ரீ வைஷ்ணவர் கதையை மேலும் தொடர்ந்தார்.





# 18. பிரபந்த பாணம்

மதமாற்றம் என்பது ஸ்ரீராமானுஜ சித்தாந்தத்தில் தற்கால முறைகளுக்கு முற்றிலும் மாறுபட்டது. பணத்தைக் கொடுத்தோ, பள்ளிக்கூடங்களைக் கட்டியோ, மருத்துவ வசதிகளையளித்தோ ஸ்ரீராமானுஜர் மதமாற்றம் செய்யவில்லை. ஏதாவது ஒருவித லஞ்சத்தைக் கொடுத்தோ லோகாயத விஷயங்களில் ஆசை காட்டியோ எவரையும் ஸ்ரீராமானுஜர் தமது மதத்திற்கு இழுக்கவில்லை. மத மாற்றம் என்பது மனமாற்றம் என்று ராமானுஜர் கருதினார். ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தை எடுத்துச் சொல்ல வேணும். அதில் ஆசைப்படுபவர்கள் தாமாகவே வந்துசேரவேணும் என்பது ஸ்ரீராமானுஜர் கருத்து. அப்படி சித்தாந்தத்தைச் சொல்வதற்கும் அவர் சந்திசந்தியாகப் போய் நின்று கொண்டு இரைந்து பாடியும் கூவியும் யாரையும் அழைக்கவில்லை. அவர் சித்தாந்தப் பிரசாரம் செய்யும் இடங்களில் மக்கள் தாமாகவே திரண்டார்கள். அவர்வழி நல்லதென மனதில் ஊன்றியவர்கள் ஸ்ரீவைஷ்ண வர்களானார்கள். இந்த மதமாற்றத்தில் ஜாதி பேதம் கிடையாது. ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தில் சகலரும் சமம் என்ற கொள்கையைப் பரப்பினார்; அனுஷ்டித்தும் காட்டினார். அதனால் மக்கள் பெருவாரியாக ஸ்ரீ வைஷ்ணவ மதத்தில் சேர்ந்தார்கள்.

இத்தகைய மதமாற்றத்தில், அதாவது மனமாற்றத்தில் ஸ்ரீராமானுஜர் யாரையும் வலுச்சண்டைக்கு இழுத்த தில்லை. வாதத்துக்கு வா என்று மார்தட்டியதில்லை. அகங் காரத்துக்கு ஸித்தாந்தத்தில் இடமில்லை என்று நினைத்தார். தாமாக வலுவில் வந்தவர்களோடு வாதம் செய்தார். அதுவும் எம்பெருமானை நினைத்து அவர்மேல் பொறுப்பை சுமத்தி வாதம் செய்தார். அவருக்குக் கிட்டிய வெற்றிகள் பல. அவர் வாதிக்கும்போது எம்பெருமான் வாதிக்கிறானா, எம்பெருமானார் வாதிக்கிறாரா என்று விளங்காத அளவுக்கு வாதத்தில் வேகமும் அமைதியும் கலந்திருந்தன. இப்படியாக சுருதி வாக்கியங்களினாலும் திவ்யப் பிரபந்த சூக்திகளினாலும் ஸ்ரீராமானுஜர் மத மாற்றம் - மனமாற்றம் செய்தார்.

இந்த வழியைத்தான் பெரிய திருமலை நம்பியும் கோவிந்தனைத் திருத்தி ஸ்ரீ வைஷ்ணவத்துக்குச் சேர்ப்பதில் கையாண்டார். திருக்காளத்திக்கு அவர் செய்த முதல் பயணத்தில் கோவிந்தன் மனத்தில் ஒரு பாசுரவித்தை ஊன்றிவிட்டு வந்தார். இரண்டாவது முறையும் சில நாட் கள் கழித்து பெரிய திருமலை நம்பி காளத்திக்குச் சென்றார். அந்தப் பயணத்தைப் பற்றியும் அவருடன் சென்ற பிராம்ம ணோத்தமர் ஸ்ரீராமானுஜரிடம் விவரிக்கலானார்.

“நாங்கள் இரண்டாவது முறை காளத்திக்குச் சென்ற பொழுது பெரிய திருமலை நம்பி, உள்ளங்கைக் கொணர்ந்த நாயானர் காளத்திநாதன் அபிஷேகத்துக்கு நீர் கொண்டு போகும் குளத்தடியிலிருந்த ஒரு ஆலமரத்தடியில் தங்கினார். நேரத்தை வீணாக்காமல் பெரிய திருமலை நம்பி எங்களுக்குத் திவ்யப்ரபந்தக் காலக்ஷேபம் சாதிக்கலானார். அப்போது அபிஷேக ஜலம் கொண்டுபோக நாயனார் குடமெடுத்து வந்தார். இம்முறை நம்பி காலக்ஷேபம் செய்வதை நிறுத்திக்கொள்ளவில்லை; நாயனார் தூரத்தில்

வரும்போதே பார்த்துவிட்டாராதலால் தம்மிடமிருந்த ஒரு ஓலை நறுக்கை எடுத்து அதில் ஆளவந்தாரின் சுலோக மொன்றை எழுதி நாயனார் வரும் வழியில் போட்டு வைத்தார்.

வேகமாக நீர் மொள்ள வந்த நாயனாரும் அந்த ஓலை யிடம் வந்ததும் ஒரு விநாடி நின்றார். பிறகு குனிந்து ஓலையை எடுத்து அதிலிருந்த சுலோகத்தை வாசித்தார். பிறகு ஓலையை அந்த இடத்திலேயே போட்டுவிட்டுக் குளத்தை நோக்கி நகர்ந்து விட்டார். குடத்தில் அபிஷேக நீர் மொண்டு திரும்பி வந்தபோது சிந்தனை வசப்பட்டிருந் தார். தீர்க்காலோசனையின் சாயை அவர் முகத்தில் விரவிக் கிடந்தது. ஓலையிருந்த இடத்தை அடைந்து அதை மீண்டும் எடுத்துப் படித்தார். பிறகு அந்த ஓலையுடன் பெரியநம்பியிடம் வந்து, "உங்கள் கையிலிருந்து நழுவி விட்ட பொருள் இதுவோ?" என்று கேட்டார் ஓலையைக் காட்டி.

பெரியநம்பி மருமானை ஏறெடுத்துப் பார்த்தார். பிறகு புன்முறுவல் கொண்டு அமைதியுடன் பதில் சொன்னார்: "மற்றவர்கள் பொருள் நழுவலாம். எங்கள் பொருள் நழுவும் பொருளல்ல" என்று.

கோவிந்தன் எனும் நாயனார் மாமனை நோக்கினார்.

"அது கிடக்கட்டும். நீங்கள் எல்லோரும் ஏன் ஒரு வழியில் செல்கிறீர்கள்?" என்று வினவினார்.

"வழி நல்லதாயிருக்கிறது; தெளிவாயிருக்கிறது; கலக்க மற்றதாயிருக்கிறது" என்றார் நம்பி.

மேலும் தொடர்ந்தது விவாதம். நாயனார் கேட்டார். "வழிகள் பலவுண்டோ?"

நம்பி : உண்டு. நல்ல பொக்கிஷத்தை உடையவன் நடக்க வேண்டிய வழி இதுதான்.

**நாயனார் :** நீங்கள் உங்கள் உறவினர்களை வழியனுப்ப வந்தீர்களோ?

**நம்பி :** இல்லை; கறவைப் பசுக்கள் பிடிக்க வந்தோம்.

**நாயனார் :** நல்ல அனுஷ்டானத்திலிருப்பவர்களுக்கு பசுவின் பாததூளி புனிதமானதல்லவா?

**நம்பி :** அது தேடுமிடத்தைப் பொறுத்தது. இடம் பார்த்துத் தேடுவதில்தான் குறை நிறைகள் புண்யபாவங்கள் சகலமும் இருக்கின்றன.

நாயனார் சிறிது சிந்தித்துவிட்டுக்கேட்டார். "குறுக்கு நெடுக்கானால் என்ன வித்தியாசம்?" என்று.

**நம்பி :** இயற்கைக்கும் செயற்கைக்கும் உள்ள வித்தியாசம்.

**நாயனார் :** இது நவீன வாதமோ?

**நம்பி :** அல்ல, புராதனமான வாதம்.

**நாயனார் :** இதற்குப் பூர்வ விசாரம் (முதல் ஆராய்ச்சி) ஏதும் கிடையாதோ?

**நம்பி :** ஆரம்பமுறைகளில் விசாரம் இல்லை. எது பரத்வம் என்பதில்தான் விசாரம். எது ஸ்திரம், எது ஸ்திர மற்றது என்பதில்தான் விசாரத்துக்கு இடம்.

இதற்குமேல் நாயனார் விவாதத்தில் இறங்கவில்லை. பெரிய திருமலை நம்பியை ஒருமுறை நோக்கிவிட்டு வேக மாகக் கோவிலை நோக்கி நடந்துவிட்டார்.

பெரிய திருமலை நம்பி நாயனாருடைய நடையைக் கவனித்தார். "இரண்டாவது வித்தையும் ஊன்றி ஜலமும் விட்டுவிட்டோம். இனி செடி முளைக்க வேண்டியது தான்" என்று கூறிவிட்டு எங்களுடன் திருப்பதிக்குத் திரும் பினார் - என்று கூறி நிறுத்தினார் பிராம்மணர்.

"அடுத்து என்ன?" என்று ராமானுஜர் கேட்டார்.

"சில நாட்கள் சென்றன. திடீரென ஒருநாள் பெரிய திருமலை நம்பி எங்களுடன் காளஹஸ்திக்குப் புறப் பட்டார். இம்முறை குளத்தண்டை சென்றாரில்லை. ஊருக்குப் புறம்பேயிருந்த ஒரு தோப்பில் தங்கினார். அங்கு நீராட்டத்தை முடித்துக்கொண்டு காலக்ஷேபம் ஸாதிக்கலா னார். அவர் பாசுரங்களை அநுஸந்திக்க ஆரம்பித்த சில நிமிடங்களுக்கெல்லாம் உள்ளங்கைக் கொணர்ந்த நாயனாரும் பூசைக்குப் பூக்கொய்ய அந்தத் தோட்டத்திற்கு வந்து மரத்தில் ஏறி புஷ்பங்களைப் பறிக்கலானார். அதைப் பெரிய திருமலை நம்பியும் பார்த்திருக்கவேண்டும். அன்று "திண்ணன்வீடு" என்ற திருவாய்மொழியை எங்களுக்கு உபதேசம் செய்தார். முதல் பாசுரத்தைக் கேட்டதுமே நாயனார் நம்பியிருந்த இடத்தருகே இருந்த மரத்தில் ஏறி பூ பறிக்கலானார். அவர் காதிலும் திருவாய் மொழிப் பாசுரங்கள் ஏறவே பூவை அரையும் குறையுமாகப் பறிக்க லானார் நாயனார்.

கடைசியாக நம்பி தமது பிரபந்தபாணத்தைத் தொடுத்தார்:

**தேவும் எப்பொருளும் படைக்க**
**பூவில் நான்முகனைப் படைத்த**
**தேவன் எம்பெருமானுக்கல்லால்**
**பூவும் பூசனையும் தகுமே**

என்ற பாசுரத்தை ஓதி விளக்கமும் சொல்லலானார். கேசவன் என்ற நாமம் பிறந்த காரணத்தையும் சொன்னார். 'க இதி ப்ரம்மனோ நாம, ஈசோஹம் ஸர்வ தேஹினாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவான்' என்று ஈசுவரனும் சொல்லுகிறார். 'க என்ற பிரம்மாவும் தேகம் படைத்தவர்களுக்கெல்லாம் ஈச்வரனான நானும்

உன்னிடமிருந்து உண்டானதால் உனக்குக் கேசவன்' என்று பெயர் என்று சிவன் கூறியதாக விளக்கமும் சொன்னார்.

நம்பி மீண்டும் சொன்னார். அப்படிப்பட்ட எம் பெருமானுக்கல்லாமல் பூவும் பூசனையும் தகுமே? (வேறு யாருக்காவது பூவும் பூசனையும் தகுமோ?) என்று சாதித்தார் உணர்ச்சி பொங்க. அவருடைய உணர்ச்சி, மரத்தின் மேலேயிருந்த கோவிந்தனையும் கொள்ளை கொண்டிருக்க வேண்டும். "வேறு யாருக்கும் தகாது, தகாது, தகாது" என்று கூவிக்கொண்டு, மரத்திலிருந்து குதித்துப் பெரிய திருமலை நம்பியின் பாதங்களில் விழுந்தான். மாறிய மனத்தினால் கண்கள் நீரைப் பெருக்கி பெரியதிருமலை நம்பியின் பாதங்களை நனைத்தன.

மருமகனை வாரியணைத்த பெரிய திருமலை நம்பி "நம்மாழ்வாரின் பிரபந்த பாணத்திலிருந்து யார் தப்ப முடியும்?" என்று உள்ளூர வினவிக் கொண்டார்.





## 19. இன்னொரு சமயம் பார்ப்போம்

ஜகத்காரண பூதனான எம்பெருமானைக் கண்ணி னுண் சிறுத்தாம்பினால் யசோதைப்பிராட்டி கட்டியது போல் பிரபந்தத்தின் ஒரே பாசுரத்தினால் கோவிந்தன் மனத்தைக் கட்டித் திருப்பி தமது திருவடியில் ஆச்ரயிக்கும் படிச் செய்து கொண்ட திருமலை நம்பி, தமது காலில் கண்ணீரும் கம்பலையுமாக விழுந்து கிடந்த மருமகனை வாரியணைத்து உச்சி முகந்து, "இனி புறப்படலாம் திருமலைக்கு" என்று அன்புடன் கூறினார். ஆனால் புறப் படுவது அத்தனை எளிதாயில்லை. உள்ளங்கைக் கொணர்ந்த நாயனார் ஸ்ரீ வைஷ்ணவ தாசராகிவிட்ட செய்தி வெகு சீக்கிரம் திருக்காளத்தியில் பரவி விடவே ஸ்தலத்தாரனைவரும் பெரிய திருமலை நம்பியிருக்குமிடம் வந்து "எங்களவரை நீர் எப்படி அழைத்துப் போகலாம்?" என்று தடை செய்தார்கள்.

பெரிய திருமலை நம்பி சிறிதும் சலனமற்ற திருஷ் டியை ஸ்தலத்தார் மீது திருப்பி "இவர் உங்களவரா, எங்களவரா என்பதை இவரையே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்ல ஸ்தலத்தார் கோவிந் தனைச் சூழ்ந்து கொண்டார்கள். "நாயனாரே! எங்களுடன் வாரும்" என்று கையையும் பிடித்து இழுத்தார்கள்.

கோவிந்தனும் சற்றே சினமுற்றவராய், "விடுங்கள் கையை" என்று கையை உதறி விடுவித்துக்கொண்டு தமது மடியிலிருந்த திருக்காளத்திநாதன் கர்ப்பக்கிரகத்தின் சாவி, இலச்சினை, மோதிரம் ஆகியவற்றை எடுத்து ஸ்தலத்தாரிடம் கொடுத்து "இன்றுடன் நமது பந்தங்கள் அறுந்து விட்டன" என்று சொன்னான்.

கோவிந்தனின் பதில் கேட்ட அவர்கள் கோபிக்கவில்லை. அவர்களில் தலைமையானவர் சொன்னார் திருமலை நம்பியை நோக்கி, "ஸ்வாமி, இதையெல்லாம் நாங்கள் நேற்றிரவே அறிந்தோம்" என்று.

"எப்படி அறிந்தீர்கள்?" நம்பி கேட்டார் வியப்புடன்.

ஸ்தலத்தாரின் முதல்வர் சொன்னார்:

"ஸ்வாமி! நேற்றிரவு காளத்திநாதர் எங்களுக்கு சொப்பனத்தில் சொன்னார்; பௌத்தர்கள், சாருவாகர்கள், பாஷண்டிகள் இவர்களால் சநாதன மதம் பலமாகத் தாக்கப்பட்டுத் திணறிக் கொண்டிருக்கிறது. முன்பொரு முறை இந்த நிலையை மாற்ற எம்பிரானே தத்தாத்ரேயராக அவதரித்தார். இப்பொழுது வேத தர்மங்களைக் காப்பாற்ற சேஷனையே ராமானுஜராக உலகுக்கு அனுப்பியிருக்கிறார். கருடனைக் கோவிந்தபட்டராகவும் சங்கு சக்கரங்களை தாசரதியும் ஸ்ரீவத்ஸாங்கர்களாகவும் அனுப்பியிருக்கிறார். இது நமக்கு உகப்பானதுதான். கோவிந்தபட்டர் காசியிலே தங்கிவிட நினைத்ததால் நாமே அவரது உள்ளங்கையில் தோன்றி இங்கு அழைத்து வந்தோம் என்று காளத்தி நாதர் சொன்னார். ஆகவே திருமலை நம்பியாரே! நீங்கள் அவரை அழைத்துச் செல்லுங்கள். அவருக்கு எல்லா நலன்களும் உண்டாகட்டும்."

அவர்கள் இப்படி உத்தரவு கொடுத்ததும் பெரிய திருமலை நம்பியும் நாங்களும் கோவிந்தனை அழைத்துக் கொண்டு திருமலை வந்து சேர்ந்தோம். அங்கு கோவிந்த

பட்டருக்கு பிராயச்சித்தங்கள் அனைத்தையும் செய்வித்து ஸ்ரீவைஷ்ணவ மதப்பணிக்குத் திருப்பினார் பெரிய திருமலை நம்பி. கோவிந்த பட்டர் ஸ்ரீ வைஷ்ணவ சேவையில் மும்முரமாக ஈடுபட்டார். இத்தனை நாள் நான் அங்குதானிருந்தேன். பெரிய திருமலை நம்பி கோவிந்தன் மன மாற்றத்தை தேவரீருக்குத் தெரிவிக்கும்படி ஆக்ஞாபித்த தால் நான் இங்கு வந்தேன்."

இப்படி பிராம்மணர் சொன்ன விவரங்களைக் கேட்ட ஸ்ரீராமானுஜர் பேருவகை கொண்டார். "நீர் சென்ற காரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு வந்தீர். இனி என் பக்கத்திலேயே இரும்" என்று பணிக்க பிராம்மணர் இளையாழ்வாருடனேயே தங்கினார்.

எதையும் தாமதிக்கவிடாத சுபாவமுள்ள ஸ்ரீராமானுஜர் கோவிந்தனைத் திருமலை நம்பி திருத்திப் பணி கொண்டதால் ஒரு காரியம் முடிந்துவிட்டதென்ற திருப்தியில் அடுத்த காரியத்துக்கு அடிகோலினார். பெரியநம்பியின் திருமாளிகைக்குச் சென்று அவர் திருவடிகளில் தெண்டனிட்டு, "ஸ்வாமி! மகானான ஸ்ரீ ஆளவந்தாரின் திருவடிகளில் உட்கார்ந்து உபதேசம் பெறும் பாக்கியத்தைப் பெற்றேனல்லேன். தங்கள் சீடனாகி அந்தக் குறையைத் தீர்த்துக் கொண்டேன். ஸ்வாமி! இனியும் தாமதிக்கலாகாது. அடியேனுக்கு ஸ்ரீ வைஷ்ணவ ரகஸ்யார்த்தங்களை உபதேசிக்கவேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

பெரிய நம்பி பெரிதும் மகிழ்ந்தார். அன்று முதல் த்வயத்தில் அர்த்தங்களைச் சொல்லலானார். 'இந்த த்வயமானது மந்திரங்களில் உயர்ந்தது. இதன் சக்திக்கு ஈடு இணை கிடையாது. வேதங்களின் ரஸம் இது. கர்மானுபந்தங்களை எரிக்கவல்லது. இதை அனுசந்தானம் செய்பவனுக்கு (பக்தியுடன் சொல்லுபவனுக்கு) வைதிகத் துறையில் ஏற்றமளிக்கிறது. மோக்ஷத்திற்கும் சாசுவதமான

ஆனந்தத்துக்கும் திறவுகோல் இது. இதில் ஊற்றமுடைய வனுக்கு மறு பிறப்பு கிடையாது” என்று அர்த்தங்களையும் சொல்லி த்வயத்தின் பெருமையையும் விவரித்தார் பெரிய நம்பி. மேலும் சொன்னார்: “இதில் நான் சொல்லாத தத்துவங்கள் உண்மைகள் வேறு இருக்கின்றன. அவற்றை அடைய திருக்கோஷ்டியூர் நம்பியிடம் செல்லும்” என்று.

இந்தக் கட்டளையை சிரமேற்கொண்ட ஸ்ரீராமானு ஜர் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் சென்று திருவடியில் விழுந்து, “ஸ்வாமி, திருமந்திரம், த்வயம் இவற்றின் ரகஸ்யார்த்தங்களை சாதிக்கவேணும்” என்று கேட்டார்.

திருக்கோஷ்டியூர் நம்பி முதலில் பிடிகொடுக்க வில்லை. “இன்னொரு சமயம் பார்ப்போம்” என்று கூறி விடை கொடுத்தார். “இன்னொரு சமயம் பார்ப்போம்” என்ற விடையைக் கூறி ஸ்ரீராமானுஜரைப் பதினெட்டு முறை இழுத்தடித்தார். இத்தனைக்கும் ஸ்ரீராமானுஜர் சளைக்கவில்லை.





# 20. எம்பெருமானார்

ஸ்ரீவைஷ்ணவ மதத்துக்கு அடிப்படையான ரகஸ்யார்த்தங்களைக் கேட்கத் திருக்கோட்டியூர் நம்பியிடம் பதினெட்டு முறை நடையாய் நடந்தும் "பிறகு பார்ப்போம்" என்றும் "ஆருக்கு என் சொல்லுகேன்' என்றும் பாராமுகமாயிருந்து விட்டதால் கிலேசமுற்ற ஸ்ரீராமாநுஜர் "எல்லாம் அவன் செயல்" என்று பகவான் மீது பாரத்தைப் போட்டுத் தமது கைங்கர்யங்களில் ஈடுபட்டிருந்தார். அந்த சமயத்தில் ஒரு நாள் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்கம் வந்து பெருமாளை சேவித்துக் கொண்டிருக்கும் போது பெருமாள் அர்ச்சகர் மேல் ஆவேசித்து "நம் இராமானுஜனுக்கு ரஹஸ்யார்த்தங்களை உபதேசியும்" என்று நியமித்தருளினார்.

பெருமாள் நியமனம் கேட்ட நம்பியும் "நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத் (உன்னிடம் ஒரு வருஷம் தொடர்ச்சியா யிருந்தாலொழிய ரஹஸ்யார்த்தங்களைச் சொல்ல வேண்டாம்) என்று தேவரீர்தானே கட்டளையிட்டது?" என்று கேட்டார்.

பெருமாள் சொன்னார்: "எதற்கும் ஒரு விலக்கு உண்டு. இராமானுஜர் சாதாரண சிஷ்யனல்ல. அவன் லக்ஷ்ய

புருஷன், லக்ஷ்ய சிஷ்யன். அவனிடமிருந்து எதையும் மறைக்க அவசியமில்லை."

இதைக் கேட்டதும் உள்ளம் குளிர்ந்த நம்பியும் ஸ்ரீராமானுஜன் பிரபாவத்தை எண்ணி வியந்து ஊருக்குச் செல்லுகையில் உடையவரைப் பார்த்து, "என் இருப்பிடம் வாரும்" என்று சொல்லிப் போனார். அப்படியே ஸ்ரீராமனுஜர் போயும் "இன்னொரு சமயம் வாரும்" என்ற பழைய பல்லவியையே நம்பி பாட ஸ்ரீராமானுஜரும் ஸ்ரீரங்கம் திரும்பினார். நம்பியே வரச் சொல்லிவிட்டு அவரே தம்மைத் திருப்பியனுப்பியதால் உள்ளம் நைந்த உடையவர் மிகவும் துக்காக்கிராந்தராய் தமது கடமைகளைச் செய்து வந்தார்.

சில நாட்கள் கழித்து திருக்கோட்டியூரைச் சேர்ந்த பிராம்மணர் ஒருவர் ஸ்ரீரங்கம் வந்து பெருமாளை சேவித்து ஸ்ரீராமானுஜரையும் பார்க்க, ஸ்ரீராமானுஜர் அவரிடம் தமது வருத்தத்தைத் தெரிவித்தார். "திருமுடியில் துளசி மாலையணிந்த எம்பெருமான் இப்படி என்னைச் சோதிப்பது அவனுக்குப் பெருமையளிக்காது" என்று பொருள் படும்படி 'பூந்துழாய் முடியார்க்குத் தகவல்ல, பொன்னாழிக் கையார்க்குத் தகவல்ல" என்று அந்த பிராம்மணரிடம் தெரிவித்தார். அப்பொழுதும் அவர் எம் பெருமானைக் குறை சொன்னாரே தவிர திருக்கோட்டியூர் நம்பியைக் குறைகூறவில்லை.

இதை அந்தப் பிராம்மணர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சொல்ல "இத்தனை பக்தியா இராமானுஜனுக்கு? சரி அவரைத் தண்டும் பவித்ரமும் மட்டும் தாங்கி வரச் சொல்லும்" என்று பணித்தார். இந்தச் செய்தியை அந்தப் பிராம்மணர் ஸ்ரீராமானுஜரிடம் சென்று தெரிவிக்க உடையவர் உள்ளம் பூரித்து முதலியாண்டானையும் கூரத் தாழ்வானையும் அழைத்துக்கொண்டு நம்பியிடம் சென்றார்.

மற்ற இருவரையும் பார்த்த நம்பி, "உம்மைத் தனியாகத் தானே வரச் சொன்னேன்?" என்று வினவினார்.

ஸ்ரீராமானுஜர் நம்பிக்குத் தலைவணங்கி, "தண்டும் பவித்திரமும் தாங்கி வரக் கட்டளையிட்டதாகப் பிராம் மணர் சொன்னார்" என்று தெரிவித்தார்.

"சொன்னது உண்டு" என்றார் நம்பி.

ஸ்ரீராமானுஜர் முகம் மலர்ந்தார். "தண்டும் பவித்ர முமாக இவர்களை அழைத்து வந்தேன்" என்று சொன் னார். முகமலர்ச்சி சொல் மலர்ச்சியிலும் ஒளிவிட.

திருக்கோட்டியூர் நம்பி மற்ற இருவரையும் ஒரு முறை நோக்கிவிட்டு ஸ்ரீராமானுஜரைப் பார்த்து, "இவர்களில் யார் தண்டு? யார் பவித்ரம்?" என்று கேட்டார்.

ஸ்ரீராமானுஜர் முதலியாண்டானைக் காட்டி "இவர் தண்டு" என்று கூறிவிட்டு, கூரத்தாழ்வானைக் காட்டி, "இவர் பவித்ரம்" என்றார்.

"அப்படியானால் இது இவர்களைத் தவிர வேறொரு வருக்கும் தெரிய வேண்டாம்" என்று எச்சரித்துவிட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் சதா ஜபிக்க வேண்டியதும், மஹாசக்தி வாய்ந்ததும், நலந்தரும் சொல்லுமான அஷ்டாக்ஷர மகா மந்திரத்தை உபதேசித்தருளினார். அத்துடன் "இதை யாருக்கும் சொல்ல வேண்டாம்" என்று எச்சரிக்கவும் செய்து ஊருக்குப் போக விடையும் கொடுத்தார்.

அஷ்டாக்ஷர மந்திர உபதேசத்தைக் குருவாயிலாகப் பெற்ற ஸ்ரீராமானுஜர் உடனடியாக ஊருக்குப் போக வில்லை. அந்த ஊரிலிருந்த ஸ்ரீசௌம்ய நாராயணப் பெருமாள் கோயிலுக்குச் சென்றார். அங்கு இதில் ஆசை யுடைய மக்களை எல்லாம் திரட்டி தாம் நம்பியிடம் உப தேசம் கேட்ட அஷ்டாக்ஷர மந்திரத்தை எல்லோருக்கும் உபதேசித்தார். அப்படி நலந்தரும் அந்தச் சொல்லை எல் லோருடனும் பங்கு கொண்டதால் மனநிறைவும் பெற்றார்.

தாம் மிக ரகஸ்யமாக வைத்திருந்த மகாமந்திரத்தை ஸ்ரீராமானுஜர் பொதுவுடைமையாக்கிவிட்டதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி திகைத்துப் போனார். உடனே தம்மை வந்து பார்க்கும்படி ஸ்ரீராமானுஜருக்குச் சொல்லி யனுப்பினார்.

கட்டளையைச் சிரமேற்கொண்டு அவசர அவசரமாக வந்து தெண்டனிட்டு நின்ற ஸ்ரீராமானுஜரைப் பார்த்து, "ராமானுஜா! நான் உனக்கு ரகஸ்யமாகப் போதித்த அஷ்டாக்ஷர மந்திரத்தைப் பெரிய கூட்டம் கூட்டி அதில் எல்லோருக்கும் உபதேசித்துவிட்டாயாமே? அது உண்மை தானா!" என்று கேட்டார் நம்பி.

"ஆம் ஸ்வாமி, சொன்னேன்; தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொன்னேன்" என்று பரமபக்தி யுடன் பதில் சொன்னார் ராமானுஜர்.

"உபதேசித்தபோது வேறு யாருக்கும் சொல்ல வேண்டாமென்று சொல்லவில்லை நான்?" என்று நம்பி கேட்டார்.

"ஆம் சொன்னீர்கள்" என்று ஸ்ரீராமானுஜர் ஒப்புக் கொண்டார்.

"எனது நியமனத்தை மறுத்து அதை பிரசாரம் செய்த உமக்கு என்ன பலன் கிடைக்கும் தெரியுமா?" என்று நம்பி மீண்டும் கேட்டார்.

"தெரியும். ஆசார்ய வார்த்தையை மீறினால் நரகம்" என்றார் ஸ்ரீராமானுஜர்.

"இதை அறிந்தும் சொல்லுவானேன்?" என்று கேட்டார் நம்பி.

ஸ்ரீராமானுஜர் பரம பக்தியுடன் தலைதாழ்த்தி, "ஸ்வாமி! இதனால் நான் ஒருவன்தானே நரகத்துக்குப் போவேன். மற்ற அத்தனை பேரும் தேவரீருடைய

திருவடித் தியானத்தோடு மந்திரத்தைச் சொல்லுகையாலே உஜ்ஜீவிப்பார்களே" என்று சொன்னார்.

இதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி பேசும் சக்தியை இழந்தார். ஸ்ரீராமானுஜரைத் தமது திருக் கண்களால் குளிரப் பார்த்தார். "அடடா! இத்தனைக் காலம் இந்தப் பரந்த நோக்கம் எனக்கு வரவில்லையே" என்று உள்ளூர எண்ணி உவந்து எழுந்து உடையவரைக் கட்டிக் கொண்டு, "நீரே எம்பெருமான். அவன் கருணா விலாசம் உம்மிடந்தானிருக்கிறது. எம்பெருமானாரே! வாரும்" என்று அருளிச் செய்தார்.

பிறகு அங்கு கூடியிருந்த மற்றவர்களையும் பார்த்து: "நாம் ஸ்ரீராமானுஜனுக்கு உபதேசித்தது வைதிக ஸிந்தாந்தம் என்றிருந்தது. இனிமேல் இந்த தரிசனம் எம்பெருமானார் தரிசனம் என்று அழைக்கப்படும். இனி மேல் நீங்களும் அப்படி அழையுங்கள்" என்று அருளிச் செய்தார்.

மேலும் சொன்னார் ஸ்ரீராமானுஜரை நோக்கி, "எம்பெருமானாரே! இதற்கு மேலும் சரம ரஹஸ்யார்த்தம் சொல்ல இருந்தேன். இத்துடன் நீர் திருப்தியாகிவிட்டீர்" என்று.

"ஸ்வாமி! தேவரீர் சொன்ன அர்த்தத்துக்கு மேல் இன்னொரு அர்த்தம் உண்டு என்று நினைத்தால் நான் நன்றி கெட்டவனாவேன்" என்று சொன்னார்.

"எம்பெருமானாரே! இப்பொழுது போய் இன்னொரு நாள் நீர் ஒருவர் மட்டுமே வாரும்" என்று நம்பி அருளிச் செய்ய ஸ்ரீராமானுஜர் குருவிடம் விடை கொண்டார்.

சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீராமானுஜர் தாம் மட்டும் நம்பியிடம் வந்து தெண்டனிட்டு நிற்க, நம்பி அவர் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு மேல்தளத்துக்குப் போய் படிக் கதவைத் தாளிட்டு ஸ்ரீராமானுஜரை ஏகாந்த

மாக வைத்துக்கொண்டு, "எம்பெருமானாரே! நான் இன்று செய்யும் உபதேசத்தை யாருக்கும் சொல்வதில்லையென்று என் திருவடி சாட்சியாகப் பிரமாணம் செய்யும்" என்றார். அப்படி உடையவர் பிரமாணம் செய்த பின்பு பரம ரஹஸ்யமான சரம ச்லோகத்தை நம்பி உபதேசித்தார். "இதை நாத்திகர் செவிபட சொல்ல வேண்டாம். யாருக்குமே சொல்ல வேண்டாம்" என்று கட்டளையும் இட்டார்.

"நான் நாத்திகருக்கு சொல்லமாட்டேன். பரம பாகவதனான கூரத்தாழ்வானுக்கு எப்படிச் சொல்லாதிருப் பேன்?" என்று கேட்டார் ஸ்ரீராமானுஜர்.

"அப்படி கூரத்தாழ்வானுக்கு இதைக் கேட்க ஆசையிருந்தால் ஒரு வருஷம் அவர் உமக்கு சிசுருஷை செய்த பிறகு சொல்லும்" என்று நம்பி ஆக்ஞாபித்தார்.

அந்த ஆக்ஞையுடன் எம்பெருமானார் ஸ்ரீரங்கம் வந்தது நடந்ததைக் கூரத்தாழ்வானிடம் சொல்ல மகா மேதாவியான கூரத்தாழ்வான் புன்முறுவல் கொண்டார். "ஒரு வருஷம் நான் சிசுருஷை செய்தால்தான் உபதேசம் பெறலாமா?" என்று வினவினார்.

"அப்படித்தான் ஆசார்யன் உத்தரவு" என்றார் உடையவர்.

"அப்படியானால் ஒரு வருஷம் இந்த சரீரம் நிலை யானது என்பது திருவுள்ளமோ?" என்று கூரத்தாழ்வார் கேட்டார்.

எம்பெருமானார் கூரத்தாழ்வானின் விரக்தியையும், உயிரின் நிலையற்ற தன்மையை அவர் சதா நினைத்திருப்ப தையும் எண்ணி. " என்ன செய்யலாம்?" என்று சிந்திக்க, கூரத்தாழ்வானே பரிகாரம் சொன்னார். "ஆசார்யர் திரு மாளிகை வாசலிலே ஒரு மாதம் உபவாசமிருந்தால் ஒரு

வருஷ சிசுருஷைக்கு சமம் என்று சாஸ்திரமிருக்கிறது" என்று கூறி அன்று முதல் உபவாசமிருக்கத் துவங்கினார்.

உபவாசம் முடிந்ததும் எம்பெருமானார் சரம ரஹஸ் யார்த்தத்தை அவருக்கு உபதேசித்தருளினார்.

ஆனால் முதலியாண்டானுக்கு உபதேசம் கிடைக்காத தால் அவர் பெரிதும் துயரமுற்றார். "நீர் நம்பியிடமே சென்று உபதேசம் பெறும்" என்று ஸ்ரீராமானுஜர் கூற முதலியாண்டான் திருக்கோட்டியூர் சென்றார். நம்பியை தெண்டனிட்டு "நான்தான் தாசரதி" என்றார்.

"ஆனால் என்ன?" நம்பி கேட்டார்.

"உபதேசம் பெற வந்தேன்" என்றார் ஆண்டான்.

"வித்யாகர்வம், பணகர்வம், ஜாதிகர்வம் மூன்றையும் உதறிவிடு. எம்பெருமானே உமக்கு வழிகாட்டுவார்" என்று நம்பி சொல்லி அவரை அனுப்பிவிட்டார்.

அதைக் கேட்டு ஒரு புது மனிதனாக முதலி யாண்டான் ஸ்ரீராமானுஜ கோஷ்டிக்குத் திரும்பினார்.





# 21. ஏகலவ்யன்

ஸ்ரீராமானுஜர் உத்தரவுப்படி திருக்கோட்டியூர் நம்பியிடத்தில் உபதேசம் கேட்கப்போய் "மூன்று கர்வங்களையும் அகற்றிவிடு, எம்பெருமானே உனக்கு வழிகாட்டுவார்" என்ற பதிலைப் பெற்று பரம அடக்கத் துடன் திரும்பிய முதலியாண்டானை மடத்து கோஷ்டியில் சந்தித்த உடையவர் அவர் நிலையைக் கண்டு பெரிதும் உவகை கொண்டார். "தமக்கு நிகரில்லையென்று தலை நிமிர்ந்து சென்ற முதலியாண்டான் எங்கே? முற்றும் மாறிய இந்த முதலியாண்டான் எங்கே?" என்று தமக்குத்தாமே திருப்தியடைந்த உடையவர், கோஷ்டியை நோக்கி "ஆண்டானைப் பாருங்கள். இங்கிருந்து சென்ற பழைய ஆண்டானா இவர்? எத்தனை அமைதி! எத்தனை அடக்கம்! முகத்தில் எத்தனை சாந்தம்! எத்தனை பரி பக்குவம்!" என்று கூறினார். "ஆண்டான்! நடந்ததைச் சொல்" என்றும் ஆக்ஞாபித்தார்.

முதலியாண்டான் நடந்ததை விவரமாகச் சொன்னார். "வித்யாகர்வம் (நம்மைவிடப் படித்தவன் யாருமில்லை என்ற மமதை), பணகர்வம் (நம்மைவிட பணக்காரன் யார் என்ற திமிர்), ஜாதிகர்வம் (நாம்தான் உயர்ந்த ஜாதி என்ற

கர்வம்) இம்மூன்றையும் அகற்று. எம்பெருமானே உமக்கு வழிகாட்டுவார் என்று அருளினார் நம்பி" என்று சொன்னார் முதலியாண்டான்.

உடையவர் அவரை மேலும் சோதிக்கக் கருதி "எம் பெருமானே வழிகாட்டுவார் என்றா சொன்னார்?" என்று வினவினார்.

"திருக்கோட்டியூர் நம்பி எம்பெருமான் என்று குறிப்பிட்டது எம்பெருமானாரான தேவரீரைத்தான் குறிப்பிட்டிருக்கவேண்டும். தேவரீரை முதலில் எம்பெரு மான் என்று அழைத்ததே அவர்தானே?" என்று சர்வ அடக்கத்துடன் சொன்னார் முதலியாண்டான்.

உடையவர் புன்முறுவலுடன் அவர்மீது தமது கருணைக் கண்களை நாட்டினார். "ஆண்டான்! உன்னை யும் ஆழ்வானையும் எனது திரிதண்டமென்றும், பவித்ர மென்றும் நம்பியிடம் சொன்னது இன்று ஊர்ஜித மாயிற்று" என்று உகப்புடன் கூறி அவருக்கும் அன்று முதல் அஷ்டாக்ஷர, சரமச்லோக ரஹஸ்யார்த்தங்களை உபதேசிக்கலானார்.

இப்படி உபதேசம் நடந்துகொண்டிருக்க, ஒரு நாள் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். ஒரு ஆசார்யனுடைய கிருபை எத்தனை தூரம் வழிகாட்டும் என்பதை திருக்கோட்டியூர் நம்பி அன்று நிரூபித்தார். ஸ்ரீராமானுஜனுக்குத் தாம் சொல்லிவைத்தது மட்டும் போதாதென்று அவருக்கு திருவாய்மொழியும் சொல்லிக் கொடுக்கத் தாமே ஏற்பாடு செய்தார். அதற்காக திருமாலை ஆண்டானிடம் சென்று "தேவரீர் உடையவருக்கு திருவாய் மொழியின் அர்த்தங்களை உபதேசிக்க வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

ஸ்ரீவைஷ்ணவத்தின் அஸ்திவாரமென்று கருதப்பட்ட வரும், ஸ்ரீஆளவந்தார் சிஷ்யர்களில் சிறந்தவருமான

திருக்கோட்டியூர் நம்பியே தம்மிடம் வந்து விண்ணப்பம் செய்ததால் மகிழ்ந்த திருமாலையாண்டான் அப்படியே செய்வதாக வாக்களிக்க, திருக்கோட்டியூர் நம்பி அவரை கைப்பிடியாக ஸ்ரீராமானுஜர் மடத்துக்கு அழைத்துக் கொண்டு வந்தார். அவர்களை வரவேற்றுத் தண்டனிட்டு தடக்கை கூப்பி நின்ற ஸ்ரீராமானுஜரைப் பார்த்த நம்பி "நீர், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய் மொழிக்கு அர்த்தம் கேளும்" என்று நியமித்தார். உடையவரை திரு மாலையாண்டான் திருக்கையிலே பிடித்துக் கொடுத்து "திருவாய்மொழியைத் தொடங்கும்" என்று சொல்லி திருக்கோட்டியூர் சென்றார்.

அன்று முதல் ஸ்ரீராமானுஜருக்கு திருவாய்மொழியை உபதேசிக்கத் தொடங்கிய திருமாலையாண்டான் வெகு சீக்கிரம் தம்மையும் மீறிய ஓர் அமானுஷ்ய புருஷனிடம் தாம் சிக்கிக்கொண்டதைப் புரிந்து கொண்டார். திரு மாலையாண்டான் உபதேசித்த சில வியாக்கியானங்களை மாற்றிச் சொல்லத் தொடங்கினார் உடையவர். "அறியாக் காலத்து" என்ற பாட்டுக்கு அர்த்தம் சொல்லுகையில் அதை எம்பிரான் மீது பக்தனுக்குள்ள ஒரு வருத்தமாக எடுத்துரைத்தார். "எம்பெருமானே! நான் கர்ப்பத்திலிருந்த போது, அதாவது லௌகிகத்தால் பாதிக்கப்படாத சமயத்தில், உன்னிடம் எனக்குள்ள பந்தத்தையும் முழுக்க உனக்கு நான் அடிமை என்ற ஞானத்தையும் உபதேசித்தாய். பிறகு என்னை மாமிசமாகிற சிறையில் தள்ளிவிட்டாய். அதனால் ஏற்கனவே கொடுத்த ஞானத்தையும் அழித்து விட்டாய்" என்று அந்தப் பாட்டுக்கு விளக்கம் சொன்னார்.

ஸ்ரீராமானுஜர் "பொருள் அப்படியிருக்க முடியாது" என்றார். "இதற்கு முந்திய பாட்டுகளும் பின்னாலிருக்கும் பாட்டுகளும் எம்பெருமானுடைய பரம கிருபையை பாராட்டுவதாயிருக்க பெருமானைக் குற்றம் சொல்வது போன்ற அப்ரீதியை நடுவிலிருக்கும் இந்தப் பாட்டு

சொல்ல முடியாது, சொன்னால் முன்பின் பாட்டுகளுக்கு இது ஒவ்வாது” என்று கூறினார்.

“அப்படியானால் அர்த்தம் எப்படியோ” என்று வின வினார் திருமாலையாண்டான்.

“இப்படியிருக்கலாம் பொருள்” என்று ஸ்ரீராமானுஜர் விளக்கினார். “பிறகு நான் அறியாமைக் கடலில் மூழ்கி விட்டேன். நீ அங்கும் வந்து என்னை ஆட்கொண்டு என் சிந்தையையும் இதயத்தையும் உன்பால் திருப்பினாய் என்றிருக்க வேண்டும் பொருள்” என்றார் ஸ்ரீராமானுஜர்.

“இது விச்வாமித்ர சிருஷ்டி, இந்த வியாக்கியானத்தை ஸ்ரீ ஆளவந்தாரிடம் கேட்டதில்லை” என்று கூறி அது முதல் திருவாய்மொழி சொல்லுவதையும் நிறுத்திக் கொண்டார் திருமாலை ஆண்டான். இந்த விவரம் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்கம் வந்து திருமாலை ஆண்டான் திருமாளிகைக்குச் சென்று, “என்ன ஸ்வாமி! திருவாய்மொழி நடக்கிறதோ?” என்று கேட்டார்.

“இல்லை” என்றார் ஆண்டான்.

“ஏன்?” என்று வினவினார் நம்பி.

“எனக்குத் தெரிந்ததெல்லாம் ஸ்ரீ ஆளவந்தார் சொல்லிக் கொடுத்த வியாக்கியானந்தான். ஸ்ரீராமானுஜர் சொந்தக் கற்பனையிலே வேறு அர்த்தங்களைச் சொல்லு கிறார். ஆகையால் நான் பாடம் சொல்வதை நிறுத்திக் கொண்டேன்” என்று ஆண்டானும் விவரித்தார்.

“ஆண்டான்! இந்த அர்த்தங்களை ஸ்ரீ ஆளவந்தார் சொல்ல நானே கேட்டிருக்கிறனே. தவிர ஸ்ரீராமானுஜன் உம்மிடம் பாடம் கேட்பது ஸ்ரீகிருஷ்ணன் சாந்தீபினி முனிவரிடம் பாடம் கேட்டது போலத்தான். ஆகையால் நீர் திருவாய்மொழியையும் முடித்து பிரபந்தம் முழுவதை யுமே பாடம் சொல்லி முடியும்” என்று நியமித்தார்.

ஆண்டானை அழைத்துக்கொண்டு வந்து மீண்டும் திருவாய்மொழி பாடத்தைத் துவக்கி வைத்தார்.

மேலும் பாடம் சொன்னபோதும் புது அர்த்தங்களை ஸ்ரீராமானுஜர் சொல்ல, "நீர் ஆளவந்தாரிடம் பாடம் கேட்டதில்லை. அவரிடம் பேசியதுகூட கிடையாது. ஆகவே ஆளவந்தார் இப்படி அருளிச் செய்தார் என்று எப்படிச் சொல்கிறீர்?" என்று ஆண்டான் வினவினார்.

இரத்தினச் சுருக்கமாக ஸ்ரீராமானுஜர் பதில் சொன்னார், "நான் ஸ்ரீ ஆளவந்தாருக்கு ஏகலவ்யன்" என்று.

அதைக் கேட்ட திருமாலையாண்டான் இவர் ஒரு தனி அவதாரம் என்று தண்டனிட்டார்.





# 22. பாடம் முடிந்தது, பொறாமை எழுந்தது

"துரோணருக்கு ஏகலவ்யன் எப்படியோ அப்படி ஆளவந்தாருக்கு அடியவன்" என்று எம்பெருமானார் சுட்டிக் காட்டியதும் திருமாலையாண்டான் வியப்பின் எல்லையை எய்தினார். ஸ்ரீஆளவந்தாரிடம் மானசீகமான குருபக்தியை ஏற்படுத்திக் கொண்டதாலே உடனிருந்து வாசித்த சீடர்களைவிட ஸ்ரீராமானுஜர் பரம உத்தம சீடராய் விளங்கியதையும், தாம் கேட்காத திருவாய் மொழிப் பொருளெல்லாம் உடையவர் மானசீக பக்தியாலே உணர்ந்து கொண்டதையும் கண்ட திருமாலையாண்டான், எப்பேர்ப்பட்ட உத்தம புருஷருக்குத் தாம் பாடம் சொல்லும் வாய்ப்பு கிடைத்தது என்று புளகாங்கிதம் எய்தினார். அத்துடன் திருக்கோட்டியூர் நம்பி சொன்ன உண்மையையும் எண்ணிப் பார்த்தார். "உம்மிடம் உடையவர் சீடராயிருப்பது சாந்தீபிநி முனிவரிடம் பரமாத்மா கிருஷ்ணன் சீடனாயிருந்ததற்கு சமானம்" என்று நம்பி சொன்னதில் எத்தனை பொருள் இருக்கிறது என்பதையும் புரிந்துகொண்டார். "கிருஷ்ண பரமாத்மா யாரிடமும் எப்பாடமும் கேட்க வேண்டியதில்லை. ஆனால் உலக ரீதிக்காகக் கேட்டார்" என்பதையும்

உணர்ந்த திருமாலையாண்டான், பகவானைவிட பெரிய ஒரு வ்யக்திக்கு தாம் பாடம் சொல்லிக் கொடுப்பதை எண்ணி - எண்ணி உளம் குளிர்ந்தார். கிருஷ்ணபகவான் சிருஷ்டி ரகசியத்தைப் போர்க்களத்தில் ஒரே ஒரு சீடனுக்கு (அர்ஜுனனுக்கு) மட்டும் உபதேசித்தார். ஆனால் ஸ்ரீராமானுஜர் திருவெட்டெழுத்து, சரம சுலோகார்த்தங்களை எல்லாம் திருக்கோட்டியூரில் எல்லோரையும் கூட்டி பலருக்கும் உபதேசித்தார். பகவானுடைய கருணையை விட பாகவதன் கருணை உயர்ந்ததல்லவா என்றும் சிந்தித்து, ஒரு மகா புருஷனுக்கு கேவலம் வியாஜத்துக்காக தாம் ஆசிரியனானதை எண்ணிப் பெருமை அடைந்தார் திருமாலையாண்டான். ஆகவே திருக்கோட்டியூர் நம்பி கூறியபடி திருவாய்மொழி பூராவையும், பிரபந்தங்கள் முழுவதையும் சொல்லிக் கொடுத்தார் ஸ்ரீராமானுஜருக்கு.

திருமாலையாண்டான் பாடம் முடிந்ததும் தமது குமாரனான சுந்தர பாகுவை உடையவரிடம் சீடப் பிள்ளையாக அமர்த்தினார். இது கேட்ட உடையவரின் பிரதம ஆசார்யரான பெரிய நம்பி பேருவகை கொண்டார். இருப்பினும் திருமாலையாண்டான் காலக்ஷேபத்துடன் ஸ்ரீராமானுஜரின் படிப்பு முடியவில்லை என்று நினைத்தார். ஆகவே ஸ்ரீராமானுஜர் பெரிய நம்பியை தண்டன் சமர்ப்பித்து நின்ற பொழுது பெரியநம்பி, "உடையவரே! நீர் கற்க வேண்டியன இன்னும் சில இருக்கின்றன. திருவரங்கப் பெருமாளரையரிடம் இன்னும் சில ரகஸ்யார்த்தங்கள் இருக்கின்றன. அவற்றையும் பாடம் செய்து கொள்ளும்" என்று பணித்தார்.

பிரதம குருவின் பணியை சிரமேற்கொண்ட ஸ்ரீராமானுஜர் அன்று முதல் திருவரங்கப் பெருமாளரையருக்குப் பணிவிடை புரிவதில் இறங்கினார். அரையர் பெருமான் முன்பு ஆடிப் பாடிவிட்டுக் களைத்து வருவதைக் கவனித்த உடையவர் அன்று முதல் அவர் வரண்ட

தொண்டைக்கு இதமாக நல்ல பசும்பாலில் குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், சீனி சேர்த்துக் காய்ச்சி ஒவ்வொரு இரவிலும் கொடுக்கலானார். தவிர, எம்பெருமான் முன்பு நடனமாடியதால் களைத்த உடலுக்கு நீராட்ட பிரதி தினம் சுக சாமக்கிரியைகளை சேர்த்து மஞ்சட்காப்பு அறைத்து உடலில் பூசி பக்குவமாக நீராட்டினார். அப்படி நீராட்டத் தின்போது ஒரு நாள் மஞ்சட்காப்பு சரியில்லாது போகவே அதைச் சிறிது பூசியதும் திருவரங்கப் பெருமாளரையர் லேசாக முகம் சுளித்தார். அதைக் கண்ட ஸ்ரீராமானுஜர் அந்த மஞ்சட்காப்பை ஒதுக்கிவிட்டு வேறு மஞ்சட்காப்பை அறைத்துப் பூசி நீராட்டினார். அத்யயன காலங்களில் இவ்வண்ணம் தமது திருமேனிப் பாங்கை கண்ணும் கருத்துமாகக் கவனித்த உடையவரை அழைத்த திருவரங்கப் பெருமாள் அரையர் "பிள்ளாய் பிள்ளாய் ராமானுஜா! என் உள்ளத்தை அடியோடு கொள்ளை கொண்டு விட்டாய். இதற்கு நான் செய்யும் கைமாறு ஏதுமில்லை. ஆனால் நான் கற்ற தத்துவங்களை உனக்குச் சொல்கிறேன். கேட்டுக் கொள். எவற்றை நான் மோட்சத்திற்குக் காரணமாக நம்பி எனது ஆத்மாவை ஒப்படைக்கிறேனோ, எவை நமது சித்தாந்தத்தில் திடமான அஸ்திவார அம்சங்களோ, எவை சகல வேதசாஸ்திரங்களின் கடைசி புகலிடமோ அவற்றை யெல்லாம் சொல்கிறேன், கேள்" என்று கூறி உபதேசிக்க லானார்.

"ராமானுஜரே! சரம புருஷார்த்தம் சொல்கிறேன் கேளும். குருரேவ பரம்பிரஹ்ம, குருரேவ பரந்தனம். குருரேவ பர:காமோ, குருரேவ பராயணம், குருரேவ பராவித்யா: அதாவது குருவே உயர்ந்த பிரம்மம். குருவே பெரிய ஐசுவரியம், குருவே பெரிதும் விரும்பத் தக்கவர். அவரே கற்க வேண்டியதின் எல்லை. நம்மை அறியாமை இருளிலிருந்து அறிவெனும் ஒளிக்கு வழிகாட்டி அழைத் துக் கொள்வதும் குருவே, அறியாமையில் மூழ்கிக் கிடந்த

என்னை நற்கதிக்குத் திருப்பி 'எம்பெருமானே சகலமும். எந்த பகவான் அணுவுக்குள் சூக்ஷ்மமாக இருக்கிறானோ அவனே இந்தப் பெரிய உலகிலும் வியாபித்திருக்கிறான்' என்ற உண்மையை ஆசார்யன் எனக்குப் போதித்தார். ஸ்ரீரங்கநாதன் ஆசார்யனாக வருகிறார். உறங்கும் பெருமாள்தான் உலவும் பெருமாளாய் வந்தார் என்பதை உணர்ந்து கொள்ளும். இது பஞ்சமோபாய நிஷ்டை எனப்படும். சரமார்த்தத்தின் கடைப்பகுதி. விசேஷமான பகுதியும் கூட" என்று போதித்தார், திருவரங்கப் பெரு மாளரையர்.

ஸ்ரீ ஆளவந்தாரின் ஸ்தோத்ர ரத்னம், சதுச்லோகி ஆகிய கிரந்தங்களையும் உபதேசித்தார். இதனால் சகல புருஷார்த்த தத்வங்களும் கிடைத்தது போல பேருவகை எய்தினார் உடையவர். இப்படி சரமார்த்தத்தை சொல்லி முடித்த அரையர் தமக்கென்று ஒரு மகப்பேறு இல்லாத காரணத்தால் தமது தம்பி சொட்டை நம்பியை உடைய வருக்கு சீடனாகக் கொடுத்தார். இப்படி ஸ்ரீ ஆளவந்தாரின் சீடர்களிடம் பாடம் கற்றதன்றி ஒவ்வொரு சீடனையும் அடைந்த எம்பெருமானாரின் கீர்த்தி உலகெங்கும் பரவலாயிற்று. ஒரு சந்தேகமும் உலவலாயிற்று. "ஸ்ரீ ஆள வந்தாரின் பிரதம சீடரான பெரிய நம்பியிடம் ஆச்ரயித்த போதே அவருக்கு ஸ்வரூப ஸித்தி ஏற்பட்டு விட்டதே! அப்படியானால் இவர் பலரிடம் பாடம் கேட்கும் அவசியமென்ன?" எனும் கேள்வி எழுந்தது.

ஓர் அரசன் இருக்கிறான். அவன் பல மந்திரிகளிடத் தும் தனது நிதிகளைப் பகிர்ந்து கொடுத்து தனது குமாரன் தகுதி அடைந்ததும் அதைக் கொடுக்கச் சொல்லிப் போவது போல ஸ்ரீ ஆளவந்தாரும் தமது சீடர்கள் ஒவ் வொருவரிடம் ஒரு பகுதி விசேஷார்த்தங்களைச் சொல்லி இவற்றை இளையாழ்வாருக்குச் சொல்லுங்கள் என்று ஜாடைக் காட்டிப் போனார். அதற்கல்லவா அவர் காஞ்சி

புரம் வந்து ஸ்ரீ ராமானுஜரைக் கடாட்சித்தது? அதற்காக வல்லவா தமது மரண காலத்தில் மூன்று விரல்களை மடக்கி ஸ்ரீ ராமானுஜர் செய்த சபதத்தால் அவற்றை மீண்டும் பிரித்தது? இப்படி சூசகங்களால் தமக்குப்பின் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் ஆசார்யர் யார் என்பதை சீடர்களுக்குக் காட்டிப்போனதால் அவர்கள் ஒருவர்மீது இன்னொருவர் போட்டி போட்டுக் கொண்டு ஸ்ரீராமானு ஜருக்கு குருவாகும் பாக்கியத்தைப் பெற்றார்கள். அதனால் பெறுவதற்கரிய மோட்ச சித்தியையும் அடைந்தார்கள்.

ஸ்ரீராமானுஜர் முன்னே சென்ற ஆசார்யர்களுக்கும் பின்னால் வந்த சீடர்களுக்கும் இடையே ஸ்ரீ வைஷ்ணவ சமயமாகிற முத்து மாலையில் இடையே பதித்த பெரும் மாணிக்கமாகச் சுடர்விட்டார். ஸ்ரீராமானுஜருக்கு முன் சென்றவர்கள் அவரது திருமுடி சம்பந்தத்தாலும் பின்னால் வந்தவர்கள் அவரது திருவடி சம்பந்தத்தாலும் பேரின்பத்தை அடைந்தார்கள்.

இப்படி முற்காலத்துக்கும் பிற்காலத்துக்கும் இடைப் பிணைப்பால் பரமஜோதியாய் சுடர்விட்ட ஸ்ரீராமானுஜர் பிரபாவம் எங்கும் பரவலாயிற்று. அதனால் மகிழ்ந்தவர் பலர். பொறாமை கொண்டவர் சிலர். ஆகவே எந்த மகானுக்கும் உண்டாகும் தீமை ஸ்ரீ ராமானுஜரையும் அடையலாயிற்று. அவரது புகழை சகிக்காத சிலர் அவரை விஷம் வைத்துத் தீர்த்துக்கட்டவும் துணிந்தனர்!





# 23.மணலில் கிடந்த மாலை

மஹான்களுக்கு விரோதிகள் ஏன் ஏற்படுகிறார்கள்? அவர்களிடமுள்ள குறைகள் காரணமா? இல்லை, அவர்களிடமுள்ள நிறைவுகள்தான் காரணம். மஹான்களின் அப்பழுக்கற்ற ஞானம், அவர்கள் மேதாவிலாசம் புகழைத் தருகின்றன. அந்தப் புகழ் அறிவற்றவர்களின் பொறாமையைத் தூண்டுகிறது. பொறாமை விரோதிகளை சிருஷ்டிக்கிறது. இரண்டாவதாக, மஹான்களின் நெறி தவறாத வாழ்க்கை நெறி, தளர்ந்தவர்களுக்கு இடைஞ்சலாயிருக்கிறது. சுத்தமான கட்டுப்பாடுகளால் ஏற்படும் சங்கடங்கள் இதரர்களின் லௌகீக லாபத்தைப் பாதிக்கின்றன. அதனாலும் விரோதம் முளைக்கிறது. அப்படி முளைத்ததுதான் ஸ்ரீரங்கம் கோவில் ஸ்தானத்தார்களின் விரோதம்.

உடையவர் ஏற்கனவே செய்த கோவில் நிர்வாக முறைகளை உறுதிப்படுத்தினார். முறையாகக் கோவில் திட்டங்களை நடத்தி வைப்பதில் அதுவரை கோவில் துறை நிர்வாகிகள் அனுபவிக்காத கண்டிப்பைக் கைப்பிடித்தார். இதனால் கோவிலைச் சுரண்டுவதும், இஷ்டப்படி சுகமாக கோவில் காரியங்களைக் காலம் பாராமல் நடத்துவதும், கோவில் அதிகாரிகளுக்கு முடியாமல் போகவே அவர்கள்

உடையவரிடம் சீற்றம் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார்கள். ஸ்ரீராமானுஜர் இருக்கும் வரையில் தங்களிஷ்டப்படி நடந்துகொள்ள முடியாதென் பதைப் புரிந்துகொண்டார்கள் கோவில் உத்தியோகஸ்தர் கள். ஆனால் திடகாத்திரரான ஸ்ரீராமானுஜர் சீக்கிரத்தில் போய்விடமாட்டாரென்பதும் அவர்களுக்கு நிதர்சனமாகத் தெரியவே, போகாதவரைப் போகச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லையென்பதைப் புரிந்துகொண்டார்கள். அதனால் அவரை விஷம் வைத்துத் தீர்த்துக்கட்டவும் முடிவு செய்து அதற்கான ஏற்பாட்டையும் விரைவில் செய்தார்கள். ஸ்ரீராமானுஜரின் நெறியான சந்நியாச வாழ்க்கையும் இது விஷயத்தில் அவர்களுக்கு அனுகூலமா யிருந்தது.

ஸ்ரீராமானுஜர் துறவறம் ஏற்ற பின்பு ஆகாரத்தைக் குறைத்துக்கொண்டார். பிரதி தினம் பிக்ஷை எடுத்து, அதில் கிடைத்த உணவை மட்டுமே உண்டு வந்தார். பிக்ஷை எடுக்கும் வீடுகளையும் ஏழு வீடுகளுக்கு மேல் போகாமல் வைத்துக்கொண்டார். அப்படியொரு நாள் அவர் பிக்ஷை பெறும்போது அதில் விஷத்தைக் கலந்துவிட ஒரு கிருகஸ் தரைச் சரிசெய்து வைத்தார்கள் கோவில் அதிகாரிகள். அந்த கிருகஸ்தன் அந்த ஈனச்செயலுக்கு சம்மதித்தாலும் அவன் மனைவி சம்மதிக்காமல் "இந்த மகாபாவத்தை என்னால் செய்ய முடியாது" என்று மறுத்தாள். "செய்து தான் ஆகவேண்டும்" என்று கணவன் மிரட்ட வேறு வழியின்றி ஒப்புக்கொண்டாலும் அந்தப் பாதகச் செயலி லிருந்து உடையவரைத் தப்புவிக்க ஒரு தந்திரத்தையும் கையாண்டாள். உடையவர் அன்று பிக்ஷைக்கு வந்த போது விஷம் கலந்த பிரசாதத்தை பிக்ஷை போட்டுவிட்டு சட்டென்று அவர் திருவடிகளில் விழுந்து தெண்டனிட்டு உள்ளே சென்றாள்.

அவள் பிரசாதத்தை அளித்த முறை, தண்டனிட்டுச் சென்ற வேகம், அவள் முகத்தில் தெரிந்த சோகம் அனைத்தையும் உடையவர் கண்டு "இதென்ன?" என்று திகைத்து சிந்தித்தார். பிறகு தமது ஞானதிருஷ்டியாலே உண்மை அறிந்து அங்கிருந்து காவிரிக்குச் சென்று காவிரி நீரிலே விஷங்கலந்த பிரசாதத்தைக் கரைத்துவிட்டு மடத்துக்குத் திரும்பினார். தமக்கு விஷம் கொடுத்துக் கொல்ல முயன்றவர்களைப் பற்றி அவர் மனத்தால் விரோதம் கொள்ளவில்லை. அவர்களைத் திருத்த தாம் உபவாசமிருப்பதே மேல் என்று அன்று முதல் உண்ணா விரதம் இருக்கத் தொடங்கினார். விரோதிகளைத் திருத்த உண்ணாவிரதம் என்ற ஆயுதம் சிறந்தது என்பதை முதன் முதலாக நிரூபித்தவர் ஸ்ரீராமானுஜர்தான். அவர் அன்று காட்டிய வழிதான் பிற்காலத்தில் மகாத்மாகாந்திக்குப் பெரும் அரசியல் ஆயுதமாயிற்று.

உடையவரின் உண்ணாவிரதம் ஸ்ரீரங்கத்தையே ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. அது பெரும் நெருப்பாக அவரை தீர்த்துக்கட்ட முயன்ற கோவில் அதிகாரிகளைத் தகிக்கத் தொடங்கியது. அவர் உண்ணாவிரத மகிமை எங்கும் பரவி திருக்கோட்டியூர் நம்பி காதிலும் விழவே அவர் தமது சிஷ்ய கோஷ்டிகளுடன் உடனடியாக ஸ்ரீரங்கத்துக்குக் கிளம்பி வந்தார். நம்பி வரும் செய்தி கேட்ட உடையவரும் உபவாசத்தால் ஏற்பட்ட பல வீனத்தையும் அசட்டை செய்து குருவை எதிர்கொள்ளத் தமது சீடர்களுடன் விரைந்தார்.

நல்ல பட்டப்பகல் நேரம். கதிரவன் காவிரி மணலைத் தணலாகச் செய்திருந்த சமயம். அதிலே நம்பி நடந்து வந்து கொண்டிருந்தபோது நட்ட நடுக்காவிரியிலே அவரை சந்தித்த ஸ்ரீராமானுஜர் கொதிக்கும் மணலில் நெடுஞ்சாண் கட்டையாக விழுந்து குருவுக்குத் தண்டன் சமர்ப்பித்தார். கடும் வெயில் அவர் உடலை தகித்தாலும் லக்ஷியம் செய்ய

வில்லை உடையவர். படுத்தது படுத்தபடி கிடந்தார். நம்பியும் அவரை எழுந்திருக்க நியமிக்காமல் அவர் மணலில் கிடந்ததைப் பார்த்துக்கொண்டே இருந்தார். உடையவர் நிலையை குரு சகித்தார். ஆனால் உடையவர் சீடரான கிடாம்பியாச்சான் (பிரணதார்த்திஹரன்) சகிக்கவில்லை.

"இதென்ன குரு சிஷ்யபாவம்?" என்று இரைந்தே சொன்னார் சினத்துடன். திருக்கோட்டியூர் நம்பியை உஷ்ணமான கண்களால் பார்த்தார். "ஸ்வாமி, நீர் நல்ல குரு. நறுமணமுள்ள புஷ்பமாலையை நெருப்பில் போட்டுக் கொளுத்துவது உலகில் எங்கேனும் உண்டா?" என்று நம்பியை நோக்கிச் சீறினார். பிறகு நம்பியின் கோபத்தைப் பற்றியோ, உடையவரின் தாபத்தைப் பற்றியோ சிறிதளவும் கவலைப்படாமல் உடையவருடைய திருமேனியை இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினார்.

இந்தத் துணிகரச் செயலைக் கண்டு நம்பியின் சீடர்களும் உடையவரின் மற்ற சீடர்களும் பிரமித்தார்கள். அடுத்து என்ன நடக்குமோ என்று அஞ்சினார்கள். நம்பியின் முகத்தை ஏறிட்டு நோக்கினார்கள். ஆனால் நம்பியின் முகத்தில் ஆனந்தச்சாயை விரிந்தது. உதடுகளில் புன்முறுவல் துளிர்த்தது. கண்களில் அனுக்கிரகம் பொங்க நம்பி கிடாம்பியாச்சானை நோக்கினார் சில விநாடிகள். பிறகு அவர் திருவாயிலிருந்து அமுதமெனச் சொற்கள் உதிர்ந்தன. "உம்மைத்தான் காணும் தேடுகிறோம். என் மனம் தேடியது உம்மைப்போன்ற ஒருவரை. இவர் திருமேனியைப் பாதுகாக்கக்கூடியவர் நீர்தாம். அவர் திருமேனியில் உமக்குள்ள பரிவைப் பார்த்தோம். இனி ஸ்ரீராமானுஜர் மதுகரம் பண்ணவேண்டாம் (பிக்ஷைக்கு வீடுத்தேடிப் போக வேண்டாம்) நீரே இவருக்கு இன்று முதல் தளிகை பண்ணி பிக்ஷையாகப் பிரதி தினம் சமர்ப்பித்து வாரும்" என்று நம்பி நியமித்தார். நம்பியின் கட்டளையை சிரமேற் கொண்ட கிடாம்பியாச்சான்

அன்றுமுதல் அந்தப் பணியை ஏற்றுக்கொண்டு மடத்தில் எழுந்தருளியிருந்தார்.

இந்தக் காலத்தில்தான் ஸ்ரீராமானுஜர் கத்யத்ரய கிரந்தங்களை இயற்றினார். ஸ்ரீமந்நாராயணனே பர ப்ரம்மம் (பரம்பொருள்), அவனுக்கு மேல் யாதொரு தெய்வமும் கிடையாது என்ற நல்லறிவை வழியுறுத்தும் சரணாகதி கத்யம், ஸ்ரீரங்ககத்யம், வைகுண்டகத்யம் ஆகிய மூன்று நூல்களை (கத்யத்ரயம்) ஸ்ரீராமானுஜர் இயற்றினார். அத்துடன் நித்யக்ரந்தம் என்ற வழிமுறை நூலையும் இயற்றினார். இந்தக் கிரந்தங்களின் சிறப்பும் ஸ்ரீராமானுஜரின் மேதாவிலாசத்தை எங்கும் பரப்பின. அவரது புகழ் தென் எல்லைகளைக் கடந்து வடக்கேயும் சென்று காசியிலும் புகுந்தது. காசியிலிருந்த மகாவித்வானான யக்ஞமூர்த்தி என்பவர் காதிலும் விழுந்தது. அப்பொழுதுதான் யக்ஞ மூர்த்தி காசி வித்வான்களை வாதத்தில் வென்று வெற்றிக் கொடி நாட்டியிருந்தார். ஸ்ரீராமானுஜ வைபவத்தைக் கேட்டதும் தனது கொடியைத் தெற்கிலும் நாட்ட உறுதி கொண்டு ஸ்ரீரங்கத்தை நாடிப் புறப்பட்டார்.





# 24. யக்ஞ மூர்த்தி

சகல சாஸ்திர பண்டிதரும் மாயாவாத விற்பன்னரும் சந்நியாசியுமான யக்ஞ மூர்த்தி உடையவர் பிரபாவத்தைக் கேட்டு அவரையும் வாதாடி வெற்றி கொள்ள வேண்டு மென்று கோயிலை நோக்கி புறப்பட்டபோது, தான் எப் பேர்ப்பட்ட மகானிடம் மோதப் போகிறோம் என்பதை எண்ணாமலே கிளம்பினார். வந்தவரும் தனியாக வராமல் தமது சீடர்களைப் பெருவாரியாக அழைத்துக் கொண்டும் தாம் எழுதிய நூல்களை வண்டிகளில் ஏற்றி எடுத்துக் கொண்டும் வந்தார். ஆனால் அத்தனை பெரிய கோஷ்டி யும் புத்தக மூட்டைகளும் ஸ்ரீராமானுஜருடைய தெய்வீக அறிவுக்கு முன்பு பயன்படாதென்பதை அவர் உணர வில்லை.

அவர் வந்த சமயம் ஸ்ரீராமானுஜர் பரிபூர்ணமான சாஸ்திர ஞானத்தையும், ஆசார்யர்களின் கடாட்சத்தையும், பிரபந்தத்தின் பிரபாவானந்தத்தையும் பெற்றிருந்த சமயம். அறிவுப்பிழம்பாக, அறமார்க்கத்தின் அத்தாட்சியாக அகப் பொலிவும் முகப்பொலிவும் பெற்று அவர் விளங்கிய காலம். ஆசார்ய உபதேசத்தால் மனத்தின் அழுக்குகளை. விரோதிகளை, அகற்றி பகவத் அனுபவத்தில் மூழ்கியிருந்த

காலம். பிரபன்னனுக்கு (ஆண்டவனே சரணம் என்றிருப்ப வனுக்கு) ஆறு விரோதிகள் உண்டு என்று திருக்கோட்டியூர் நம்பி உடையவருக்கு உபதேசித்திருந்தார். அந்த ஆறு விரோதிகள் எவை?

திருக்கோட்டியூர் நம்பி சொன்னார். பிரபன்னனுக்கு விரோதிகள் ஆறு. அவையாவன:- ஆச்ரயண விரோதி, ச்ரவண விரோதி, அனுபவ விரோதி, ஸ்வரூப விரோதி, பரத்வ விரோதி, ப்ராப்தி விரோதி.

ஆச்ரயண விரோதியாவது - அகங்கார மமகாரங்கள், நாம் செய்யும் காரியங்களுக்குப் பலனை எதிர்பார்த்தல், எம்பெருமானுடைய கிருபையை அடைவதில் பிராட்டி யினுடைய உதவியை மட்டமாக எண்ணுதல், நமது லக்ஷியம் எது என்பதில் சந்தேகம்.

ச்ரவண விரோதியாவது இதர தெய்வங்களைப் பற்றிய கதைகளைக் கேட்பதில் திருப்தி.

அனுபவ விரோதியாவது - பகவானுக்கு அர்ப்பணிக்க வேண்டிய திரவ்யங்களை சுய உபயோகப்படுத்தல்.

ஸ்வரூப விரோதியாவது - தான் அவனுக்கு அடிமை என்ற எண்ணமில்லாமல் சுதந்திரன் என்ற துர்புத்தி.

பரத்வ விரோதியாவது - இதர தெய்வங்களே முதன்மை என்ற எண்ணம்.

ப்ராப்தி விரோதியாவது - கேவலரோடு சேர்க்கை.

இத்தகைய ஆசார்ய உபதேசத்தாலும், அவற்றை சிரமேற்கொண்டு நடந்துகொண்டதாலும் உடையவரின் ஆத்மா நிகரற்று ஜொலித்துக் கொண்டிருந்தது. உடைய வருக்கு சாஸ்திர ஞானம் மட்டுமல்ல. ஞானத்தோடு அனுபவமும் கலந்திருந்தது. திவ்யப் பிரபந்தத்தை இக்

காலத்திலும் அக்காலத்தை எண்ணி அனுபவித்தார். திருக் கோட்டியூர் நம்பியிடம் உடையவர் உபதேசம் கேட்கச் சென்றபொழுது நம்பியின் மகளை ஆண்டாளென்று நினைத்து வணங்க அவள் நடுங்கி உள்ளே சென்று நம்பி யிடம் அறிவிக்க நம்பி முறுவல் கொண்டார். "திருப் பாவையில் இன்று உந்து மதகளிற்றன் பாட்டு. அதை நினைத்து திளைத்து வந்திருப்பார் ஸ்ரீராமானுஜர்" என்று பெண்ணுக்கு சமாதானம் சொன்னார். இப்படி திருப் பாவை ரத்தத்தில் ஓட அந்த நிகழ்ச்சிகளை உள்ளூர அனுபவித்து, அந்த உலகத்தில் திளைத்து, சுற்றுலகத்தை மறக்கும் நிலையை எய்திய ஒரு மகானிடம் தான் தர்க்கிக்க வருகிறோம் என்பதை அறியாமலே யக்ஞ மூர்த்தி ஸ்ரீரங்கத்தை எய்தினார்.

ஸ்ரீரங்கம் வந்ததும் காலம் கடத்தாத யக்ஞ மூர்த்தி ஸ்ரீராமானுஜரை அணுகி, "என்னுடன் தர்க்கிக்க வேணும்" என்று கேட்டார்.

உடையவர் யக்ஞமூர்த்தியை ஏறிட்டு நோக்கினார். உண்மையாகவே ஒரு மகாவித்வானுடன் தாம் தர்க்கத்தில் இறங்கப்போவதை உணர்ந்தார். ஆகவே தர்க்கத்துக்கு உடன்பட்டு, "அப்படியே செய்வோம். ஆனால் நீர் தோற்றால் என்ன செய்கிறீர்?" என்று வினவினார்.

"நான் தோற்றேனாகில் உமது காலணியைத் தலையில் சுமந்து, உமது பெயரையும் சூட்டிக்கொண்டு, உமது மத சித்தாந்தத்திலே புகக்கடவேன்" என்று கூறிய யக்ஞ மூர்த்தி "நீர் தோற்றால் என்ன செய்கிறீர்?" என்று வினவினார்.

ஸ்ரீராமானுஜர் பதிலில் அவரது மதத்தின் திட பக்தியைக் காண்கிறோம். யக்ஞமூர்த்தியைப் போல் - எனது மதத்தை விட்டு விடுகிறேனென்றோ, உனது மதத் துக்கு வந்து விடுகிறேனென்றோ சொல்லவில்லை உடைய

வர். தாம் தோற்றால் அது தமது பலவீனத்தைக் குறிக்குமே தவிர ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் பலவீனத்தைக் குறிக்காது என்ற திடசித்தாந்தத்தால் "யக்ஞ மூர்த்தி! நான் தோற்றால் கிரந்த சந்யாசம் பண்ணிக் கொள்கிறேன். இனி எதையும் எழுதுவதில்லை தோல்வியை ஒப்புக் கொள்கிறேன்" என்று சொன்னார்.

இப்படி இருவரும் பிரதிக்ஞை செய்து துவக்கிய தர்க்கம் பதினாறு நாட்கள் தொடர்ந்து நடக்க, நாளுக்கு நாள் யக்ஞமூர்த்தியின் கைவலுக்கவே பதினேழாவது நாள் அவர் தர்க்கம் பலம் மிகுதியாக, உடையவர் ஏதும் தோன்றாமல் நிற்க, யக்ஞமூர்த்தி வெற்றி தோன்ற எழுந்து "நாளை தர்க்கிப்போம்" என்று சொல்லிப் போனார்.

உடையவர் மிகுந்த வியாகூலத்துடனும் உடைந்த மனத்துடனும் மடத்துக்குத் திரும்பினார். மடத்தை அடைந்ததும் தமது ஆராதனா விக்ரகமான வரதராஜப் பெருமாளுக்கு அமுது படைத்து வெறுத்த மனத்துடன் பெருமாள் எதிரே நின்று "பேரருளாளனே! இதென்ன சோதனை எனக்கு? ஆழ்வார் காலம் தொடங்கி ஆள வந்தார் காலம் வரை இணையற்று விளங்கிய ஸ்ரீவைஷ்ணவத் தத்துவம் என் காலத்தில் தோற்க வேண்டுமா? இந்நாள்வரை தேவரீருடைய ஸ்வரூபகுண விபூதிகள் சத்தியமென்று நடத்திச் சென்ற தேவரீரே ஒரு மாயாவாதியால் எல்லா பிரமாணங்களையும் என்னுடைய காலத்திலே அழித்துப் போட்டு லீலை கொண்டாட திருவுள்ளங் கொண்டால் அப்படியே நடக்கட்டும்" என்று கூறிவிட்டு எதுவும் சாப்பிடாமல் படுத்து உறங்கிவிட்டார்.

பேரருளாளரான வரதராஜப் பெருமாள் அன்று உடையவர் சொப்பனத்திலே தோன்றி, "இளையாழ்வாரே! ஏன் வருந்துகிறீர்? இந்த தர்க்கத்தாலே மிக சமர்த்தனாக

இருக்கும் ஒருவனை உமக்கு சிஷ்யனாகத் தந்தோம். ஸ்ரீஆளவந்தார் அருளிச் செய்த மாயாவாத கண்டனத்தைச் சொல்லி யக்ஞமூர்த்தியை வெற்றி கொள்ளும்"என்று கூறி மறைந்தார்.

மறுநாள் காலை மிகுந்த உற்சாகத்துடன் எழுந்த உடையவர் முதல் நாள் சொப்பனத்தை எண்ணிப் பார்த்தார். பெருமானுடைய கிருபையை எண்ணி மன முருகுகிறார். பிறகு தீர்த்தமாடி திருவாராதனத்தை முடித்து பேரருளாளனை சேவித்து முந்திய இரவில் பகவான் சொன்ன யுக்தியை மனத்தில் ஆவாகனம் பண்ணி மிகுந்த கம்பீரத்துடன் தர்க்க மண்டபத்துக்கு வந்து சேர்ந்தார்.

யக்ஞமூர்த்தி உடையவருடைய கம்பீரத்தையும் முகத்தில் விரவிய சந்துஷ்டியையும் கண்டார். "இவர் நேற்று சோர்வடைந்து களைத்தும் சளைத்தும் சென்றார். இன்று மத்த கஜம் போல வருகின்றார். ஆகையாலே இவர் மானிடரல்ல. மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியை யும் பெற்றவர்" என்று நிச்சயித்து உடையவர் திருவடியிலே விழுந்து "நான் தோற்றேன்" என்று கூறி உடையவரது பாதுகைகளை சிரமேல் ஏற்றி "அடியேனுக்கு இரங்கி ரக்ஷிக்க வேணும்" என்று வேண்டிக் கொண்டார்.

இந்தத் திடீர் திருப்பத்தைக் கண்ட உடையவர் வியந்தார். "ஏன்? தர்க்கிக்கலாகாதோ?" என்றும் கேட்டார்.

யக்ஞமூர்த்தி உடையவர் முன்பு தலை தாழ்த்தி நின்று "பெரிய பெருமாள் தேவரீருக்குப் பிரத்யக்ஷமான பின்பு தேவரீரென்ன, பெரிய பெருமாளென்ன, பேதமில்லை என்று அறிந்தேன். இனி அடியேனுக்கு தேவரீர் சந்நிதியில் வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லவும் அருகதை இல்லை" என்றார்.

பெருமாள் யக்ஞமூர்த்தியைப் பரம கிருபையுடன் பார்த்து மாயாவாதத்திலுள்ள குறைகளை எடுத்துச் சொல்லி, அவரை ஸ்ரீவைஷ்ணவ தர்சனமாகிற வெளிச்சத் துக்கு இழுத்து, அவருக்கு அருளாளப்பெருமாள் எம் பெருமானார் என்கிற பெயரையும் சூட்டி, அவருக்கு திருப் பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்தார். ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்துக்கு யக்ஞமூர்த்தியெனும் அருளாளப் பெருமாள் எம்பெருமானார் சக்திவாய்ந்த ஒரு தூணாக விளங்கினார்.





# 25. இராமாநுஜ நந்தவனம்

வேதசாஸ்திர விற்பன்னரான யக்ஞமூர்த்தி தம்முடன் தர்க்கத்தைத் தொடர்ந்து நடத்துவதற்குப் பதில், அன்று தம்மைப் பார்த்தவுடனேயே காலில் விழுந்து தோல்வியை ஒப்புக் கொண்டதால் அவரைத் தமது கோஷ்டியில் சேர்த்துக் கொண்டாலும், அவருடைய வாதங்களுக்குச் சில மறுப்புகளையும் சொன்னார் ஸ்ரீராமானுஜர்.

"யக்ஞமூர்த்தி! உமது மாயாவாத சித்தாந்தத்தில் பிரம்மம் நிர்குணமென்று சொல்கிறீர். அப்படியானால் பிரம்மத்திற்கு ஸத்தியம் முதலிய குணங்களைச் சொல்லு கிற வேதவாக்யங்கள் பொய்த்துவிடும். வேதம் பொய்த்து விட்டால் மதத்துக்கு ஆதாரம் கிடையாது. அவித்யா திரோஹிதமான பிரம்மத்திற்கு குணயோகம் உண்டாகை யால் ஸகுண சுருதி வாக்கியங்கள் பிரம்மத்தின் குணங் களைச் சொல்லுகிற வேதப்பகுதிகள் விரோதமாகா என்று சொன்னீராகில் அது தவறாகும். ஏனென்றால் பிரம்மம் ஞான ரூபம், அவித்யையாகிற மாயை அஞ்ஞானரூபம். ஞான ரூபமான பிரம்மத்தை அஞ்ஞான ரூபமான அவித்யை மறைத்தால் அவித்யைக்கு நாசமில்லை. அதுவும் அழிவற்று நித்யமாகிவிடும். அப்படியானால் பிரம்மம்,

அவித்யை, என்ற இரண்டு வஸ்துக்கள் ஏற்படும். இரண்டு ஏற்பட்டால், அப்பொழுது நீர் சொல்லும் அத்வைதமாகிற பெரிய யானை த்வைதமாகிற ஆழமான சேற்றில் அகப் பட்டுத் திண்டாடும். இவைதான் மயாவாதத்திலுள்ள குறைகள்" என்று தெளிவுபடுத்தினார் உடையவர்.

இந்த மறுப்புகளைக் கேட்ட யக்ஞமூர்த்தி பேச நாஎழாமல் நின்றார். பிறகு உடையவர் காலில் விழுந்து தம்மை ஆட்கொள்ளும்படி விண்ணப்பித்துக் கொண்டார். ஸ்ரீராமானுஜரும் அவரை பரிபூர்ணமாகக் கடாட்சித்து ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தில் சேருவதற்குண்டான பிராயச்சித் தங்களை செய்வித்து, சிகையும் பூணூலும் தரிக்கச் செய்து, திரிதண்டம் காஷாயம் கொடுத்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்ற பெயரையும் சூட்டி தம்முடன் அரங்கன் சந்நிதிக்கு அழைத்துச் சென்றார். அங்கு தீர்த்தம் பிரசாதம் கொடுக்கச் செய்து ஸ்ரீசடகோபத்தையும் அவர் தலையில் சாத்தி மடத்துக்கு அழைத்துப் போனார். அங்கு தாம் ஆராதனம் செய்யும் வரதராஜப் பெருமாளை சேவிக்கும்படிச் செய்து "இந்த வரதராஜன்தான் உம்மை நமது பக்கத்தில் சேரவைத்தார்" என்று கூற யக்ஞமூர்த்தி நெடுஞ்சாண் கட்டையாய் விழுந்து பேரருளாளரை சேவித்தார். அன்று உடையவர் பேரருளாளருக்குத் திரு வாராதனம் பண்ணி தம்முடன் யக்ஞமூர்த்தியாயிருந்து அருளாளப் பெருமாள் எம்பெருமானாராக மாறிவிட்ட அந்த ஸ்ரீவைஷ்ணவ சந்நியாசியுடன் அமுது செய்தார்.

இப்படி ஏற்பட்ட உடையவருடைய திருவடி சம்பந் தத்தை பெரும்பேறாக எண்ணினார் வரதராஜ முனியென்ற அருளாளப் பெருமாள் எம்பெருமானார். அவருக்கு மேலும் திராவிட வேதத்தை உபதேசிக்க முற்பட்டு "வாரீர் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரே! ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தங்களை ஓதீர்" என்று கட்டளையிட்டுத் திருப்பல்லாண்டில் தொடங்கி

நாலாயிரமும் ஓதுவித்தார். மேலும் வேண்டுவதற்கான தத்துவார்த்தங்களையும் உபதேசித்தார்.

ஏற்கனவே வடமொழி வேதத்தில் விற்பன்னராயிருந்த வரதராஜமுனி அருளாளப்பெருமாள் எம்பெருமானார் திராவிட வேதத்திலும் சிறந்து ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தின் தூணாக விளங்கியதால் அவருடைய பெயர் எங்கும் பரவலாயிற்று. உடையவருடைய வித்வத் கோஷ்டியில் ஆழ்வானையும் ஆண்டானையும் போலவே அவரும் சேர்ந்து கொள்ளவே அவர் நெருப்பிலிட்ட தங்கம்போல் விளங்கினார். ஸ்ரீராமானுஜர் செய்த மற்றொரு காரியமும் அருளாளப் பெருமாள் எம்பெருமானாருடைய கீர்த்தியை அதிகப்படுத்தியது.

ஆசார்யர்களெல்லோரும் உடையவர் திருவடிகளில் ஆச்ரயித்ததைக்கேட்டு அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி, ஆகிய அடியார்கள் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கத் திருவரங்கம் வந்து சேர்ந்தார்கள். அவர்களனைவரையும் உடையவர் அருளாளப்பெருமாள் எம்பெருமானாரின் ஸ்ரீபாதத்திலே ஆச்ரயிக்கும்படிச் செய்தார். அவர்கள் வரவையும் அதன் காரணத்தையும் கேட்ட அருளாளப் பெருமாள் எம்பெருமானார், "குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற் போல உடையவர் செய்திருக்கிறார். நீங்கள் இங்கிருந்தாலும் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கள்" என்று அருளிச் செய்தார்.

பிறகு உடையவர் திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்லிக் கொண்டு கோஷ்டியை நடத்திக் கொண்டிருக்கையில் "சிந்து பூமகிழும் திருவேங்கடம்" என்ற இடம் வந்தபோது கோஷ்டியிலிருந்தவர்களை நோக்கி "புஷ்ப மண்டபமான பெரிய திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு உகப்பாக நந்தவனம் அமைத்து மாலைகட்டி

சாத்துவார் யாராவது இருக்கிறார்களா?" என்று கேட்க அனந்தாழ்வான் எழுந்திருந்து, "இந்த கைங்கர்யத்தை அடியேனுக்கு அருள வேணும்" என்று கேட்க, திருமலை போக அனந்தாழ்வானுக்கு அனுமதி கொடுத்தார். அனந்தாழ்வானும் திருமலை சேர்ந்து திருவேங்கமுடை யானுக்கு திருநந்தவனம் அமைத்து அதை "இராமானுஜன்" என்று உடையவருடைய திருநாமத்தால் அழைத்தார்.

அந்த நந்தவனப் பெருமையும் அனந்தாழ்வானின் மாலா கைங்கர்யப் பெருமையும் உடையவர் காதிலும் விழுந்தது. திருவேங்கமுடையானை சேவிக்க வேணும் என்ற அவாவும் உண்டாயிற்று உடையவருக்கு. ஆகவே ஸ்ரீரங்கநாதனை சேவித்து, "அடியேன் பேரருளாளனையும். திருவேங்கடமுடையானையும் சேவித்து வர அனுமதி வேணும்" என்று பிரார்த்திக்க ஸ்ரீரங்கநாதனும் "போய் கடுகி வாரும்" என்று உத்தரவு கொடுக்கவே திருவேங்கடம் நோக்கி கோஷ்டியுடன் புறப்பட்டார் உடையவர்.





# 26. பத்துடை அடியவர்க்கு எளியவன்

ஸ்ரீவரதராஜப் பெருமானையும் திருப்பதி வெங்கடா சல பதியையும் சேவித்துவர அழகிய மணவாளனிடம் அனுமதி பெற்றுத் தமது ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியுடன் காஞ்சி நோக்கிப் புறப்பட்ட உடையவர், வழியில் திரு வெள்ளறைப் பெருமானையும் திருக்கோயிலூர் திருவிக்கிர மனையும் சேவித்துக் கொண்டு காஞ்சி நோக்கிச் செல்லும் போது இடையே எங்கு தங்கலாமென்று சிந்தித்தார். யக்ஞேசன் என்றொரு சீடன் தமக்கிருப்பது நினைவுக்கு வரவே அவனிருந்த ஊருக்குத் தாம் கோஷ்டியுடன் வரும் செய்தி சொல்ல முன்னதாக ஒரு அடியாரை அனுப்பி வைத்தார். எம்பெருமானார் தனது கிருகத்துக்கு வருவது குறித்து யக்ஞேசன் பெரிதும் உவகை கொண்டு உடைய வரைத் தக்கபடி வரவேற்கவும், உபசரிக்கவும் பிரமாதமாக ஏற்பாடுகளைச் செய்தான். ஆனால் அந்தச் செய்தி கொண்டு வந்த அடியாரை அவன் கவனிக்காததால் ஒருநாள் முழுதும் காத்துக் காத்து பட்டினியால் வாடிய அந்த அடியார் வருத்தம் மிக்கவராய் கால் நொந்து மனம் நொந்து திரும்பவும் ஸ்ரீராமானுஜர் இருந்த இடத்துக்கு வந்து விஷயத்தைச் சொன்னார். இராமானுஜர் அதை மனத்தில் வாங்கிக் கொண்டாரேயொழிய அந்த அடி

யாருக்குப் பதிலேதும் சொல்லாமலே தமது கோஷ்டியுடன் மீண்டும் கிளம்பினார். யக்ஞேசனிருந்த கிராமத்துக்கு அருகில் வந்ததும் வழி இரண்டாகப் பிரிவதைப் பார்த்த எம்பெருமானார் புல்வெளியில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த பையன்களைப் பார்த்து, “இந்த வழிகள் எங்கு போகின்றன?” என்று விசாரித்தார்.

ஒரு பையன் இரண்டு வழிகளில் ஒன்றைக் காட்டி, “இது யக்ஞேசன் என்ற பிரபுவின் மாளிகைக்குப் போகிறது. உலகத்திலுள்ள பெரிய மனிதர்களெல்லாம் அவர் வீட்டுக்குத்தான் வருவார்கள். அங்குதான் தங்குவார்கள்” என்றான். பிறகு இன்னொரு வழியைக் காட்டி இது வரதாழ்வான் என்ற ஒரு ஏழையின் சிறு வீட்டுக்குப் போகிறது. அங்குதான் ஏழை எளியவர்கள், ஆண்டவன் அடியார்கள், இவர்கள் போவார்கள்” என்று சொன்னான்.

இதைக் கேட்ட இராமானுஜர், “நாங்கள் பெரிய மனிதர்களுமல்ல, பணக்காரர்களுமல்ல, நாங்கள் ஏழை சந்நியாசிகள். ஆகவே வரதாழ்வான் வீட்டுக்கே போகிறோம்” என்று சொல்லிவிட்டு இரண்டாவது பாதையில் திரும்பி வரதாழ்வான் இல்லத்துக்குக் கோஷ்டியுடன் சென்றார். வரதாழ்வான் வீட்டின் அமைப்பிலேயே அதன் ஏழ்மை தெரிந்தது. அதன் சிறுவாயிலுக்குச் சென்று கதவைத் தட்டினார் எம்பெருமானார்.

வரதாழ்வான் அப்பொழுது இல்லத்தில் இல்லை. வழக்கப் பிரகாரம் உஞ்ச விருத்திக்குச் சென்றிருந்தபடியால் அவர் மனைவி மட்டுமே வீட்டிலிருந்தாள். கதவு தட்டப் பட்டதும் கதவைச் சிறிதளவே திறந்த அவள் வந்திருப்பவர்களைக் கண்டதும் மீண்டும் கதவுக்குப்பின் மறைந்தாள். சரியான ஆடையில்லாததால் கிழிந்த ஆடையுடன் வெளியே வர வெட்கி உள்ளேயே நின்று தனது கையை மட்டும் ஒரு முறை தட்டினாள்.

அவளிருந்த நிலைமையை உணர்ந்த உடையவர் தமது தலைப் பரிவட்டத்தை எடுத்து உள்ளே வீசவே அந்த உத்தமி அதை உடுத்திக் கொண்டு கதவைத் திறந்து உடையவரையும் கோஷ்டியையும் தெண்டனிட்டு உள்ளே அழைத்தாள். வீட்டின் ஓட்டின் மூலம் கதிரவன் பல இடங்களில் தனது கிரணங்களைப் பாய்ச்சி இருந்தான். சுவர்களின் பூச்சும் பல இடங்களில் உதிர்ந்து செங்கற்கள் வெளியே தெரிந்தன.

அந்த நிலையிலும் அந்த மகாலக்ஷ்மி ஸ்ரீராமானுஜரை யும் கோஷ்டியையும் உள்ளே கூடத்தில் உட்காரச் சொல்லி தனது கணவர் சீக்கிரம் வந்துவிடுவாரென்றும் அவர்கள் அனுஷ்டானங்களை முடித்துக் கொள்வதற்குள் தான் ததீயாராதனத்துக்குச் சித்தம் செய்து விடுவதாகவும் கூறி உள்ளே சென்றாள்.

அந்த ஏழையின் வீட்டில் முகமலர்ச்சியுடனும் மிகுந்த திருப்தியுடனும் உட்கார்ந்தார் ராமானுஜர். கோஷ்டியை யும் உட்காரச் சொன்னார். எல்லோரும் சீக்கிரம் காலைக் கடன்களை முடிக்க உள்ளூர் குளத்துக்குச் சென்றபோது தளிகை அறையில் இருந்த அந்த கிருகலக்ஷ்மி, "இவர்களை உபசரிக்க என்ன செய்வேன் இறைவா?" என்று பெரு மாளை வேண்டினாள். அந்தச் சமயத்தில் அவளுக்கு ஒரு யோசனை திடீரெனப் பளிச்சிட்டது. அந்த ஊரிலிருந்த தனிகனான வைசியன் ஒருவன் தன்மீது ஒரு கண்ணை வைத்திருந்ததும், அவன் காம இச்சையுடன் தன்னைக் கவனித்து வந்ததும் அந்த உத்தமியின் நினைவுக்கு வரவே, "பாகவத ததீயாராதனத்துக்கு இந்த சரீரம் உபயோகப் படுமானால் அதைவிட சிறந்த பாக்யம் இதற்கு என்ன இருக்கிறது?" என்று எண்ணினாள். அந்த எண்ணத்துடன் அந்த வைசியன் இல்லம் சென்று தன் இல்லம் வந்திருக்கும் பாகவத கோஷ்டியின் ததீயாரதனத்துக்கு வேண்டிய சாமான்களைக் கொடுக்கும் பட்சத்தில் அவன் இஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்றாள்.

எதிர்பாராது கிடைத்த தனது அதிர்ஷ்டத்தை எண்ணி குதூகலப்பட்ட வைசியன் அந்த கோஷ்டி ஒரு மாதம் தங்குவதற்குத் தேவையான சாமான்களைத் தனது வேலைக் காரர்கள் மூலம் அனுப்பி வைத்தான். வரதாழ்வான் மனைவியும் பாகவத ததியாராதனம் முடிந்ததும் இரவு வருவதாகச் சொல்லிப் போனாள். வீட்டை அடைந்ததும் தளிகையை துரிதமாகச் செய்தாள். அந்த சமயத்தில் உஞ்ச விருத்தியை முடித்துக்கொண்டு வீடு திரும்பிய வரதாழ் வான் ராமானுஜ கோஷ்டியைக் கண்டு வியந்தான், உள்ளம் பூரித்தான். எம்பெருமானார் திருவடிகளில் விழுந்து தெண்டனிட்டான். பிறகு உள்ளே சென்று மனைவி செய்யும் தளிகையைக் கண்டு வியந்தான். "ஏது இத்தனை சாமான்கள் உனக்கு?" என்றும் விசாரித்தான். மனைவி சத்தியத்தைச் சொன்னாள்.

அதைக் கேட்ட வரதாழ்வான் அவளைப் பாராட்டி னான். உடையவருக்குக் கைங்கரியம் செய்யும் பாக்கியம் உன்னால் எனக்கும் கிடைத்தது என்று புளகாங்கித மடைந்து கூறினான். அன்று ததியாராதனம் வெகு சிறப் பாக நடந்தது. இந்த ஏழை வீட்டில் இத்தகைய ததியாரா தனம் எப்படி நடந்தது என்று சிந்தித்தார் உடையவர். அன்று பெருமாளுக்கு திருவாராதனம் செய்து தீர்த்தப் பிரசாதங்களை அந்த தம்பதிகளுக்குக் கொடுத்தார். வரதாழ்வானை விசாரித்தார், "உன் மனைவி பெயர் என்ன?" என்று "லக்ஷ்மி" என்றான் வரதாழ்வான். பிறகு லக்ஷ்மியும் வரதாழ்வானும் உடையவரைத் தெண்டனிட்டு ததியாராதனத்துக்கு மளிகை கிடைத்த மர்மத்தை எடுத்து ரைத்துத் தாங்கள் இரவு வைசியன் வீடு செல்ல வேண்டிய அவசியத்தைத் தெரியப்படுத்தினார்கள்.

உடையவர் பிரமித்துப் போனார். "இப்படியும் ஒரு பாகவத பக்தியா இந்த ஏழைகளுக்கு?" என்று வியப்பின் எல்லையை அடைந்தார். பிறகு தேவப்பெருமானை

தியானித்து பெருமாள் தீர்த்தத்தையும், பாகவதசேஷமான பிரசாதத்தையும் வரதாழ்வானிடம் கொடுத்து. "ஆழ்வான், இந்த தீர்த்த பிரசாதங்களை அந்த வைசியனிடம் கொடு" என்று கூறி, கண்களை மூடி தியானத்தில் ஆழ்ந்து விட்டார்.

இரவு மூண்டு விட்ட சமயம். லக்ஷ்மியை எதிர்பார்த்து நின்றிருந்தான் வைசியன். லக்ஷ்மியுடன் வரதாழ்வானும் வருவதைப் பார்த்து சிறிது சந்தேகத்துக்குள்ளானான். அவன் சந்தேகத்தை நிவர்த்தி செய்த வரதாழ்வான், "வைசியரே! இன்று நீர் மிகவும் புண்யமான பாகவத ததியாராதனத்தை நடத்திக் கொடுத்தீர். அதற்கு இந்த மடியும் உடல்கள் சரியான வெகுமதியாகாது. உம்மிடம் லக்ஷ்மியை விட்டுப் போகவே வந்தேன். எம்பெருமானார் உமக்குத் தீர்த்தப் பிரசாதம் அனுப்பியிருக்கிறார். அதை முதலில் வாங்கிக் கொள்ளும்" என்றான். வைசியன் கை நீட்ட தீர்த்தத்தை முதலில் கொடுத்தான் வரதாழ்வான். அடுத்து பிரசாதத்தைக் கொடுத்தான்.

தீர்த்தத்தை அருந்திய போதே வைசியன் உடலெல்லாம் புல்லரித்தது. பிரசாதத்தை உண்டதும் அவன் கண்களில் தனி ஒளி தோன்றியது. எதிரே நின்ற வரதாழ்வானும் லக்ஷ்மியும் பெருமாளும் பிராட்டியும் நிற்பது போல் தோன்றியது வைசியனுக்கு. வரதாழ்வான் கைகளிலிருந்த சங்கு சக்கரங் களையும் தலைக்கிரீடத்தையும் பார்த்து லக்ஷ்மியை நோக்கினான். அவள் தலையிலும் மகுடமிருந்தது. கைகளில் தாமரை மலர்கள் இருந்தன. விழிகள் அருள் பாலித்தன.

இந்த அற்புதங்களைக் கண்ட வைசியன் நெடுஞ்சாண் கட்டையாக அந்தத் தம்பதிகளின் பாதங்களில் விழுந்தான். "நீங்கள் யாரென்பதை இப்பொழுதுதான் புரிந்து கொண்டேன்" என்றான்.

வரதாழ்வானுக்கு ஏதும் புரியவில்லை. "நான் வருகிறேன். இதோ லக்ஷ்மி இருக்கிறாள்" என்று கூறி நகர முற்பட்டான்.

வரதாழ்வான் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் வைசியன். "என் அபராதத்தைப் பொறுக்க வேண்டும். என்னை உடையவரிடம் அழைத்துச் செல்லுங்கள்" என்று மன்றாடினான்.

இதெல்லாம் உடையவர் மகிமை என்பதை உணர்ந்த வரதாழ்வான் அவனை அழைத்துச் சென்று அறிமுகம் செய்வித்தான். வைசியன் உடையவர் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு தனக்கும் அனுக்கிரகம் செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தான்.

உடையவர் அவனை ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் சேர்த்துக் கொண்டார். "என் மனத்து அழுக்கை அறுத்தீர்கள்" என்றான் வைசியன்.

"மயர்வற மதி நலம் அளிப்பவன் எம்பெருமான்" என்றார் எம்பெருமானார்.

"எம்பெருமானும் எம்பெருமானாரும் ஒன்றுதானே இல்லாவிட்டால் இந்த ஏழை வீட்டுக்கு எழுந்தருளும் பாக்கியம் கிடைக்குமா? பத்துடை அடியவர்க்கு எளியவன் என்ற நம்மாழ்வார் வாக்கு பொய்க்குமா?" என்று கண்ணீர் உகுத்தான் வரதாழ்வான்.

இந்த விசித்திரம் இங்கு நடந்து கொண்டிருக்கையில் எம்பெருமானார் வரவை எதிர்பார்த்து ஏமாந்த யக்ஞேசன் அவர் தனது சகோதரன் இல்லத்தில் தங்கியிருப்பதைக் கேட்டு அந்த இடத்துக்குக் கடுகி வந்தான். உடையவர் காலில் விழுந்து, "ஆசார்யரே! ஒவ்வொரு விநாடியும் தங் களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். தாங்கள் வராத தால் வழி தவறி விட்டீர்களோ என்று வியாகூலமடைந் தேன். பிறகு இங்கு இருப்பதாகக் கேள்விப் பட்டேன். அங் குள்ள தேவரீர் திருமாளிகைக்கு எழுந்தருள வேண்டும்" என்று தனது மாளிகை இருக்கும் திசையைக் காட்டினான்.

எம்பெருமானார் எந்த இதயத்தையும் ஊடுருவும் தமது கண்களால் யக்ஞேசனை நோக்கினார். அவன் சொன்னதையெல்லாம் நிதானமாகக் கேட்டார். பிறகு சொன்னார்: "அப்பனே! உன்னை யாரென்று எனக்குத் தெரியாது. இந்தப் பக்கத்தில் யக்ஞேசனென்று பெயருள்ள ஒரு சீடன் இருந்ததாக எனக்கு ஞாபகம். அவன் பரம பக்தன். பாகவதர்களை உபசரிப்பதில் வல்லவன். அதே பெயருள்ள ஒரு பணக்காரனைப் பற்றியும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அந்த பழைய யக்ஞேசனை நான் அனுப்பிய தூதனால் கண்டு பிடிக்க முடியவில்லை. பணத் திமிர் பிடித்த இன்னொருவனைத்தான் அவனால் பார்க்க முடிந்தது. நீ அவனானால் உன்னை எனக்குத் தெரியாது."

இதைக் கேட்ட யக்ஞேசன் தலையில் இடிவிழுந்தது போல் எம்பெருமானார் திருவடிகளில் விழுந்தான். அவனை உடையவர் தமது இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினார். அவன் கைகூப்பி உடல் நடுங்க நின்றான். அவன் வேதனை யைப் பார்த்த கருணாமூர்த்தியான உடையவர், "அப்பா! உன்னை இப்பொழுது உற்றுப் பார்க்கும்போது எனது சீடன் யக்ஞேசனைப் போலவே காணப்படுகிறாய். உன் ஆடையி லுள்ள சில அழுக்குகளை நீக்கிக் கொள்" என்றார்.

யக்ஞேசன் உடையவரின் திருவுள்ளத்தைப் புரிந்து கொண்டான். அன்று முதல் பாகவதர்களுடைய வேஷ்டி களைத் துவைத்து, ஆசார்ய அபராதத்தை நிவர்த்தி செய்து கொண்டான். திருப்பதியிலிருந்து திரும்பியபோது அவன் இல்லத்தில் எம்பெருமானார் ஒருமாதம் தங்கினார்.

யக்ஞேசனை மன்னித்துவிட்டுக் கிளம்பிய உடையவர் துரிதமாகப் பயணம் செய்து காஞ்சியை அடுத்த சில நாட் களில் அடைந்தார். காஞ்சியை அடைந்தவர் நேராகத் திருக்கச்சி நம்பியின் திருமாளிகைக்குச் சென்று அவரைத் தெண்டனிட்டு நின்றார்.



## 27. பாம்பு வைத்தியம்

ஸ்ரீராமானுஜர் தமது பாகவத கோஷ்டியுடன் காஞ்சி மாநகர் வந்ததும், தமது முதல் குருவும் வழிகாட்டியுமான திருக்கச்சி நம்பி மடத்தை அடைந்து அவரைத் தெண்டனிட்டுக் கைகூப்பி நிற்க, திருக்கச்சி நம்பி தமது சீடரை கண் குளிர நோக்கினார். உடையவரும் திருக்கச்சி நம்பியை நோக்கி "ஸ்வாமி, மீண்டும் தேவரீரை சேவிக்கும் பாக்கியம் பெற்றேன். அறியாக் காலத்து என்னைத் திருத்திப் பணி கொண்டு, உண்மையான ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்ய மார்க்கத்தைக் காட்டிய தேவரீர் அன்று கை கொடுக்கா விட்டால் அடியவன் எந்த நிலையில் இருப்பேனோ, தேவரீருக்கு அடியேன் பட்டுள்ள கடமைக்கு எத்தனை பிறவிகள் எடுத்தாலும் ஈடு செய்ய முடியாதே" என்று விண்ணப்பம் செய்து நின்றார்.

அந்தப் பாராட்டுதலை ஏற்க விரும்பாத நம்பி, "உடையவரே! இதில் நாம் செய்தது யாதொன்றுமில்லை. பெருமாளின் நியமனத்தை நிறைவேற்ற நானொரு கருவியாக இருந்தேன் அவ்வளவுதான்" என்று பதில் சொன்னார். சிறிது சமயம் கொடுத்தாலும் உடையவர் தம்மை மேலும் பாராட்டுவார் என்ற பயத்தினால் "உடைய வரே! பேரருளாளப் பெருமானை சேவிக்க வேண்டாமா?" என்று கேட்டார்.

திருக்கச்சி நம்பியின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட உடையவர், “தேவரீர் நியமனத்துக்காகத்தான் காத்திருக் கிறேன்” என்று கூற, திருக்கச்சி நம்பி உடையவரையும் அவருடன் வந்த பாகவத கோஷ்டியையும் அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் புறப்பட்டார். உடையவரைத் தரிசிக்க வழி நெடுக மக்கள் நின்றார்கள். சிலர் கரம் குவித்து கண்கள் பிரமை உதிர்க்க தலைமீது கைகளைக் கூப்பி நின்றார்கள். மற்றும் சிலர் மண்ணில் விழுந்து தெண்டனிட்டார்கள். இன்னும் சிலர் அவர் சென்ற பின்பு அவரது திருவடிப்பட்ட இடங்களிலிருந்து மண்ணை எடுத்துத் தலையில் தெளித்துக் கொண்டார்கள்.

உடையவரும் கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணி, கோபுரராஜனை சேவித்து, பலிபீடத்தை வணங்கி, மடப் பள்ளி நாச்சியாரையும் கண்டு பெருந்தேவித் தாயாரையும் சேவித்து, மலையேறி பெருமாள் சந்நிதிக்கு வந்து தேவ ராஜனைத் தமது கண்குளிர சேவித்துப் பரவசப்பட்டு நின்றார். பின்பு தம்முடன் வந்திருந்த அருளாளப் பெருமாள் எம்பெருமானாரை நோக்கி, “நம்மிருவரையும் ஒன்ற சேர்த்த பெருமாளைப் பாரும்” என்று அவருக்கும் சேவை பண்ணி வைத்த பின்பு திருக்கச்சி நம்பி மடம் வந்து, “ஆசார்யரே! நான் பெரிய திருமலைக்கு விடை கொள் கிறேன்” என்று விண்ணப்பித்துக் கொண்டார். திருக்கச்சி நம்பி விடைகொடுக்க ஸ்ரீராமானுஜர் திருப்பதி நோக்கிப் புறப்பட்டார். ஏழுமலையானை சேவிக்க வேண்டுமென்ற ஆசையால் துரிதமாகப் பயணமும் செய்தார். அவருடைய வேகத்துக்கு அவருடன் வந்த பாகவத கோஷ்டி சிரமப் பட்டே ஈடு கொடுக்க வேண்டியதாயிற்று.

இடையே வழி தெரியாமல் போகவே பக்கத்து கிணறு ஒன்றிலிருந்து பயிருக்குத் தண்ணீர் பாய்ச்ச ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்தவனொருவனைப் பார்த்து ஸ்ரீராமானுஜர் வழி கேட்க அவன் சரியான பாதையைக்

காட்டினான். உடனே மற்றவர்கள் அந்தத் திக்கு நோக்கிப் புறப்பட்டாலும் உடையவர் நகர்ந்தாரில்லை. அந்த ஏற்றம் இறைத்தானை நோக்கி தரையில் நெடுச்சாண் கட்டையாக விழுந்து வணங்கினார். அதைக் கண்ட அவர் கோஷ்டியார் பிரமித்து நிற்க, "நீங்களும் இவரை வணங்குங்கள்" என்று கட்டளையிட அவர்கள் சிறிது தயங்கினார்கள். பிறகு அது ஆசார்யன் கட்டளையாதலால் அவர்களும் தெண்டனிட்டனர்.

அவர்களில் ஒருவர் தைரியமாகவே கேட்டார், "ஸ்வாமி, கீழ்க் குலத்தவன் அவனைத் தெண்டனிடலாமா?" என்று.

உடையவர் புன்முறுவல் கொண்டு, "அவன் நம்மை விட ஏற்றமுள்ளவன்" என்று சிலேடையாகச் சொன்னார்.

அதனால் திருப்தியடையாத கோஷ்டியைக் கண்டு "அவன் ஜாதி உங்கள் கண்களை மறைக்கிறது. பக்தி ஜாதிக்கு மேற்பட்டது. இந்தப் பரம பாகவதன் இன்று நமக்குப் பேருபகாரம் செய்திருக்கிறான். திருமலைக்கு வழி காட்டியிருக்கிறான். மோக்ஷத்துக்கு வழி காட்டுகிறான் திருமலையான். அவனை அணுக நமக்கு வழி காட்டுகிறான் இந்த பாகவதன். பகவானுக்கு வழிகாட்டுபவன் ஆசார்யனாகிறான்" என்று பரம பாவனமான வைஷ்ணவ சமத்துவத்தை உபதேசித்த ஸ்ரீராமானுஜர் மேலும் பயணத்தைத் தொடங்கினார்.

அங்கிருந்து பயணம் செய்து கீழைத் திருப்பதியை அடைந்த ஸ்ரீராமானுஜர் அங்கு சந்நிதி கொண்டிருந்த பத்து ஆழ்வார்களையும் சேவித்துக் கொண்டும் காலட்சேபம் செய்து கொண்டும் அங்கேயே தங்கிவிட்டார். இப்படி ஏழுமலை ஏறாமல் கீழேயே ஸ்ரீராமானுஜர் தாமதிப்பதைக் கண்ட சீடர்கள், "ஸ்வாமி! மலை ஏற வேண்டாமா?" என்று கேட்க, "வேண்டாம்" என்று பதில் சொன்னார் ஸ்ரீராமானுஜர்.

"இதற்கா இத்தனை தூரம் வந்தோம்" என்று சீடர்கள் கிலேசப்பட்டு நிற்க உடையவர், "இங்கு வந்த பத்து ஆழ்வார்களும் திருமலை ஆதிசேஷன் என்பதால் தங்கள் திருவடிகளை அவர்மீது வைக்க விரும்பாமல் கீழேயே தங்கி விட்டார்கள். நான் என்ன ஆழ்வார்களைவிட உயர்ந்தவனா?" என்று சொல்லிவிட்டார்.

அப்படி அவர் கீழைத் திருப்பதியில் காலட்சேபம் பண்ணி வந்ததைக் கேட்ட விட்டலராயன் என்ற அந்தப் பகுதியின் குறுநில மன்னன் அவரை அண்டி ஸ்ரீவைஷ்ணவனாக மாறினான். இப்படி ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தில் ஈடுபட விரும்பியவர்களைச் சேர்த்துக் கொண்டு அதிலேயே திருப்தியடைந்திருந்த ஸ்ரீராமானுஜர் வந்து பல நாளாகியும் மலைக்கு வராததைக் கண்ட அனந்தாழ்வான் மலையிலிருந்து இறங்கி வந்து, "பெருமாள் உமக்காகக் காத்திருக்கிறார்" என்று சொன்னார்.

இந்த அனந்தாழ்வான் ஏற்கெனவே ஸ்ரீராமானுஜரால் திருமலையில் நந்தவனம் அமைக்க ஸ்ரீரங்கத்திலிருந்து அனுப்பப் பட்டவர். உடையவர் அனந்தாழ்வானைக் குளிர நோக்கி, "அனந்தாழ்வான்! ஆழ்வார்கள் யாரும் மலையில் காலடி வைக்கவில்லையே, நான் மட்டும் எப்படி ஏறுவேன்" என்றார்.

"ஸ்வாமி! அப்படியானால் என்னை மட்டும் நந்தவனம் அமைக்க ஏன் அனுப்பினீர்கள்? நான் மட்டும் மலையில் நடக்கலாமா?" என்று வினவினார் அனந்தாழ்வான். "தேவரீர் ஏறாவிட்டால் தேவரீரை அனுசரித்து யாரும் மலைக்கு வரமாட்டார்கள். அங்கு கோயிலிருந்து பயன் என்ன?" என்றும் அனந்தாழ்வான் வினவினார்.

ஸ்ரீராமானுஜர் சிந்தித்தார். "எம்பெருமான் திருவுளம் அப்படியானால் வருகிறோம்" என்று கூறி தமது கோஷ்டியுடன் மறுநாளே மலையேற முற்பட்டார். ஏழு

மலைகளின் திவ்யமான காட்சிகளை அனுபவித்துக் கொண்டும், அவற்றின் மீது உறையும் ஸ்ரீவெங்கடேசப் பெருமாளை மனத்தால் ஸ்மரித்துக் கொண்டும் மலை களை ஏறினார் ஸ்ரீராமானுஜர். அவரைப் பாதிதூரத்தில் தீர்த்தப்பிரசாதங்களுடன் எதிர்கொண்டார் பெரிய திருமலை நம்பி. தனது மாமாவான பெரிய திருமலை நம்பி யின் திருவடிகளில் தெண்டனிட்ட ஸ்ரீராமானுஜர், "இந்த பிரசாதங்களை தேவரீருடைய சேவகர்களில் யாரிடமாவது அனுப்பக் கூடாதா?" என்று விசாரித்தார்.

பெரிய திருமலை நம்பி சொன்னார், "நான் எச மானாக இருக்கக்கூடிய சேவகர் யாரையும் திருப்பதியில் காணோம்" என்று.

இதைக் கேட்ட ஸ்ரீராமானுஜர் "திருப்பதிப் பெரு மாளுடைய இதயம் தேவரீர் என்று மக்கள் பேசுகிறார்கள். அதில் பொருளிருப்பதை இன்று கண்டேன்" என்றார். பிறகு பெரிய திருமலை நம்பி முன்னே வழிகாட்ட, அவரைத் தொடர்ந்தது ஸ்ரீராமானுஜர் கோஷ்டி. அப்படிக் கோவிலை வலம் வரும்போது ஒரு நந்தவனத்தைக் காட்டிய அனந்தாழ்வான், "ஸ்வாமி! இதுதான் தேவரீர் நந்தவனம்" என்று தாம் வகுத்த இராமானுஜ நந்தவனத்தைக் காட்டினார். பற்பல புஷ்பங்களால் குலுங்கிய அந்த உத்தி யானவனத்தைப் பார்த்த உடையவர், "அனந்தாழ்வான்! நீ உண்மையான சிஷ்யன் என்பதை நிரூபித்து விட்டாய். உன்னை வளர்த்ததால் நான் பெருமை பெற்றேன்" என்று சிலாகித்தார். அனந்தாழ்வான் மெய்சிலிர்த்தார்.

இப்படிப் பிரதக்ஷிணத்தை முடித்துக்கொண்டு பெருமாள் சந்நிதிக்கு வந்த எம்பெருமானார் நீண்ட நேரம் சந்நிதியில் நின்றார். கண்களால் ஸ்ரீநிவாஸனை விழுங்கினார். மனத்தைப் பெருமாளின் திருவடிகளில் ஐக்கியப்படுத்தினார். இப்படி நெடுநேரம் பெருமாளின் திருவடி சாம்ராஜ்யத்தில், அமைதியில், ஆனந்தத்தில்,

ஆழ்ந்து மீண்ட ஸ்ரீராமானுஜர் பெருமாளை சேவித்த பின்பு, "இது நானிருக்கத் தகுந்த இடமல்ல. நித்யஸூரி களும் தவசிரேஷ்டர்களும் இருக்க வேண்டிய இடம்" என்று சொல்லிக் கீழே செல்ல எத்தனிக்க, அவரை பெரிய திருமலை நம்பி தடுத்து, "திவ்யதேசங்களில் மூன்று நாட்கள் தங்காமல் போகக்கூடாது என்ற விதி இருக்கிறது" என்று கூறி அங்கேயே மூன்று நாள் தங்க வைத்தார். அப்படியே மூன்று நாட்கள் அங்கு தங்கி தினமும் விடியற் காலையில் பெருமாளை சேவித்துப் பல்லாண்டு சேவித்த உடையவர் நான்காம் நாள் பெரிய திருமலை நம்பியுடன் புறப்பட்டுக் கீழைத் திருப்பதிக்கு வந்து அங்கிருந்த பெரிய திருமலை நம்பியின் திருமாளிகையில் ஓராண்டு காலம் தங்கினார். அந்த ஓராண்டு காலத்தில் ஆதிகாவ்யமான ஸ்ரீராமாயண மகாகாவியத்தைப் பெரிய திருமலை நம்பி யிடம் பாடம் கேட்டார். அதன் ரகஸ்யார்த்தங்களை யெல்லாம் பெரிய திருமலை நம்பி உடையவருக்கு உப தேசித்தார். அந்தக் கிரந்தத்தை அவர் வாசித்த அந்த ஓர் ஆண்டில் பல விசித்திரங்களைக் கண்டார்.

திருக்காளத்தியிலிருந்து பெரிய திருமலை நம்பியால் மீட்டுக் கொண்டுவரப்பட்ட தமது ஒன்றுவிட்ட தம்பி கோவிந்தன் பரமபாகவதனாக மாறிவிட்டதைக் கவனித் தார். ஆனால் அவன் போக்கில் பல விசித்திரங்கள் இருந்தன. பெரிய திருமலை நம்பிக்குப் பணிவிடை செய்வதையே தனது பாக்கியமாகக் கருதிய கோவிந்தன் அவர் சேவையிலேயே காலம் கழித்துக்கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் பெரிய திருமலை நம்பி படுக்க மெத்தை போட்டுவிட்டு அதில் முதலில் தான் படுத்து உருண்டு விட்டுப் போனான். அந்த அபசாரத்தைக் கண்ட உடைய வர் அதைப் பெரிய திருமலை நம்பிக்குத் தெரியப்படுத்த, நம்பி கோவிந்தனை விசாரித்தார். "மகனே, என் படுக்கை யில் நீ படுக்கிறாயாமே?' ' என்று கேட்டார்.

"ஆம், தினம் அப்படித்தான் செய்கிறேன்" என்றான் கோவிந்தன்.

"தினமா?" நம்பி வினவினார்.

"ஆம்" கோவிந்தன் பதில் திட்டமாக இருந்தது.

"ஆசார்யன் படுக்கையில் படுப்பதன் விளைவு தெரியுமா?"

"தெரியும், மீளா நரகம்."

"தெரிந்துமா நடக்கிறாய் அப்படி?" என்று வியந்து கேட்டார் நம்பி.

"ஆம் ஸ்வாமி! படுக்கையில் உறுத்தல் ஏதாவதிருந் தாலும், பூச்சி பொட்டு இருந்தாலும் அவை தேவரீர் நித்திரையைப் பாதிக்கும். ஆகையால் நான் முதலில் படுத்து படுக்கையைச் சோதிக்கிறேன். அதனால் எனக்கு நரகம் கிடைப்பதை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன்" என்றான் கோவிந்தன். இத்தகைய தியாகத்தைக் கண்டு உடையவர் கண்களில் நீர் துளித்தது.

இன்னொரு நாள் நம்பியின் திருமாளிகையை அடுத்த தோட்டத்தில் நடந்துகொண்டிருந்த எம்பெருமானார், ஒரு சர்ப்பத்தின் வாயில் கோவிந்தன் கையைவிட்டுப் பார்த்தி ருப்பதைக் கண்டு திகைத்தார். சில நிமிடங்கள் கழித்துச் சர்ப்பத்தை விட்டு வந்த கோவிந்தனை எம்பெருமானார் இடைமறித்து, "கோவிந்தா! இதென்ன சாகஸம்" என்று வினவினார்.

"ஸ்வாமி! அந்த சர்ப்பம் மிகுந்த வேதனையுடன் புரண்டு கொண்டிருந்ததைப் பார்த்து அதை எடுத்து சோதித்தேன். அதன் நாக்கில் முள் தைத்திருந்தது. அதை எடுத்தேன். இப்பொழுது அதன் வேதனை குறைந்தது" என்றான். பிராணிகளிடத்தில் கோவிந்தனுக்கிருந்த தயையைக் கண்டுபிரமித்த ஸ்ரீராமானுஜர் கோவிந்தனைப் பற்றி ஒரு முடிவுக்கும் வந்தார்.



# 28. விற்ற மாடு! தாசி வீட்டு வாசல்!

திருப்பதியில் பெரிய திருமலை நம்பியிடம் ஓராண்டு காலம் ஸ்ரீராமாயண காலட்சேபம் செய்த பிறகு ஸ்ரீ ராமானுஜர் ஸ்ரீரங்கத்திற்குக் கிளம்ப முடிவு செய்தார். அதுமட்டுமல்ல அவர் செய்த முடிவு. தமது ஒன்றுவிட்ட தம்பியான கோவிந்தன் பாம்புக்கு மருத்துவம் பார்த்ததி லிருந்து ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படையான கருணையை அவன் அளவு மீறி அனுஷ்டானத்தில் கொண்டு வந்து விட்டான் என்பதைப் புரிந்து கொண்ட தால் அவனையும் தம்முடன் அழைத்துச் செல்ல ஆசை கொண்டார். இருப்பினும் பெரிய திருமலை நம்பிக்கு அவன் செய்து வரும் கைங்கர்யத்திலிருந்து அவனை எப்படி மீட்பது என்ற நினைப்பினால் நம்பியிடம் ஏதும் கேட்காமலேயே விடைகொண்டார்.

அந்தச் சமயத்தில் பெரிய திருமலை நம்பி தமது மருமகனும் மகாஞானியுமான ஸ்ரீராமானுஜரை நோக்கி, "ஸ்ரீராமானுஜரே! இத்தனை தூரம் எழுந்தருளி இத்தனை நாள் அடியேனுடன் இருந்த உமக்கு நான் ஏதும் தரப் பெற்றிலேனே" என்று துயரத்துடன் சொன்னார்.

தமது தாய் மாமனும் குழந்தைப் பருவத்திலேயே தமக்குப் பெயரிட்டவரும் இதர வைதீக கர்மாக்களைச்

செய்தவருமான பெரிய திருமலை நம்பி தம்மை அன்று மரியாதைச் சொற்களால் அழைத்ததற்குக் காரணம் தமது சந்நியாச ஆசிரமமே என்பதைப் புரிந்து கொண்டு மாமனை மனத்தினால் வணங்கினார் ஸ்ரீராமானுஜர். அதுமட்டுமின்றி அவர் தமக்கு ஏதும் தர இயலாதது பற்றி வருத்தப் பட்டதை நீக்கவும், தமது அபிலாஷையைப் பூர்த்தி செய்து கொள்ளவும், "ஸ்வாமி! தேவரீர் அடியவனுக்கு ஏதாவது தந்தருள கிருபை கொண்டால் இந்த கோவிந்தனை அடியேனுக்குக் கொடுக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

உடையவர் தம்மிடம் உள்ளது ஒன்றைக் கேட்டு விட்டாரே என்ற குதூகலத்தினால் கோவிந்தனை அழைத்து, "வாரீர் கோவிந்தப் பெருமாளே! நமக்கு எப்படிக் கைங்கரியம் செய்தீரோ அப்படியே எம்பெருமானாருக்கும் தொண்டு செய்து கொண்டிரும். உம்மை அவருக்கு தானம் செய்து விட்டேன்" என்று நியமித்தார்.

பிறகு உடையவர் பெரிய திருமலை நம்பியை நெடுஞ்சாண் கட்டையாக நிலத்தில் விழுந்து தண்டன் சமர்ப்பித்து தம்பி கோவிந்தனையும் அழைத்துக் கொண்டு திருமலையிலிருந்து ஸ்ரீரங்கம் நோக்கித் தமது பரிவாரங்களுடன் புறப்பட்டார். போகும் வழியிலிருந்த எல்லாத் திருத்தலங்களையும் சேவித்து மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டு சென்றார். கடிகாசலம் என்னும் சோளசிம்மபுரத்தில் அக்காரக்கனிப் பெருமானை சேவித்து திருப்புட்குழியிலே க்ருத்ர புஷ்கரணியில் தீர்த்தம் ஸ்வீகரித்து பெரிய உடையார், சண்டப் பிரசண்டர்கள், மரகதவல்லித் தாயார், திருவனந்தாழ்வான் ஆகிய எல்லோரையும் சேவித்துக் காஞ்சி வந்து திருவெஃகாவிலுள்ள சொன்ன வண்ணம் செய்த பெருமாளையும் வணங்கித் திருக்கச்சி நம்பியின் இல்லத்துக்கு வந்து சேர்ந்தார்.

இத்தனை திவ்யத் தலயாத்திரைகளிலும் ஒரு முக்கிய விஷயத்தை உடையவர் கவனித்தார். தம்முடன் வந்த கோவிந்தன் எதிலும் எந்த மகிழ்ச்சியையும் காட்டாமல் சோர்ந்த முகத்துடனிருந்ததைப் பார்த்த எம்பெருமானார் அவர் சோகத்துக்குக் காரணம் அவர் பெரிய திருமலை நம்பியிடமிருந்து பிரிந்ததே என்பதை ஊகித்தறிந்தார். கருணை வள்ளலான எம்பெருமானார் பாம்பிடமும் கருணை காட்டிய கோவிந்தன் உள்ளத்துயரைத் தீர்க்க தீர்மானித்து "கோவிந்தப் பெருமாளே!" என்றழைத்தார்.

"என்ன ஸ்வாமி! தேவரீர் இந்த சிறியவனை இத்தனை பெரிய முறையில் அழைக்க வேண்டுமா? தம்பி என்றழைத்தால் போதாதா? அல்லது டேய் கோவிந்தா என்றாலும் தகுமே" என்றான் கோவிந்தன்.

"அடியேன் சந்நியாச ஆசிரமம் மேற்கொண்டு விட்டேன். ஆசை, உறவுகள், அனைத்தும் அறுப்பவன் தான் சந்நியாசி. ஆகையால் நமக்குள் அண்ணன் - தம்பி உறவு கிடையாது. அதுமட்டுமல்ல நமது ஆசார்யரில் ஒருவரான பெரிய திருமலை நம்பியே உம்மை கோவிந்தப் பெருமாளே என்றழைக்க, அதற்கும் குறைந்து அழைக்க அடியேனுக்கு அதிகாரம் கிடையாது" என்றார் ஸ்ரீராமானுஜர்.

கோவிந்தனும் அதற்கு மேல் ஏதும் கேட்கவில்லை. "ஸ்வாமியின் நியமனம் என்ன?" என்று கேட்டான்.

ஸ்ரீராமானுஜர் கருணை நிரம்பிய கண்களால் கோவிந்தனை நோக்கி, "நீர் மீண்டும் திருமலைக்குச் சென்று பெரிய திருமலை நம்பியிடம் சில காலம் இருந்து வாரும்" என்று கட்டளையிட்டார். கோவிந்தனுக்குத் துணையாக இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையும் அனுப்பி வைத்து, திருக்கச்சி நம்பியுடனே தங்கியிருந்து பேரருளாளப் பெருமானை சேவித்துக் கொண்டிருந்தார்.

கோவிந்தனும் உவகை மிக்கவனாய் ஸ்ரீவைஷ்ண வர்களுடன் கிளம்பித் திருப்பதிக்கு மிகத் துரிதமாக வந்து சேர்ந்தான். நேராகப் பெரிய திருமலை நம்பியின் திரு மாளிகை வாசலுக்கு வந்து திருமாளிகைக்கெதிரே தண்டனிட்டு நின்றான். திருமாளிகை வாசலில் இருந்த அடியார்கள் உள்ளே சென்று கோவிந்தன் வந்திருக்கும் விபரத்தை பெரிய திருமலை நம்பியிடம் சொல்ல பெரிய திருமலை நம்பியின் உள்ளம் பெரிதும் கலங்கிற்று. மிகுந்த கிலேசமும் கோபமும் கொண்ட நம்பி, "அந்தப் பைத்தியக் காரனை இங்கு யார் வரச் சொன்னது? போகச் சொல்லுங்கள்" என்று கூறினார்.

அதைக் கேட்ட அவருடைய மனைவி, "நன்றா யிருக்கிறது உங்கள் பேச்சு. இத்தனை தூரம் பயணம் செய்து இளைத்து வந்த குழந்தையை உள்ளே அழைத்துத் தீர்த்தப் பிரசாதம் கொடுத்து, உணவு அளிக்காமல் அவனைப் போகச் சொல்கிறீர்கள். இதென்ன நியாயம்?" என்று மருமானுக்குப் பரிந்து பேசினாள்.

பெரிய திருமலை நம்பி அவளை வியப்பும் சினமும் கலந்த பார்வையுடன் நோக்கினார். "அடி பைத்தியக்காரி! அவனுக்குச் சாப்பாடு நாம் ஏன் போட வேண்டும்? விற்ற பசுவுக்குப் புல்லிடுவாருண்டோ? யாரிடம் விற்றோமோ அவனல்லவா பராமரிக்க வேண்டும். கொடுத்ததைத் திரும்பிப் பெறும் வழக்கம் ஸ்ரீவைஷ்ணவனிடம் கிடை யாது" என்று கூறினார் நம்பி சினம் குரலிலும் ஒலிக்க.

இதை வாயிலிலிருந்தே கேட்ட கோவிந்தனும் பெரிய திருமலை நம்பியின் நிஷ்டூரமான வார்த்தைகளைச் செவி யுற்றான். கொடுத்ததைத் திரும்பப் பெறுதல் பாகவத தர்ம மல்ல என்பதையும் புரிந்து கொண்டான். ஆகவே வாசலில் நின்றபடியே திருமாளிகையைத் தண்டனிட்டு எந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் தன்னுடன் வந்தார்களோ அவர்

களுடன் புறப்பட்டு மீண்டும் காஞ்சியை எய்தி உடைய வரை சேவித்து நின்றான் கோவிந்தன். உடன் வந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமலையில் நடந்ததைச் சொன்னார் கள். அதைக் கேட்ட உடையவர் பெரிய திருமலை நம்பி யின் மேதையையும் ஸ்ரீவைஷ்ணவ அஸ்திவார ஞானத்தை யும் மனத்தில் ஏற்று அகம் குளிர்ந்து கோவிந்தனைக் கண் குளிரக் கடாட்சித்து அவரைத் திருத்திப் பணி கொள்ள வேண்டிய அனைத்தையும் செய்தார்.

உடையவர் சந்நிதானத்தில், கோஷ்டியில், கோவிந்தன் புதுமனிதனாகத் திரும்பினான். உடையவர் பிறகு திருக்கச்சி நம்பியிடம் விடைகொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அங்கு கோவிந்தனின் விரக்தியும் ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தின் அருமைகளும் மெதுவாக விளங்கலாயின. ஆரம்பத்தில் கோவிந்தனுடைய விவகாரங்கள் விபரீதமாகத் தெரிந்தாலும் போகப் போக அவர் விரக்தியின் பெருமை அனைவருக்குமே புரியலாயிற்று.

ஒருநாள் கோவிந்தப் பெருமாள் ஒரு தாசி வீட்டு வாசலில் நின்றிருந்தார். நின்ற இடத்தை விட்டு அசையா மல் நீண்ட நேரம் நின்றுகொண்டே இருந்தார். இதைக் கண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலர் ஸ்ரீராமானுஜரிடம் தெரிவித்தார்கள்.





# 29. தாமரை முத்து

திருவரங்கன் கோவில் தாசி வீட்டு வாசலில் உலகத்தை மறந்து, செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களையும் மறந்து கோவிந்தப் பெருமாள் நின்றிருந்ததை ஸ்ரீவைஷ்ணவ ரொருவர் சொல்லக் கேட்ட எம்பெருமானார் அதைப்பற்றி கோஷ்டியிலேயே விசாரித்தார். "கோவிந்தப் பெருமாளே! அங்கே எதற்காக நின்றீர்?" என்று கேட்க கோவிந்தன், "ஸ்வாமி! நான் அங்கு நின்றது உண்டு" என்று கூறியதன்றி. "தேவரீரைப் பற்றிய பாட்டு அந்த வீட்டுக்குள்ளிருந்து மதுரமாய் வந்துகொண்டிருந்தது. அதில் லயித்துவிட்டேன்" என்று விளக்கமும் தந்தார். கோவிந்தனைப்பற்றி புகார் செய்த ஸ்ரீவைஷ்ணவ பிராம்மணரும் "ஆம் ஆம். பாட்டு கேட்டது" என்று ஒப்புக் கொண்டார். கோவிந்தப் பெருமாளுடைய திரிகரண சுத்தியான பக்திப் பிரவாகத்தைக் கண்டு ஸ்ரீராமானுஜர் வியந்தே போனார்.

கோவிந்தனைப்பற்றி அடுத்து ஏற்பட்ட இன்னொரு நிகழ்ச்சியும் பிரமிக்கத்தக்கதாயிருந்தது. கோவிந்தப் பெருமாள் ஸ்ரீரங்கம் வந்தவுடனேயே அவர் தாயாரும் மனைவியும் அங்கு வந்து குடித்தனம் வைத்தார்கள். கோவிந்தன் மனைவி பெரியவளானாள் என்ற விஷயத்தை தாயார் மகனிடம் தெரிவித்தாள். "அப்பா! உன் மனைவி பக்குவமானாள்" என்று சூசகமாகச் சொன்னாள். தாயார்

சொல்வதன் பொருளைப் புரிந்துகொண்ட கோவிந்தனும் "அப்படியானால் இருட்டும் தனிமையும் இருக்கும் சமயத்தில் அவள் வரட்டும்" என்றார்.

அவளும் பல நாட்கள் சமயம் பார்த்து ஒரு நாளும் அவகாசம் கிடைக்காது போகவே கோவிந்தன் பாரா முகத்தைப்பற்றி உடையவரிடம் விண்ணப்பம் செய்ய அவர் கோவிந்தனை அழைத்து, "கோவிந்தப்பெருமாளே! ஒரு ருதுகாலம் பார்த்து உமது மனையாளிடம் போம். இது நமது ஆணை" என்று கட்டளையிட்டார். எம்பெருமானாரை எதிலும் எதிர்த்துப் பேசாத கோவிந்தனும் அதற்கு ஒப்புக் கொண்டார்.

கோவிந்தன் தாயாரும் மகிழ்ச்சியடைந்து நாட்டுப் பெண்ணை அலங்கரித்து ஒரு நாளிரவு கோவிந்தன் பள்ளியறைக்கு அனுப்பினாள். அன்று இரவு முழுவதும் தமது மனையாளுக்கு அந்தர்யாமியான பகவானுடைய பிரபாவங்களை எடுத்துரைத்து அனுப்பிவிட்டார் கோவிந்தன். வேறு அனுபவத்துக்கு வந்த கோவிந்தன் மனைவி ஏமாற்றமடைந்து மாமியாரிடம் மறுநாள் விஷயத்தைச் சொன்னாள். கோவிந்தன் தாயார் மறுநாள் காலையில் "கோவிந்தா! நீ செய்தது சரிதானா! உபந்யாசம் கேட்கவா உன் மனையாளை நேற்றிரவு அனுப்பினேன்?" என்று கடிந்துகொண்டார்.

"அம்மா! அந்தர்யாமியான பகவத்ஜோதி உடனிருக்கும்போது மனித விகார அவஸ்தைகளுக்கு இடமேது?" என்று பதில் சொல்லிவிட்டார்.

இந்த விஷயம் அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் காதில் விழ அவர்கள் உடையவரிடம்போய் விவகாரத்தைச் சொல்லவே, மறுபடியும் உடையவர் விசாரணை நடத்தினார். "கோவிந்தப் பெருமாளே! இராமுற்ற (இரவு முழுவதும்) என்ன செய்தீர்?" என்று புன்முறுவல் செய்து வினவினார்.

ஆசார்யன் கேட்டதன் அர்த்தத்தைப் புரிந்துகொண்ட கோவிந்தன், "ஸ்வாமி! தேவரீர் ஆணையை நிறைவேற்ற இரண்டு விஷயங்கள் தேவையாயிருந்தன. அவை கிடைக்க வில்லை" என்று பதில் சொன்னார்.

"என்ன இரண்டு விஷயங்கள்?" என்று உடையவர் கேட்டார்.

"இருட்டு, தனிமை இரண்டிருக்க வேண்டும்" என்றார் எம்பார்.

"இல்லாமலென்ன? தனி அறையில்தானே இருந்தீர்? இரவுதானே அப்பொழுது!" என்று கேட்டார் உடையவர்.

"தனி அறைதான், ஆனால் தனிமையில்லை. இரவு தான், ஆனால் இருட்டில்லை" என்றார் கோவிந்தன்.

ஸ்ரீராமானுஜ சதஸ் வியப்படைந்தது. ஆனால் கோவிந்தன் பிரபாவத்தை வெளிப்படுத்த ஸ்ரீராமானுஜர் மேற்கொண்டு கேட்டார்: "தெளிவாகச் சொல்லும் கோவிந்தப் பெருமாளே" என்றார் உடையவர்.

கோவிந்தன் சிறிதும் சிந்திக்காமலே பதில் சொன்னார். "ஸ்வாமி! தேவரீர் அறியாதது ஏதுமில்லை. அறை தனிமை யானதுதான். ஆனால் எப்பொழுதும் பக்கத்தில் அந்தர்யாமி யான பகவான் உட்கார்ந்திருக்கிறான். ஆகையால் தனிமை யில்லை. நேரம் இரவுதான். இருப்பினும் உடனிருக்கும் எம் பெருமானின் சோதி இருட்டை அண்ட விடாமல் பிரகாசத்தை எங்கும் வீசுகிறது. இந்த நிலையில் அடியேன் என்ன செய்யட்டும்?" என்று விளக்குகிறார் கோவிந்தன்.

அவருடைய வைராக்கியத்தைக் கண்டு கோஷ்டி பிரமித்தது. உடையவர் பரமகிருபையுடன் கோவிந்தனை நோக்கி, "இத்தனை விரக்தியுடைய நீர் ஆசிரமத்தை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்றார்.

"அடியேனுக்கு சந்நியாச ஆசிரமம் அருளவேண்டும்" என்று தெண்டனிட்டார் கோவிந்தப் பெருமாள்.

உடனே கோவிந்தப்பெருமாளுக்குத் திரிதண்டம் காஷாயம் இவற்றைக் கொடுக்க உத்தரவிட்ட உடையவர், "கோவிந்தப்பெருமாளே! என் பெயரே உமக்கும் இருக்கட்டும்" என்றார்.

"அடியவன் சுமக்கும்படியான பெயரைத் தரவேணும். தேவரீர் பாதத்தை ஆசிரயிப்பவன் தேவரீர் நாமத்தைத் தரிக்கக்கூடாது" என்று சொன்னார் கோவிந்தன்.

"அப்படியானால் கொஞ்சம் சுருக்கி எம்பார் என்று பெயர் இருக்கட்டும் உமக்கு" என்று அருளினார் உடைய வர். அப்பொழுது ஏற்பட்டது எம்பார் பட்டம்.

உடையவர் சந்நிதியிலேயே ஒரு மகிமை உண்டு. அவரது திருவடிகளைப் பற்றினோர் அவரைப்போலவே பரம விரக்தர்களாய் மிகவும் உயர்ந்தவர்களாயிருந்தார்கள். இப்பொழுதுள்ள சில துறவிகளைப் போல பாசபந்தங் களைக் கட்டிக்கொண்டு திண்டாடாதவர்களாய், போலித் துறவிகளாய் இல்லாதவர்களாக, ஆசிரமத்துக்குத் தகுந்த வாழ்க்கை நடத்தி வந்தார்கள். ஸ்ரீராமானுஜ சமீபமென்னும் சோதியில் வாழ்ந்தவர்களிடம் அக்ஞான இருளில்லை, அகங்கார பீடிப்பு இல்லை. எம்பாரைப் போன்ற, முதலி யாண்டானைப் போன்ற உறவினர்கூட இருந்தும் அந்த பாச பந்தங்கள் உடையவரை பீடிக்கவில்லை. உடையவரும் அவர்களிடையில் தாமரை இலைத் தண்ணீர் போல, ஜொலிக்கும் முகத்தைப்போல வாழ்ந்து வந்தார்.

அவருடைய சீடர்களும் அவரைப்போலவே உயர்ந்த வர்களாய், சர்வ குணசீலர்களாய் இருந்தபடியால் ஸ்ரீவைஷ்ணவ பிரபாவம் எங்கும் பரவலாயிற்று.





# 30. எந்த எம்பெருமானார்?

ஸ்ரீராமானுஜருடைய பிரபாவத்தை எழுதினாலும் எழுதலாம். ஆனால் அவரைச் சூழ்ந்திருந்த அவரது சீடர்களின் பிரபாவத்தை எழுதுவது மிகவும் கடினம், சிந்தனைக்கும் அப்பாற்பட்ட தியாக புத்தியையும் வேதங்கள் கூட அண்ட முடியாத மகா ஞானத்தையும் ஆசார்யனைவிட வேறு தெய்வமில்லை என்ற திடமான தெளிவான அறிவையும் அவரது சீடர்கள் பெற்றிருந்தார்கள். ஒரு தீபத்திலிருந்து ஏற்றப்படும் பல அகல் விளக்குகள் போல ஸ்ரீராமானுஜனென்னும் பெரு விளக்கிலிருந்து ஏற்றப்பட்ட சீடர்களெனும் அகல் விளக்குகள் அஞ்ஞான இருளைக் கிழிக்கும் பேரறிவைப் பெற்றிருந்தார்கள். அவர்களுக்கு சதா ஸ்ரீராமானுஜ சிந்தனையைத் தவிர வேறில்லை, அவருடைய திருவடிகளையே நம்பினார்கள். ஆனால் எல்லாவற்றுக்கும் தலையாட்டும் சுபாவமுள்ளவர்களுமல்ல, தங்கள் கருத்தையும் மறைமுகமாகத் தெரிவிக்கும் சுபாவமுள்ளவர்கள். இப்பேர்ப்பட்ட சீடர்கள் கலந்த கோஷ்டி ஸ்ரீ வைஷ்ணவ தீபமாக எங்கும் ஒளிவிட்டது.

அந்த சீடர்களின் ஆசார்ய பக்தி ஆச்சரியமானது. குருவுக்கு சமம் என்று மூன்றாமவர்கள் சொன்னாலும் பொறுக்காத சுபாவமுடையவர்கள். ஓர் உதாரணம்

கவனிப்போம். யக்ஞமூர்த்தியாக ஸ்ரீராமானுஜரை வாதத்தில் வெல்ல வந்து அவர் திருவடியே கதியென்று மாறி, உடையவராலேயே அருளாளப் பெருமாள் எம் பெருமானார் என்று திருநாமம் இடப் பெற்று தனி மடத்தில் உறைந்து வந்த அந்த சீடர் ஒரு நாள் திகைத்துப் போனார்.

தூரதேசத்திலிருந்து வந்த இரு ஸ்ரீராமானுஜ பக்தர்கள் ஸ்ரீரங்கத்தை அடைந்து "எம்பெருமானார் மடம் எங்கே?" என்று விசாரித்தார்கள்.

ஸ்ரீரங்கவாசிகள் சிலர் "எந்த எம்பெருமானார் மடத்தைக் கேட்கிறீர்கள்?" என்று அவர்களைத் திரும்பக் கேட்டார்கள்.

இந்தக் கேள்வியால் பிரமிப்படைந்த அந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் "அப்படியானால் இங்கு இரண்டு எம் பெருமானார்கள் இருக்கிறார்களா? அதற்குள் ஸ்ரீவைஷ் ணவ மதத்தில் பிளவு கண்டு விட்டதா? இரண்டு ஆசார்யர்கள் ஏற்பட்டு விட்டார்களா?" என்று வின வினார்கள்.

அதற்குள் ஸ்ரீரங்கவாசிகள் பதில் சொன்னார்கள். "நீங்கள் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரைப் பற்றிக் கேள்விப்பட்டதில்லையா?" என்று வினவினார்கள்.

"கேள்விப்படவில்லை. கேள்விப்பட அவசியமு மில்லை. எங்களுக்கு அசல் எம்பெருமானார், ஸ்ரீராமானு ஜர். அவரை தெண்டனிடவே நாங்கள் வந்திருக்கிறோம்" என்று அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பதில் சொல்ல உடையவர் மடம் அவர்களுக்குக் காட்டப்பட்டது.

இந்த நிகழ்ச்சி அருளாளப் பெருமாள் எம்பெரு மானார் காதிலும் விழவே அவர் பெரும் திகைப்பும் வேதனையும் அடைந்தார். "இந்தக் கதி என்னால்தானே

வந்தது? உடையவரிடமிருந்து பிரிந்து தனி மடத்திலிருந்தது எனது தவறல்லவா?" என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டு உடனடியாக ஒரு தீர்மானத்துக்கு வந்தார். சில வேலையாட்களுக்குச் சொல்லியனுப்பி அவர்கள் வந்ததும் "இந்த மடத்தைத் தரை மட்டமாக இடித்துத் தள்ளுங்கள்" என்றார். அப்படி மடத்தைத் தரை



மட்டமாக்கி விட்டு உடையவரிடம் வந்த அருளாளப் பெருமாள் எம்பெருமானார், ஆசார்யன் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்தார்.

"என்ன எம்பெருமானாரே! என்ன விசேஷம்?" என்று விசாரித்தார்.

"அடியேனைத் தேவரீருடைய திருவடிகளிலிருந்து விலக்கியதால் இந்த அபாக்யன் அறியாமை இருளில் அழுந்திக் கிடந்தான். இது நியாயமா?" என்று வினா வினார் அருளாளப் பெருமாள்.

என்ன நடந்தது என்பதை அறியாத எம்பெருமானார் அவர் சோகத்தின் காரணத்தை விசாரித்தார். நடந்ததை விவரமாக எடுத்துரைத்தார் அருளாளப் பெருமாள்.

"தேவரீர் திருவுள்ளந்தான் என்ன?" என்று கேட்டார் எம்பெருமானார்.

"இந்த விநாடி முதல் நான் தேவரீரை விட்டுப் பிரியா திருக்க வேண்டும். தேவரீர் கைங்கர்யமே எனக்கு வாழ்க்கையாக வேணும்" என்று அருளாளப் பெருமாள் பிரார்த்தித்தார்.

"அப்படியே ஆகட்டும்" என்று உடையவர் திருவாய் மலர்ந்தருளி தமது மடத்திலேயே அவரை வைத்துக் கொண்டார். பிறகு கடைசி வரை ஆசார்யனைப் பிரிய வில்லை அருளாளப் பெருமாள் எம்பெருமானார்.

'ஞான ஸாரம், பிரமேய ஸாரம்' என்று இரண்டு நூல்களை அவர் இயற்றினார். அவர் பெயர் இன்றும் பிரசித்தமாயிருக்கிறது. "உண்மையான சீடனுக்கு ஆசார் யன்தான் பிரம்மம். ஆசார்ய கைங்கர்யமே அவன் வ.ழ்க்கையின் லட்சியமாக இருக்க வேண்டும்" என்ற தத்துவத்தை உலகத்துக்கு வழங்கிய அருளாளப் பெருமாள் எம் பெருமானாரின் கீர்த்தி இன்றும் அழியாமலே இருந்து வருகிறது.





# 31. வில்லிதாசன்

உடையவர்களுடைய சீடர்களில் மகா உத்தமன், பரிசுத்தன், எனக் கொண்டாடப்பட்ட *பிள்ளையுறங்கா வில்லிதாசன் வாழ்க்கை சரித்திரம் மிகப் பிரசித்தியானது ஸ்ரீராமானுஜர் ஒவ்வொரு சீடன் மூலம் ஸ்ரீவைஷ்ணவத்தின் ஒவ்வொரு தர்மத்தையும் சிந்தனையையும் வெளிப் படுத்தினார். அந்தத் தர்மப் பிரசாரத்தில் வில்லிதாசனின் வாழ்க்கை அனுபவமும் ஒன்று.

நிசுளாபுரியெனும் உறையூரில் வசித்து வந்த வில்லி தாசன் பெரிய மல்லன். அவன் வல்லமையை முன்னிட்டு சுற்றுப்புறங்களிலிருந்த மல்லர்கள் பலரும் அவனுக்கு திறை செலுத்தி வந்தார்கள். அரசனும் அவனை தன் அரசவை மல்லனாக வைத்திருந்தான். இந்த வில்லிதாசன் பொன் போன்ற நிறமுடைய தேகத்தைப் படைத்தவளும் மிக அழகியுமான பொன்னாச்சியென்ற தாசியை மணந்திருந் தான். சதா அவள் அழகில் மயங்கிக் கிடந்தான். விசால மான அவள் கருவிழிகளைப் பார்ப்பதில் பேரானந்த மடைந் திருந்தான். ஸ்ரீரங்கம் வசந்தோற்சவத்தைப் பார்க்க விரும்பிய

---

* பிள்ளையுறங்கா வில்லிதாசனைப்பற்றி ‘கவர்ந்த கண்கள்’ என்ற நூலில் விவரமாக எழுதியிருப்பதால் இங்கு அதை சுருக்கமாகச் சொல்கிறேன்.

பொன்னாச்சியைத் திருப்திப்படுத்த அவளை அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கம் வந்த வில்லிதாசன் வெயிலின் கொடுமை யிலிருந்து அவளைக் காப்பாற்ற ஒரு குடையைப் பிடித்துக் கொண்டு அவள் கண்களையே பார்த்துக் கொண்டு நடந்தான். நெருங்கி வந்தவர்களை முழங்கைகளால் இடித்து விலக்கினான். பெருமாளை அவன் சேவிக்கவில்லை. அவன் கண்களுக்குப் பொன்னாச்சியே விருந்தாயிருந்தாள். பெருமாளை சேவிக்க வந்தவர்கள் மல்லனின் இந்த விபரீத செய்கையைப்பற்றிப் பரிகசித்துப் பேசினாலும் அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே பொன்னாச்சி தரிசனத்தில் திளைத்துக் கிடந்தான்.

காவிரியில் நீராடி சீடர்களுடன் திரும்பி வந்து கொண்டிருந்த ஸ்ரீராமானுஜர் இந்தக் காட்சியைக்கண்டு அதிசயித்து நின்றார். "எதையும் லட்சியம் செய்யாத அவன் அன்பைப் பாருங்கள். அதை நல்வழிக்குத் திருப்ப வேண்டும்" என்று சீடர்களிடம் சொல்லிவிட்டு, மடத்தை அடைந்ததும் வில்லிதாசனுக்கு சொல்லியனுப்பி மடத் துக்கு வரவழைத்தார். அவன் வந்ததும் "அப்பா! நீ யார்? இங்கு எதற்காக வந்தாய்?" என்று கேட்டார். வில்லிதாசன் தனது வரலாற்றைச் சொன்னான்.

அதைக்கேட்ட உடையவர் "மல்லனே! போரில் பலத்தையும் உயிரில் அலட்சியத்தையும் காட்டும் நீ பொது இடங்களில் இத்தனை அநாகரீகமாக நடக்கலாமா?" என்று வினவினார்.

வில்லிதாசன் சொன்னான்: "பிரபு! நான் காமத்தில் மூழ்கியவனுமல்ல. நாகரீகம் தெரியாதவனுமல்ல. நீங்கள் பார்த்தவள் என் மனைவி. அவள் அழகுக்கு ஈடு கிடையாது. அவள் கண்கள்! அவற்றின் ஆழம், வசீகரம் இவைக்கு உவமையில்லை. அந்தக் கண்களைப் பார்க்கும் போது அவற்றின் ஆழத்தில் நான் மூழ்கி விடுகிறேன். உலகை மறந்து விடுகிறேன்."

உடையவர் கேட்டார், "அப்பா! நீ பார்க்கும் கண்களை விட ஆழமுள்ளதும் கருமையானதும் கடலினும் பெரியவை யுமான கண்களை உனக்குக் காட்டினால் என்ன செய்வாய்?"

வில்லிதாசன் "அப்படிக் கண்கள் இருக்குமானால் அதற்கு அடிமையாகிவிடுவேன். வேறெதையும் பார்க்கவும் மாட்டேன்" என்று சொன்னான்.

இதைக் கேட்டதும் உடையவர் வில்லிதாசனை அழைத்துக்கொண்டு போய் அழகிய மணவாளன் முன்பு நிறுத்தி "வில்லிதாசா! அதோ பார்! கடலினுள் பெரியவாய கண்கள் என்று பகவானின் கண்களைக் காட்டினார், "இவனுக்கு அருள் செய்ய வேண்டும்" என்று அரங்கனை யும் பிரார்த்தித்தார்.

அரங்கனும் தனது கருணை விழிகளால் வில்லியைப் பார்த்தான். வில்லியும் பார்த்தான். எந்தக் கண்களைக் கண்டால் மற்றொன்றினைக் காணவேண்டாம் என்று திருப்பாணர் சொன்னாரோ அந்த வாக்கியத்திற்கு இலக்கானான் வில்லிதாசன். அன்று முதல் உலகத்து இன்பங்களை மறந்து உடையவரின் அடிமையானான். பொன்னாச்சியும் ஆசிரம வாசியானாள். இருவரும் ஒரு குடிசை போட்டுக் கொண்டு மடத்தின் சீடர்களாக வாழ்ந்து வந்தார்கள்.

உடையவர் இப்படிப்பட்ட வைராக்கியமுள்ளவன் ஸ்ரீவைஷ்ணவத்துக்குக் கிடைத்தது பற்றிப் பேருவகை கொண்டார். இப்படி வில்லிதாசன் ஏகாக்கிர சித்தனாக உடையவருக்கு சிசுருஷை செய்து வரும்போது காவிரியில் நீராடப்போன எம்பெருமானார், போகும்போது முதலி யாண்டான் கையைப் பற்றிக்கொண்டு போனார். நீராடித் திரும்புகையில் வில்லிதாசன் கையைப் பற்றிக்கொண்டு நடந்தார். கூட இருந்த மடத்து சீடர்கள் உடையவரின் அனாசாரத்தைக் கண்டு திகைத்தார்கள். அதை அனு

மானித்த உடையவர் அவர்களைப் பார்த்துச் சொன்னார் "ஆண்டான் பிராம்மணர்களில் சிறந்தவர். நான் அவர் கையைப் பிடித்துக் கொண்டால் தன்னைச் சிறுமைப் படுத்துவதாக நினைக்கலாம். அனால் வில்லிதாசன் அப்படியில்லை. தான் உயர்ந்த ஜாதி யென்ற நினைப்பு அவனுக்கில்லை. நான் அவன் கையைப் பிடித்துக் கொள் வதைப் பெருமையாக நினைப்பான்" என்று.

அந்தச் சமாதானமும் அவர்களுக்குச் சரியாகப்பட வில்லையென்று தோன்றியதால் அவர்களுக்கு வில்லிதாசன் உயர்வைக் காட்ட உறுதி கெண்டார் ஸ்ரீராமானுஜர். மறுநாள் மடத்துப் பிராம்மணர்கள் உலர்த்தியிருந்த துணிகளிலிருந்து ஒரு சாண்வீதம் கிழித்துவிடக் கூற வில்லி தாசன் குருவின் ஆணையை சிரமேல்வகித்து உத்தரவை நிறைவேற்றினான். துணிகள் கிழிக்கப்பட்டிருந்ததைக் கண்ட அந்தணர்கள் பெருங்கூச்சல் போட்டார்கள். வாயால் பேசக்கூடாத வார்த்தைகளைப் பேசினார்கள். இந்த நாடகத்தின் மூலகர்த்தாவான ஸ்ரீராமானுஜர் அவர் களை அழைத்துக் கடிந்துகொண்டார்.

சில நாட்கள் கழிந்து அந்தப் பிராம்மணர்களில் இருவரை வரவழைத்து மடத்தில் பணமில்லையென்றும். பொன்னாச்சியின் ஆபரணங்களைக் கொண்டுவந்தால் அந்த ஆண்டைச் சமாளிக்கலாமென்றும் சொன்னார். பிராம்மணர்கள் மல்லனுக்கு அஞ்சினார்கள். "அவனைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அவனை இங்கேயே வைத்துக் கொள்கிறேன்" என்று உடையவர் சொன்னார். அப்படி வில்லிதாசனைத் தம்மிடமே இருத்தியும் கொண்டார்.

வில்லிதாசன் குடிசைக்கு நள்ளிரவில் சென்ற அந்தணர்கள் மெதுவாக குடிசைக்கதவைத் திறந்தார்கள். பொன்னாச்சி கதவுக்கு முதுகைக் காட்டி ஒருக்களித்துப் படுத்திருந்தாள். அந்தணர்கள் மெள்ள பூனைகள் போல் சென்று ஒரு பக்கத்து ஆபரணங்களைக் கழற்றிக் கொண்

டார்கள். இன்னொரு புறத்து ஆபரணங்களையும் கழற்றிக் கொள்ளட்டும் என்று சிறிது அவள் திரும்ப முயன்றதும் பிராம்மணர்கள் ஓடிவிட்டார்கள். அவர்கள் மடத்தை அடைந்ததும் வில்லிதாசனைப் போக அனுமதித்தார் உடையவர். பிராமணர்கள் நடந்ததைச் சொல்லி எம்பெருமானாரிடம் நகைகளைக் கொடுத் தார்கள்.

தனது குடிசைக்குச் சென்ற வில்லிதாசன் நடந்ததை பொன்னாச்சி சொல்லக் கேட்டு மிகவும் சினந்தான். "அடியார்கள் வந்ததும் நீ அவர்களை வரவேற்று வணங்கி அவர்களிடம் நகைகளைக் கொடுக்கவேண்டியிருக்க இந்த நாடகம் எதற்கு?" என்று சினம் கொண்டான். "இனிமேல் இந்த ஒரு பக்கத்தில் மட்டும் நகைகளை அணிந்து கொண்டால் போதும்" என்றும் உத்தரவிட்டான்.

மறு நாள் உடையவர் பொன்னாச்சியின் நிலையைப் பார்த்து அதைப்பற்றி விசாரிக்க, "ஸ்வாமி! நாங்கள் எங்கள் குடிசைக்கு வந்த அந்தணர்களின் பாத தூசிகள், அப்படியிருக்க இவள் செய்த பாகவத அபசாரத்தைப் பற்றி என்ன செய்ய?" என்று சொன்னான் வில்லிதாசன்.

அப்பொழுது கோஷ்டியைப் பார்த்து உடையவர் சொன்னார்: "இவன் தாசவிருத்தியைப் பாருங்கள். ஒரு சாண் வேட்டி போனதற்கு நீங்கள் என்ன கூச்சல் போட்டீர் கள்? வேதம் சொல்ல வேண்டிய வாயால் மிலேச்சரும் பேச அஞ்சும் வார்த்தைகளைப் பேசினீர்கள்? நான் நீராடியதும் இவன் கையைப் பற்றியதற்காக என்ன கசந்தீர்கள்? என் கையைப் பற்றிக்கொள்ள இந்த பாகவதன் கையைவிட சிறந்த கைகள் யாருடையது?"

இதைக்கேட்ட அந்தணர்கள் மௌனம் சாதித்தார்கள். ஸ்ரீராமானுஜரின் பார்வை இனப் பாகுபாட்டைத் தாண்டியது. அவர் திருஷ்டியின் விசாலத்தை யாராலும் அசைக்க முடியாது என்பதை உணர்ந்து கொண்டார்கள்.



# 32. ஆண்டானும் ஆழ்வானும்

ஸ்ரீவைஷ்ணவ சமுதாயத்தில் சாதியால் மட்டும் உயர்வு கிடையாது என்பதை நிரூபிக்க நீராட்டத்துக்குப் பிள்ளையுறங்கா வில்லிதாசன் கையைப் பற்றி நடந்து, அதற்கு விளக்கமும் காட்ட ஒரு நிகழ்ச்சியையும் ஸ்ரீராமானுஜர் சிருஷ்டித்ததால், முதலியாண்டானை அவர் சாதாரணமாக நினைத்துவிடவில்லை. முதலியாண்டான் பெருமை உடையவருக்கு நன்றாகவே தெரியும். பிள்ளை யுறங்கா வில்லிதாசனின் குருபக்தியை நிரூபிக்கவே அந்த நிகழ்ச்சி தோற்றுவிக்கப்பட்டதே தவிர முதலியாண்டான் தாழ்மையைக் குறிப்பிட அல்ல. அடுத்து ஏற்பட்ட நிகழ்ச்சி யில் முதலியாண்டான் பெருமையும் வலியுறுத்தப்பட்டது. பெரியநம்பியின் மகளான அத்துழாய் ஒரு நாள் காவேரிக்கு நீராடப் போகப் பிரியப்பட்டுத் தனது மாமியாரைத் துணைக்கு அழைத்தாள். "நீதான் பிறந்த வீட்டிலிருந்து பணிப்பெண்களை ஏராளமாக அழைத்து வந்திருக்கிறாயே. அவர்களில் ஒருவரை அழைத்துப்போவது தானே? என் பிராணனை ஏன் வாங்குகிறாய்? நான் என்ன உனக்கு வேலைக்காரியா?" என்று மாமியார் எரிந்து விழுந்தாள். மாமியார் இப்படித் தனது பிறந்தகத்து ஏழ்மையைச் சுட்டிக் காட்டியதால் மனம் வெதும்பிய அத்துழாய்

அழுது கொண்டே தனது தந்தையிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தாள்.

பெரியநம்பி அதைக் காதில் வாங்கிக் கொள்ள வில்லை. "இதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? இது உன் ஜீயர் பொறுப்பு" என்று அசிரத்தையாகச் சொல்லி விட்டார். அதனால் மேலும் மனம் உடைந்த அத்துழாய் ஸ்ரீராமானுஜரிடம் வந்தாள்.

ஸ்ரீராமானுஜர் அத்துழாய் சொன்னதை நிதானமாகக் கேட்டுக் கொண்டார். "உனக்கு ஒரு வேலைக்காரன் தானே வேண்டும்?" என்று வினவினார்.

"ஆம்" தொண்டை விக்கச் சொன்னாள் அத்துழாய்.

உடையவர் பக்கத்திலிருந்த முதலியாண்டானைச் சுட்டிக் காட்டி, "இதோ இருக்கிறான் உன் வேலைக்காரன், உன் பிறந்த வீட்டிலிருந்து வந்த பணிப்பெண்ணாக இவனை அழைத்துப் போ" என்றார்.

அத்துழாய் பிரமித்து நின்றாள். முதலியாண்டான் அதற்குப் பிறகு ஒரு விநாடியும் தாமதிக்கவில்லை. "வா அம்மா! உன் இல்லம் செல்லுவோம்" என்று கூறி அவளுடன் சென்றார்.

அன்று முதல் முதலியாண்டான் அத்துழாய் வீட்டு வேலைக்காரரானார். எல்லா வேலைகளையும் நிதான மாகவும் மலர்ந்த முகத்துடனும் செய்யலானார். வீடு பெருக்கல். முற்றம் தெளித்தல், சமையல் செய்தல், வேஷ்டி முதலியவற்றைத் துவைத்தல் முதலியவற்றை, பட்டுக் கத்தரித்தது போல் மிக அழகாகவும் திறமையுடனும் செய்தார். பரம பாகவதரான முதலியாண்டான் இம் மாதிரி ஈனத் தொழில் செய்வதைக் கண்டு அச்சமுற்ற அத்துழாயின் புகுந்த வீட்டுப் பெரியவர்கள் முதலி யாண்டானை வணங்கி, "ஸ்வாமி! தாங்கள் இப்படி பணி

செய்து எங்கள் பாவத்தை வளர்க்க நாங்கள் என்ன அபராதம் செய்தோம்?" என்று கேட்டார்கள். "இம்மாதிரி சேவகன் பணிகளை தேவரீர் செய்வது நியாயமா?" என்றும் வினவினார்கள்.

அப்பொழுது வீட்டு வேலைகளை மும்முரமாகச் செய்து கொண்டிருந்த முதலியாண்டான், "எனக்கு எதுவும் தெரியாது. என் ஆசார்யன் இங்கு வந்து வேலை செய்ய உத்தர விட்டார். அதை நான் செய்கிறேன். என் வேலை யில் குறுக்கே வராதீர்கள்" என்று சொல்லிவிட்டார்.

அங்கிருந்து அத்துழாயின் மாமனார் வீட்டார் பெரிய நம்பியிடம் சென்று, "பெரிய நம்பிகளே! எங்கள் குடும்பத்தை வேரோடு கிள்ளி எறிந்துவிடத் தீர்மானித்து விட்டீரா? ஆண்டான் எங்களிடம் வேலை செய்ய எங்களுக்கு என்ன தகுதி இருக்கிறது? அவரைத் தயவு செய்து திரும்பி அழைத்துக் கொள்ளுங்கள்" என்று கெஞ்சினார்கள்.

"எனக்கு இதைப்பற்றி ஏதும் தெரியாது. ஆசார் யனைக் கேளுங்கள்" என்று சொல்லி அனுப்பிவிட்டார் பெரிய நம்பி.

அவர்கள் ஸ்ரீராமானுஜரிடம் சென்று முறையிட்டார் கள். ஸ்ரீராமானுஜர் மெதுவாகப் பதில் சொன்னார்: "உங்கள் நாட்டுப் பெண்ணைப் பிறந்தகத்திலிருந்து வேலைக்காரனொருவனை அழைத்து வருமாறு உங்கள் வீட்டு எசமானி உத்தரவிட்டாளாம். நானும் ஆண்டானும் பெரியநம்பியின் அடிமைகள். ஆண்டானை உங்களுக்குப் பிடிக்காவிட்டால் அவருக்குப் பதில் நானே வருகிறேன். அப்படி உங்கள் வீட்டிலிருந்து ஆண்டான் பணி செய்வது உங்களுக்குச் சம்மதமில்லையென்றால் அவன் இந்த மடத்திலிருந்து கொண்டே உங்கள் வேலைகளைக் கவனிப்பான்."

அவர்கள் வெட்கத்தால் தலைகுனிந்து நின்றார்கள். அவர்கள் உள்ளங்கள் வேதனைப்பட்டன. அதற்குப் பிறகு முதலியாண்டான் மடத்துக்குத் திருப்பி அனுப்பப்பட்டார்.

ஆசார்யன் இட்ட அடிமை வேலையைத் தமக்குக் கிடைத்த பெரும் பேறாகக் கருதினார் முதலியாண்டான். என்ன பணிவு! என்ன தன்னலமற்ற ஆசார்ய பக்தி. அவரைக் கண்டு ஸ்ரீவைஷ்ணவ சமுதாயமே வியந்தது.

முதலியாண்டான் பெருமை இவ்வாறிருக்க, கூரத் தாழ்வான் ஆசார்ய பக்தியைக் கவனிப்போம். இப்படிப் பலபடியும் ஸ்ரீவைஷ்ணவமதத்தின் அருமை பெருமை களைப் பல அத்தாட்சிகளாலும், நிகழ்ச்சிகளாலும் நிரூபித்து வந்த ஸ்ரீராமானுஜர் ஒரு நாள் ஆளவந்தாருக்குத் தான் செய்து கொடுத்த சத்தியங்களை நினைத்துப் பார்த்தார். முதலில் வியாஸ பகவானின் பிரம்ம சூத்திரத் துக்குப் பாஷ்யம் எழுதத் தீர்மானித்து ஆழ்வானோடும் ஆண்டான் முதலியவர்களோடும் கலந்து ஆலோசித்தார். அவர்கள் அனைவரும் அந்தப் பணியை நிறைவேற்றுவது ஸ்ரீவைஷ்ணவ தத்துவங்களைப் பாதுகாக்கும் எனக் கருதி அதை சீக்கிரம் செய்து முடிக்கவேண்டும் என்று பிரார்த்தித் தார்கள்.

அந்த விளக்க உரையைத் எழுத ஆரம்பிக்கத் தீர் மானித்த உடையவர் கூரத்தாழ்வானை அழைத்து "ஆழ்வான்! நான் சொல்கிறேன். நீர் எழுதும். உமக்கு எங்காவது கருத்து வேறுபாடு இருந்தால் அந்த இடத்தை எழுத வேண்டாம், நிறுத்திவிடலாம்" என்றார்.

கூரத்தாழ்வானும் உடையவரை தெண்டன் சமர்ப்பித்துவிட்டு எழுத்தாணியும் கையுமாக உட்கார்ந்தார். உடையவர் சொல்ல ஓலையில் எழுத்தாணி தங்கு தடையின்றி ஓடிக்கொண்டிருந்தது. ஒரு நாள் ஒரு சமயம் உடையவர் சொன்னதை எழுதாமல் நிறுத்திவிட்டார் ஆழ்வான்.

"உம், எழுதும்" என்றார் உடையவர்.

ஸ்வாமி கருத்தை அப்படியே எழுதினால் நாஸ்திக வாதமாகும் என்று நினைத்த ஆழ்வான் எழுதாமல் இடித்த புளி போல் உட்கார்ந்திருந்தார்.

உடையவருக்குக் கோபம் அதிகமாகவே, "அப்படியானால் நீரே பாஷ்யம் செய்யும்" எனக் கூறி எழுந்து ஆழ்வானைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டுச் சென்றார். ஆழ்வான் விழுந்த இடத்தைவிட்டு எழுந்ததிருக்கவில்லை. யார் சொல்லியும் கேட்கவில்லை. ஆசார்யன் தள்ளிய நிலையிலேயே கிடந்தார்.

அங்கிருந்த மற்ற பாகவதர்கள் "ஆசார்யன் அடித்துத் தள்ளி விட்டாரே, நீர் இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்?" என்று கேட்டார்கள்.

"இந்த சரீரம் உடையவர் உடமை. அவர் எப்படி அதைச் செய்தாலும் எனக்கென்ன?" என்று சொல்லி அப்படியே கிடந்தார் ஆழ்வான்.

ஸ்ரீராமானுஜரும் யோசனை செய்து தாம் செய்த தவறை உணர்ந்து ஆழ்வானை அழைத்து தமது செயலுக்கு வருத்தம் தெரிவித்தார். பிறகு பகவத் சேஷத்வத்தோடே கூடின ஞானத்தைப்பற்றி உபதேசிக்க ஆழ்வானும் மேற்கொண்டு எழுதலானார்.





# 33. அச்சமற்ற அனந்தன்

ஸ்ரீராமானுஜருடைய பிரபாவத்தை அளந்தாலும் அளந்துவிடலாம். அவரது சீடர்களுடைய பிரபாவத்தை அளக்க முடியாது. அது தவிர ஸ்ரீராமானுஜருடைய கடாட்சம் எப்பொழுதும் அவரது சீடர்கள் மீதே இருந்து வந்தது. அந்த சீடர் கோஷ்டியில் ஊமையான ஒரு சீடனும் இருந்தான். வாயால் பேசமுடியாத அவன் எப்பொழுதும் உடையவரின் முகத்தை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பார்வையைப் புரிந்துகெண்ட உடையவர் ஒரு நாள் யாருமில்லாதபோது அவனை சைகை செய்து தமது அறைக்குள் அழைத்துச் சென்றார். கதவுகளை சற்று மூடிவிட்டு தனது திருவடிகளைக் காட்டி அவற்றைப் பிடித்துக் கொள்ளும்படி கூறினார். அவன் கண்களில் நீர் மல்கியது. அப்படியே தடாலென்று ஆசார்யன் திருவடிகளைப் பிடித்துக் கொண்டான். ஸ்ரீராமாநுஜரும் அவன் தலைமேல் கைவைத்து ஆசீர்வாதம் செய்தார்.

அந்த சமயம் அந்த அறைப்பக்கம் வந்த ஆழ்வான் கதவு மூடப்பட்டிருப்பதைக் கவனித்து கதவின் இடைவெளி மூலம் பார்த்தார். நடந்ததைப் பார்த்ததும் "நான் எனது காலத்தையெல்லாம் வேதங்களையும் சாஸ்திரங்களையும் படித்துக்கொண்டு என் பிறவியை வீணாக

அடித்து விட்டேனே. நான் ஊமையாகப் பிறந்திருந்தால் எனக்கும் இப்படி ஆசார்யனின் கிருபை கிடைத்திருக்கு மல்லவா? என்று சோகித்தார். பெருமாளின் கிருபையைப் போலவே ஆசார்யனின் கிருபை எந்தெந்த இடத்தி லெல்லாம் பிரவகிக்கிறது?" என்று சோகமும் இன்பமும் கலந்த உணர்ச்சிகளுக்கு இலக்கானார். "பேரின்பத்துக்கு மார்க்கமான இந்த சுலபவழி எனக்குக் கிடைக்க வில்லையே" என்றும் ஏங்கினார்.

திருவரங்கத்தில் இத்தகைய விந்தை நிகழ்ந்து கொண்டிருக்கையில் திருமலையில் இன்னொரு விந்தை நிகழ்ந்து கொண்டிருந்தது. உடையவருடைய அனுமதி பெற்று ஸ்ரீராமானுஜர் பெயரால் நந்தவனம் அமைத்து ஏழுமலையானுக்கு மாலா கைங்கர்யம் செய்து வந்த அனந்தன், அவர் பெயரால் ஒரு தடாகமும் அமைக்கத் தீர்மானித்து அதற்கான முயற்சியில் இறங்கினார். தினம் தினம் விடியற் காலையில் எழுந்திருந்து மண்வெட்டியும் கூடையும் எடுத்துக்கொண்டு மண்ணை வெட்டிக் கூடையில் சேர்த்துக் கரையில் கொட்டிக் கொண்டிருந்தார். அந்தப் பணியால் அவர் மிகுந்த சிரமப்படுவதைப் பார்த்து சீடன் ஒருவன் தள்ளாடி வந்த அவரிடமிருந்து கூடையை வாங்கப் பார்த்தான். "இந்த கூடையில் நீ கையை வைத்தால் உன் கைகள் பாரிச வாயுவால் பாதிக்கப்பட்டு துவண்டுவிடும்" என்று சினத்துடன் கூறினார் அனந்தன். ஆனால் இந்த மிரட்டலுக்கு அஞ்சாத சீடன் அவரிடமி ருந்து கூடையை வாங்கவே முயன்றான். அதைக் கண்ட அனந்தன் வெறிபிடித்தவர் போல் நகைத்து, "ஏனடா சீடனே! என் ஜீவனோபாயத்தைப் பிடுங்கப் பார்க்கிறாய்? பகவத்கைங்கர்யந்தானே எனக்கு உயிர்? உனக்கு அதில் அக்கரையிருந்தால் நீயும் ஒரு மண்வெட்டி கூடை கொண்டு சேவை செய்வதை யார் தடுத்தது?" என்று கேட்டுத் தமது பணிகளில் ஈடுபட்டார்.

இத்துடன் விடவில்லை அனந்தன். தடாகம் தாமதப் படுவதை உணர்ந்து தமது மனைவியையும் வேலைக்கு அழைத்துச் சென்றார். தாம் மண்ணை வெட்டிக் கொடுத்துக் கூடையில் போட்டு அவளைத் தூக்கிச் செல்லப் பணித்தார். அவள் அப்பொழுது பூர்ண கர்ப்பிணி. இருந்தும் கணவன் சொல் மீறாது முக்கியும் முனகியும் மண்ணைச் சுமந்து சென்றாள்.

அவள் பட்ட சிரமம் ஏழுமலையானுக்கே பொறுக்காததால் அவன் சிறு பிள்ளையாக வந்து அவள் கொண்டு வந்த கூடையை பாதிவழியில் வாங்கிக்கொண்டு போய் மண்ணைக் கொட்டிவந்தார். ஒவ்வொரு முறையும் மண் சுமந்து சென்ற மனைவி, வெகு சீக்கிரம் திரும்புவதைக் கண்ட அனந்தன் சந்தேகித்து அவளைத் தொடர்ந்தார். அவளிடமிருந்து பாதி வழியில் மண்கூடையை ஒரு சிறுவன் வாங்கிச் செல்வதைக் கண்டு ஆத்திரங்கொண்டு அவனைத் துரத்திச் சென்றார். அவன் முகவாய்க் கட்டையில் மண்வெட்டியாலும் அடித்தார். அப்படியும் அந்த சிறுவன் அவரிடம் அகப்படாமல் ஓடிச்சென்று கோவிலுக்குள் மறைந்துவிடவே வந்தது யாரென்பதைப் புரிந்து கொண்டார் அனந்தன். மறுநாள் சேவார்த்திகள் பெருமாள் முகவாய்க் கட்டையில் ரத்தம் வருவதைக் கண்டு அபசாரம் ஏதோ நேர்ந்திருக்கவேண்டுமென்று அஞ்சி ரத்தத்தை நிறுத்த பச்சை கற்பூரத்தை வைத்து அழுத்தினார்கள். அதை ஒட்டி இன்னும் அந்த சம்பிரதாயம் கையாளப் பட்டு வருகிறது.

ராமானுஜ தடாகத்தைக் கட்டி முடித்த அனந்தன் தமது கைங்கர்யத்திலேயே ஊக்கமுடையவராய் காலங் கழித்து வந்தார். ஸ்ரீராமானுஜ நந்தவனத்தை நன்றாக வளர்த்து புஷ்பங்களை தினம் தொடுத்து எம்பெருமானுக்கு மாலா கைங்கர்யம் செய்துவந்தார். அனந்தன் திடசித்தர். எதற்கும் அஞ்சாதவர். நந்தவனத்தில் பூக்கொய்கையில்

அவரை ஒரு பாம்பு கடித்துவிட கடித்த இடத்தை குளத்தில் அலம்பிவிட்டு தமது வேலையைக் கவனித்தார்.

பக்கத்திலிருந்து அவரது அசட்டையைக் கவனித்தவர் "அது பாம்பு காணும். அதற்கு ஏதாவது மருந்து கொண்டு வருகிறேன்" என்றார்.

அனந்தன் சிரித்தார். "எதற்கு மருந்து?" என்று கேட்டார்.

"பாம்புக் கடிக்கு."

"போடாவிட்டால் என்ன ஆகும்?"

"பிராணன் போய்விடும்."

"அதனாலென்ன? என்னைக் கடித்த பாம்பு என்னை விட பலமுள்ளதானால் நான் மேல் உலகத்தில் விரஜா நதியில் நீராடுவேன், இல்லாவிட்டால் இங்குள்ள பெருமாள் குளத்தில் தீர்த்தமாடுவேன். இங்கே கோயிலில் குடிகொண்டிருக்கும் பெரிய மருந்துக்குமேல் மருந்து இருக்கிறதா!" என்று கேட்டுத் தமது கைங்கர்யத்தில் கவனம் செலுத்தினார்.

இன்னுமொரு நாள் பெருமாள் அனந்தனை தமது சந்நிதானத்திற்கு வரும்படி அழைத்தார். அப்பொழுது அவர் பெருமாளுக்கு மாலை கட்டிக் கொண்டிருந்தார். அதனால் பெருமாளின் அழைப்புக்கு அவர் செவி சாய்க்க வில்லை.

"அனந்தா! நான் அழைத்தது உன் காதில் விழ வில்லை?" என்று ஏழுமலைக்கதிபன் கேட்டார்.

"நான் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும்போது என் இந்திரியங்கள் வேறு எதிலும் இயங்கா. மற்ற விஷயங் களுக்குக் காதும்கேட்காது, கண்ணும் தெரியாது" என்றார் அனந்தன்.

“எனக்கும் அதே பாடந்தானா?” என்று பெருமாள் கேட்டார்.

“நான் சொன்னதில் யாருக்காவது விலக்கு வைத்தேனா?” என்றார் அனந்தன்.

“இந்த மலையிலிருந்து உன்னைப் போக நான் கட்டளையிட்டால் என்ன செய்வாய்?”

“போகமாட்டேன். இது எனது ஆசார்யனுடையது. ஆதிசேஷனே மலையானான். அவரே உடையவரானார். தவிர நீரும் எனக்கு சில ஆண்டுகள் தான் முன் வந்திருக்கிறீர். இது ஸ்ரீராமானுஜர் மலை. ஸ்ரீவைஷ்ணவ அடியார்களுக்குச் சொந்தமானது. உடையவர் என்னைப் போகச் சொன்னால் போவேன்” என்ற அனந்தன் “நாம் வேறு ஏதாவது உபயோகமாகப் பேசுவோமே” என்று துளியும் அச்சமின்றிச் சொன்னார்.

இப்படி அச்சமற்ற சேவையில் கருத்துள்ள அடியார்களைப் பெற்ற ஸ்ரீராமானுஜர் ஈடு இணையற்ற ஆசார்யனாக விளங்கினார்.





# 34. உடையவரும் சூழ்நிலையும்

ஸ்ரீவைஷ்ணவம் என்பது ஒரு தனிப்பட்ட மதம். தனிப்பட்ட வாழ்க்கை முறை. அதில் உட்பிரிவுகள், உயர்வு தாழ்வுகள் கிடையாது. அந்த மகா மதத்தில் இணைந்த அனைவருக்கும் ஒரேவிதப் பெருமை. அந்த மதத்தில் ஈடுபட்ட அனைவரும் எதற்கும் அஞ்சியவரல்லர். கடமையைச் செய்வதில் துணிவும் தெளிவும் உள்ளவர்கள். இப்படி இருந்தவர்கள் ஸ்ரீராமானுஜரின் சீடர்கள் மட்டுமல்ல, அவருடைய ஆசார்யர்களும் அதேவித மனப் பக்குவமும் துணிவும் உள்ளவர்கள்.

கீழ்க்குலத்தவரான மாறநேர்நம்பி காலமானதும் அவருக்கு ஈமக்கடன்களைப் பெரியநம்பியே செய்தார். அதுவும் பிராம்மணர்களுக்குச் செய்வதுபோலவே செய்து வைத்தார். இதைக் கண்ட பிராம்மணர்கள் உடையவரிடம் சென்று முறையிட, உடையவரும் இதன் உண்மையைப் பெரியநம்பி வாயாலேயே வரவழைக்க வேண்டுமென்று கருதி, பெரியநம்பி இருந்த இடம் சென்று அவரைத் தண்டனிட்டு, "நமது சம்பிரதாயத்தில் விரிசல் காணக் கூடாது என்பதற்காக நாம் ஒரு வழிகாட்ட தேவரீர் வேறு வழி காட்டுவது உசிதமா?" என்று கேட்டார்.

அவர் மாறநேர்நம்பிக்குத் தாம்செய்த பிராமணமுறை கர்மத்தைப்பற்றிக் கேட்கிறாரென்பதை உணர்ந்த பெரிய நம்பி "வாரீர் உடையவரே! செய்யக்கூடாதது எதையும் நான் செய்யவில்லையே. பெரியவர்கள் செயலுக்கு முரண் பாடாகவும் நான் ஏதும் செய்யவில்லையே. கடந்தகால உண்மைகளைப் பாரும். நமக்கெல்லாம் வழிகாட்ட பகவான் ஸ்ரீராமாவதாரம் எடுத்தான். அவன் ஒரு பட்சி யான ஜடாயுவுக்கு தகனக்கிரியைகள் செய்யவில்லையா? நான் பகவானான ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவைவிட உயர்ந்த வனா? அல்லது மாறநேர்நம்பி ஜடாயுவைவிட தாழ்ந்த வரா? இது ராமாயணம். மஹாபாரதத்தைத் கவனியும். தர்ம நிஷ்டரான தர்மபுத்திரர் நான்காம் வருணத்தவரான விதுரருக்கு ஈமக்கடன்களை நிறைவேற்றவில்லையா? தர்ம புத்திரரைக் காட்டிலும் நான்தான் மேம்பட்டவனா அல்லது விதுரரைக் காட்டிலும் மாறநேர்நம்பி தாழ்ந்த வரா?" என்று வினவினார். ஆசாரியரின் பரந்த மனத்தையும் உயர்ந்த சிந்தனையையும் எண்ணிய உடையவர் ஆசார்யன் திருவடிகளைத் துதித்தவண்ணம் தமது மடத்துக்குத் திரும்பினார்.

இத்துடன் நிற்கவில்லை மாறநேர் நம்பி விவகாரம். ஸ்ரீரங்கத்துப் பிராம்மணர்கள் பெரிய நம்பிமீது அவதூறு கூறுவதையும் குற்றம் சாட்டி இகழ்வதையும் நிறுத்த வில்லை. அவரைச் சுட்டிக் காட்டி வசை பாடினார்கள். இந்த வசைபாடல் பெரியநம்பியின் மகளான அத்துழாய் புகுந்த வீட்டில் அதிகமாயிற்று. அங்கு வந்த பிராம்மணர் கள் கூடிக் கூடி பெரிய நம்பியைப்பற்றி இகழ்ந்தார்கள். அவர்களுடைய வசையைக் கேட்கச் சகியாத பெரியநம்பி யின் மகள் அவர்களைத் திரும்பச் சாடினாள்.

"நீங்கள் அத்தனை உயர்ந்தவர்களாயிருந்தால் ஸ்ரீரங்க நாதனை நீங்கள் சேவிக்கக் கூடாது. அவருக்கு நிவேதனம் செய்யப்படும் பிரசாதத்தையும் ஏற்கக் கூடாது. தீண்டப்

படாதவரான திருப்பாணாழ்வரை அவர் தம்முடன் இணைத்துக் கொண்டதால் உங்கள் நோக்குப்படி ஸ்ரீரங்கனும் தீட்டு உள்ளவர்தான். அவர் அருகே செல்லாதீர்கள். இதை ஸ்ரீசடகோபரின் மேல் ஆணையாகச் சொல்கிறேன்" என்று அவர்களை நோக்கி மனம் கசந்து இரைந்தாள். பிறகு கணவன் இல்லத்திலும் அவள் தங்கவில்லை. தினசரி தனது தகப்பனாரை பற்றிய நிந்தனையைப் பொறுக்க முடியாமல் தனது தந்தையின் இல்லத்துக்கே வந்து சேர்ந்தாள்.

இத்தகைய திடசித்தமுள்ள, பிறவி வித்யாசமற்ற, உலகிலேயே இணையற்றதான மதத்தை ஸ்தாபித்தருளிய ஸ்ரீராமானுஜ ப்ரபாவம் எங்கும் பரவலாயிற்று. இத்தகைய ஒரு கோஷ்டியைத் தம்மைச் சுற்றிலும் நிறுவிக் கொண்ட உடையவர் தாம் ஆளவந்தாருக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற சங்கல்பம் செய்துகொண்டும், சுற்றியிருந்த அடியார்களின் அபிலாஷையை சிரமேற் கொண்டும் பிரம்மசூத்ரத்துக்கு பாஷ்யம் எழுத முற்பட்டார். அப்படி எழுதுகையில் ஆழ்வான் அதில் ஒரு இடத்தை எழுதாமல் நின்றதையும் உடையவர் கோபித்ததையும் ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். இனி ஸ்ரீபாஷ்யம் எழுதி முடித்த கதையைச் சொல்வோம்.





# 35. சரஸ்வதி சிரசால் வரித்தாள்

எல்லா ஜீவராசிகளையும் எல்லாப் பிறவிகளையும் சமநோக்குடன் நோக்கும் பரம விசாலமான புத்தியுடைய வரும், சகல சாஸ்திர விற்பன்னரும், ஒப்பாரும் மிக்காரு மின்றி பிரகாசித்தவருமான பகவத் ராமானுஜர், தாம் தமது மானசீக ஆசார்யரான ஸ்ரீ ஆளவந்தாருக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற சங்கல்பம் கொண்டார். ஆசார்யன் கட்டளைகளை நேரிடையாகப் பணிக்கா விட்டாலும் இறந்தபின் மூடிய விரல்களைத் திறந்து சூசிப்பித்த ஆணைகளை நிறைவேற்ற காலம் வந்துவிட்டது என்று தீர்மானித்த ஸ்ரீராமாநுஜர், தாம் செய்து கொடுத்த பிரமாணத்தில் முதலாவதான பிரம்ம சூத்ரத்துக்கு விரிவுரை எழுதும் பணியை மேற்கொண்டு இதைப்பற்றித் தமது சீடர்களுடன் கலந்து ஆலோசித்தார். ஸ்ரீராமானுஜ ருடைய வாழ்க்கையில் நாம் ஒன்றை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். முற்றும் கற்றறிந்த உண்மைகளைத் தமது தியானாக்னியிலேயே கண்டறிந்து வளர்க்கக் கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தும், அவர் தாமாக எதையும் செய்த தில்லை. தமது சீடர்களின் அபிப்பிராயத்தையும் அவ்வப் பொழுது கேட்டறிந்தார். தனிப்பட்ட ஈடு இணையற்ற ஒரு ஜனநாயகத்தை, சமதர்மத்தை, வாழ்க்கையில் கடைப்

பிடித்தார். எதையும் சர்வசம்மதமாகச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டவர், அனுஷ்டானத்தில் அந்த நோக்கத்தைக் காட்டியவர், பகவத் ராமாநுஜர்.

வியாஸ பகவானின் பிரம்ம சூத்ரத்துக்கு அவர் பாஷ்யம் (விரிவுரை) எழுதப் போவதைக் கேட்டதும், ஆண்டான், ஆழ்வான், எம்பார் எல்லோருமே பேருவகை கொண்டு அந்தப் பணியை உடனடியாகத் துவங்க வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். வேறு எந்த ஆசார்யரா யிருந்தாலும் உடனடியாக அந்தப் பணியில் இறங்கி யிருப்பார். அதன் ஆழத்தை அறியாமல் இரண்டுங் கெட்டானாக ஒரு பாஷ்யத்தை இயற்றியிருப்பார்கள். ஆனால் ஸ்ரீராமானுஜருடைய வழிமுறைகள் வேறு. பெரியவர்கள் இந்த பிரம்மசூத்ரத்துக்கு எப்படி உரை எழுதியிருக்கிறார்கள் என்பதை அறிந்துகொள்ளத் தீர் மானித்தார். பகவத் ராமானுஜர் ஸ்ரீவைஷ்ணவ மதத்தின் ஆணிவேரான பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றுமுன்பே பலர் விரிவுரைகளை எழுதியிருந்தார்கள். அவை வருமாறு:

போதாயன பாஷ்யம். இது வியாஸ பகவான் சீடர் களில் ஒருவரும் மகரிஷியுமான போதாயனர் எழுதியது.

த்ரமிட பாஷ்யம் : த்ரமிடாசாரியார் எழுதியது.

பிரும்மானந்தி : பிரம்ம சூத்ரத்துக்கு வார்த்திகா என்ற உரை எழுதியிருக்கிறார்.

குஹாதேவாசாரியர் பாஷ்யம்.

ஆசார்ய பாருசி பாஷ்யம்.

பகவத் ஸ்ரீவத்ஸாங்க மிச்ரர் பாஷ்யம் : இவரது நூல் பிரம்ம சூத்ரபாஷ்யங்களில் மிகப் பழமையானது என்று சொல்கிறார்கள்.

நாதமுனிகள் : விசிஷ்டாத்வைத தத்துவத்தின் யோக ரகஸ்யம், நியாயதத்வம், முதலிய நூல்களைப் புனைந்தவர்.

யாமுனாசாரியார் அல்லது ஆளவந்தார் : ஸம்வித் ஸித்தி, ஈசுவர ஸித்தி, ஆத்ம ஸித்தி, ஆகமப்ராமாண்யம் முதலிய நூல்களை வகுத்தவர்.

இப்படிப் பல மகான்கள் பிரம்ம சூத்ரங்களில் அஸ்தி வாரத்தில் விரிவுரை நூல்கள் பலவற்றை இயற்றியிருப்பதை நினைத்துப் பார்த்த ஸ்ரீராமானுஜர், வியாஸருடைய நேர் சிஷ்யரான போதாயன ரிஷி எழுதிய மகாபாஷ்யத்தைப் பார்க்கத் தீர்மானித்தார். அந்த மகாபாஷ்யத்தின் சுருக்க மொன்று காச்மீரத்தில் இருப்பதாகக் கேள்விப்பட்டு அதை ஒருமுறை பார்த்துவிடத் தீர்மானித்தார். போதாயன பாஷ்யம் இரண்டு லக்ஷம் கிரந்தங்களை உடையது. ஸ்ரீராமானுஜர் காலத்தில் காச்மீரத்திலிருந்த போதாயன பாஷ்யச் சுருக்கம் 25000 கிரந்தங்களை உடையது.

இந்த கிரந்தங்களைப்பற்றி அறிவதற்கு முன்பு 25000 கிரந்தங்கள், ஒரு லக்ஷம் கிரந்தங்கள், என்பதற்கு பொருளைப் புரிந்து கொள்வது அவசியமாகும். இந்த கிரந்தம் என்ற சொல்லைத்தான் நமது ஆசாரியர்கள் 'படி' என்று சொன்னார்கள். 32 எழுத்துக்களைக் கொண்டது ஒருபடி. இந்த 32 எழுத்து அளவுகோல் வேதத்திலிருந்து வந்தது. வேத மந்திரமான காயத்ரீ 24 எழுத்துக்களைக் கொண்டது. வேதம் ராமாயணமானபோது 'அனுஷ்டுப் சந்தஸ்' என்ற புதுமுறைக் கவிதையை வால்மீகி பகவான் உலகுக்கு ஈந்தபோது அதில் ஒரு சுலோகத்துக்கு 32 எழுத்துக்கள் இருந்தன. ஆகவே முப்பத்திரண்டு எழுத்துக் களைக் கொண்டது ஒரு கிரந்தம் என்று நிர்ணயிக்கப் பட்டது. ஆகவே திராவிட வேதத்துக்கு விரிவுரைகளை எழுதிய ஸ்ரீவைஷ்ணவ மகான்கள் ஆறாயிரப் படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி என்று வியாக்கி யானங்களை அருளிச் செய்தனர்.

இப்படி அநாதியான வேதத்தை ஒட்டிவந்த முறைப் படி 25000 கிரந்தங்களில் காச்மீரத்திலிருந்த போதாயன பாஷ்யச் சுருக்கத்தைப் பார்க்க ஆவல் கொண்டார் ஸ்ரீராமானுஜர். அதை முன்னிட்டு ஆழ்வானுடன் காச் மீரத்துக்குப் பயணப்பட்டு அதை அடையவும் செய்தார். காச்மீர மன்னனிடம் அங்கிருந்து சரஸ்வதி பீடத்திலிருந்த போதாயன விருத்தியைப் பார்க்க அனுமதி கேட்டார். சரஸ்வதி பீடத்திலிருந்த பண்டிதர்கள் அதை ஒரு முறை படிக்க அனுமதித்தார்கள். ஸ்ரீராமானுஜர் அதை ஆழ்வான் படிக்க ஒரு முறை கேட்டார்.

"நீர் கேட்டதன் சுருக்கத்தை ஒருமுறை எழுதிக் கொடும். அதை சரஸ்வதி ஒப்புக்கொள்கிறாளா என்று பார்ப்போம்" என்றான் காச்மீர மன்னன்.

உடனடியாக அங்கேயே அந்தச் சுருக்கத்தையும் ஸ்ரீராமானுஜரின் கருத்தடங்கிய தத்துவத்தையும் ஓலை களில் பொறித்துக் கொடுத்தார் ஸ்ரீராமானுஜர்.

அந்த ஓலைச்சுவடிகளை சரஸ்வதியின் சந்நிதியிலே வைத்துக் கதவுகளை மூடிவிடும்படிக் கட்டளையிட்டான். மன்னன் கட்டளையை அப்படியே நிறைவேற்றிய மன்னன் பணியாளர் கதவுக்கு முத்திரையும் வைத்தார்கள். மறுநாள் காலை மன்னன் தனது சமஸ்தான பண்டிதர்களுடனும், ஸ்ரீராமானுஜர், ஆழ்வான் இவர்களுடனும், சரஸ்வதி பீடத் துக்குச் சென்று கதவைத் திறக்க உத்தரவிட்டான். கதவு திறந்ததும் அனைவரும் பிரமித்தனர். சரஸ்வதியின் காலடி யில் வைக்கப்பட்ட ஸ்ரீராமானுஜரின் சுவடிகள் சரஸ்வதி யின் சிரத்திலிருந்தன.

பெரிய மகான் தனது ராஜ்யத்துக்கு வந்து விட்டதை உணர்ந்த காச்மீர மன்னன் போதாயன விருத்தியை அவர் எடுத்துப்போக உத்தரவிட்டான். அந்த நூலை எடுத்துக் கொண்டு ஆழ்வானுடன் திரும்பினார் ஸ்ரீராமானுஜர்.

வழியில் ஓரிடத்தில் தங்குகையில் காச்மீர பண்டிதர்கள் போதாயனவிருத்திச் சுவடிகளை இரவோடு இரவாகத் திருடிக் கொண்டுபோனார்கள். மறுநாள் சுவடியில்லாத தைக் கவனித்த ஸ்ரீராமானுஜர் கிலேசம் மிக்கவராய் "இனி என் செய்வது?" என்று ஆழ்வானைக் கேட்டார். ஆழ்வான் ஆசார்யன் முன்பு கைகட்டி நின்று "ஸ்வாமி! அடியவனை அத்தனை அல்பமாகவா நினைத்துவிட்டீர்கள். அதைத் தான் ஒருமுறை படித்தாகிவிட்டதே. எந்த இடத்தில் வேண்டுமானாலும் கேளுங்கள். எந்த மூலை முடுக்குகளில் வேண்டுமானாலும் கேளுங்கள், சொல்கிறேன்" என்று விக்ஞாபித்துக் கொண்டார்.

அந்த ஏகசந்தாக்கிராகி, ஒருமுறை பார்த்த அளவில் புத்தியில் ஏற்றுக்கொள்ளும் ஆழ்வானாகிற மேதையைக் கண்டு வியந்த ஆசார்யர், "எனக்கு உன்னைத் தெரியும் ஆழ்வான். இருப்பினும் மற்றவர்களுக்கும் உன்னைப்பற்றித் தெரியட்டும் என்பதற்காகக் கேட்டேன்" என்றார்.

பிறகு ஆழ்வானுடன் ஸ்ரீரங்கம் வந்து ஸ்ரீபாஷ்யத்தை இயற்றலானார். உடையவர் சொல்ல ஆழ்வான் ஓலைகளில் ஸ்ரீபாஷ்யத்தைப் பொறித்தார். இதைப்பற்றிய ஒரு நிகழ்ச்சியை ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். ஆழ்வானின் நிர்மலமான ஆசார்ய பக்தியும், எழுதும் திறனும், ஸ்ரீராமானுஜரின் வாக்கியத் திறனும் சிந்தனா வேகமும் ஸ்ரீபாஷ்யத்தை வெகுவிரைவில் உருவாக்கியது. உலகம் ஓர் ஒப்பற்ற கிரந்தத்தைப் பெற்றது.





# 36. யாத்திரை

ஈடும் இணையுமற்ற ஸ்ரீபாஷ்யத்தை உருவாக்கியதைத் தொடர்ந்து பகவத் ராமானுஜர் வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், வேதர்த்த ஸங்கிரகம், கீதாபாஷ்யம் இவற்றையெல்லாம் அருளிச்செய்து ஸ்ரீஆளவந்தாருக்குத் தாம் செய்து கொடுத்த முதல் பிரமாணத்தை நிறைவேற்றிக் கொண்டார். இந்த மகாகிரந்தங்கள் பூர்த்தியானதும் ஸ்ரீராமானுஜரின் சீடர்கள் அவ்ரை தெண்டன் சமர்ப்பித்து, "தேவரீர் இதர சமயங்களை வெற்றி கொள்வதும் தீமையிலாத நன்னெறி காட்டுவதுமான தர்சன ஸ்தாபனம் நூல்முறையில் செய்தாகிவிட்டது. இனி தேவரீர் யாத்திரை மேற்கொண்டு ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை தேசமெங்கும் பரப்ப வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். அந்த விண்ணப்பத்துக்குச் செவி சாய்த்த உடையவர் தமது சிஷ்ய கோஷ்டிகளுடன் புறப்பட்டு அழகிய மணவாளனை சேவித்து விடைகொண்டு தமது திவ்யதேச யாத்திரையைத் தொடங்கினார்.

முதலில் சோழநாட்டில் யாத்திரையைத் தொடங்கி கும்பகோணம் முதலான திருப்பதிகளை சேவித்து அங்கு இதர சித்தாந்த வித்வான்களையும் வெற்றி கொண்டார்.

அங்கிருந்து திருமாலிருஞ்சோலை முதலிய திவ்ய தேசங்களை சேவித்து, பாண்டி மண்டலத்திலுள்ள இதர மதவாதிகளையும் ஜயித்து, ஆழ்வார் திருநகரிலே நம்மாழ்வாரை சேவித்து, திருக்குறுங்குடிக்குச் சென்று அங்கு திருக்குறுங்குடி நம்பியை சேவித்து நின்றார்.

அந்தப் பெருமாள் ஒரு கேள்வி கேட்டார். "ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் முதலிய அவதாரங்களைச் செய்து ஜன்மம் பலவெடுத்து இந்த மனிதர்களைத் திருத்தப் பார்த்தேன், முடியவில்லை. அப்படியிருக்க நீர் எப்படி லக்ஷக்கணக்கான மக்களைத் திருத்தி ஆட்கொண்டீர்" என்று வினவினார்.

பெருமாள் கேட்டும் உடையவர் உடனடியாகப் பதிலிறுத்தார் இல்லை. "தேவரீர் கேட்கும் கிரமத்திலே கேட்டால், சொல்லும் முறைப்படி நாமும் சொல்லுகுறோம்" என்று பதில் சொன்னார்.

பரமாசார்யரான உடையவர் குரு சிஷ்ய பாவத்துடனிருக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்துவதைப் புரிந்து கொண்ட பகவானும் தமது சிம்மாசனத்திலிருந்து இறங்கி, கீழே விரிக்கப்பட்டிருந்த ரத்ன கம்பளத்தில் உட்கார்ந்து கொண்டார். ஸ்ரீராமானுஜருக்கு ஒரு சிம்மாசனத்தைப் போட்டு, "இனி உமது ஆசனத்தில் அமர்ந்து எனக்கு உபதேசம் பண்ணும்" என்றார்.

ஆனால் உடையவர் அந்த சிம்மாசனத்திலே உட்காராமல் "பெருமாள் வேண்டுமென்றே என்னை சோதிக்கிறார்" என்று மனத்துள்கொண்டு தமது ஆசார்யரான பெரிய நம்பியை அந்த சிம்மாசனத்தில் தமது மனத்தால் இருத்தினார். பிறகு அவரை முன்னிட்டு பெருமாள் காதில் சகல புருஷார்த்தங்களையும் அளிக்கும் த்வய மந்திரத்தை ஓதினார்.

"ஸர்வேஷாம் ஏவ மந்த்ராணாம்
மந்த்ர ரத்ன சுபாவஹம்
ஸக்ருத் ஸ்மரணமாத்ரேண ததாதி பரமம் பதம்
மந்த்ர ரத்னம் த்வயம் த்யாஸ:
பிரபத்தி சரணாகதி - லக்ஷ்மீ நாராயணாயே
ஹிதம் ஸர்வபலப்ரதம்"

என்று மந்திரத்தை ஓதினார்.

இந்த மந்திரத்தின் கருத்தாவது:

எல்லா மந்த்ரங்களைக் காட்டிலும் உயர்ந்ததும், மங்களத்தைச் செய்வதும், நல்லமுறையில் ஸ்மரணம் செய்தால் பரமபதத்தை அளிக்கக் கூடியதும், பிரபத்தி, சரணாகதி என்கிற முறைகளோடு கூடிய மந்திர ரத்னமான த்வயம் ஸர்வ பலன்களையும் அளிக்கவல்லது.



இப்படியாக உடையவர் பெருமாளுக்கு மந்திரோபதேசம் செய்ய திருக்குறுங்குடி நம்பியும் மிகவும் உகந்து "இராமானுஜனை உடையோம்" என்று கூற ஸ்ரீராமானுஜரும் அந்தப் பெருமாளுக்கு "ஸ்ரீவைஷ்ணவ நம்பி" என்று தாஸ்ய நாமம் அருளினார். பிறகு உடையவர் நம்பியை

சேவித்து நின்று "என்னை மன்னித்தருள வேணும்" என்று பிரார்த்தித்துக் கொண்டு திருவனந்தபுரம் எழுந்தருளி ஸ்ரீபத்மநாபப் பெருமாளை தரிசித்தார். பிறகு மேலைக்கரை வழியாக வடநாட்டு திருப்பதிகளை சேவிக்கச் சென்றார். வடமதுரை, சாலிகிராமம், வைகுண்டம், துவாரகை, அயோத்யை, பத்ரி, நைமிசாரணீயம், புஷ்கரம், கோகுலம், பிருந்தாவனம் இந்த திவ்ய தேசங்களுக்கெல்லாம் விஜயம் செய்தார்.

ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வோர் அற்புத நிகழ்ச்சி நடந்தது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் அர்த்தம் இருந்தது. ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம் இருந்தது. தமது யாத்திரையில் ஒரு மகானுடைய யாத்திரைக்கும், யாத்திரையின் பெயரால் ஊரைச் சுற்றும் ஒரு சாதாரண மனிதனுக்கும் உள்ள வேற்றுமையைக் காட்டினார் உடையவர்.





## 37. எந்தப் பக்கம் ஒதுங்க?

ஸ்ரீராமானுஜர் தமது பர்கவத கோஷ்டியுடன் பாரதம் பூராவையும் சுற்றி யாத்திரை செய்த காலத்தில் ஒவ்வோர் இடத்திலும் தமது தர்சனத்தின் மகிமையையும், தாம் உபதேசித்த முறைகளையும் தாமே கடைப்பிடித்து. மற் றொருவர் சிந்திக்கவும் அஞ்சும் பல அற்புதங்களைச் செய்து காட்டினார். சொல் வேறு, செயல் வேறு என்றில் லாத உத்தம மதமே ஸ்ரீவைஷ்ணவ மதம் என்பதை நிரூபிக்க வும் செய்தார்.

முதலில் தெற்கே சோழநாட்டில் தல யாத்திரை துவங்கிய உடையவர் திருவாலி திருநகரி சுற்று வட்டாரங் களில் உள் கோயில்களை வலம் வந்த உலாவில் ஒரு பகுதியில் அவர் வரும் வழியில் நேர் எதிரே தீண்டாத குலப் பெண் ஒருத்தி வந்து கெண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் ஸ்ரீராமானுஜர் “நான் போகும்வரை சற்று ஒதுங்கி நில் பெண்ணே” என்று கூறினார். அவள் நின்ற இடத்தைவிட்டு நகரவில்லை. அத்துடன் கேள்வியும் கேட்க முற்பட்டு, “எந்தப்பக்கம் ஒதுங்கட்டும் பெரியவரே? பரம பூஜ்யரும் அந்தணர்களில் சிறந்தவருமான உம்மை நோக்கி வரட்டுமா’ எனக்குப் பின்புறத்திலிருக்கும் திருக்

கண்ணபுரத்தின் திருக்கோயிலை நோக்கி நகரட்டுமா? எனது வலது புறத்தில் பரகாலன், பெருமாளை வழிபறி செய்ய முயன்ற திருமன்னன் கொல்லை இருக்கிறதே அங்கு ஒதுங்கவா? அல்லது எனது இடதுபுறத்தில் உள்ள திருவாலிப் பெருமாளை நோக்கி ஒதுங்கவா? எந்தப்புறம் ஒதுங்கட்டும். பரிசுத்தத்துக்கெல்லாம் இலக்கணமான நீர்தான் சொல்ல வேண்டும்" என்று கேள்விகளை உதிர்த்தாள்.

இந்தக் கேள்விகளைக் கேட்டவுடன் உடையவர் அசைவற்று நின்றுவிட்டார் பல விநாடிகள். பிறகு சொன்னார், "பெண்ணே! என்னை மன்னித்துவிடு. என் வயோதிகமும் அர்த்தமற்ற படாடோபமும் எனது அகங்காரத்தைப் பலப்படுத்தி எனது கண்களுக்கு மாயத் திரையைப் போட்டுவிட்டன. எம்பெருமானின் பாகவத கோஷ்டியினரை அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி என் மனத்துக்கும் திரை போட்டுவிட்டன. நான் தரித்திருக்கும் இந்த திருநாமங்கள் இந்த சந்நியாசியைவிட உனக்குப் பொருந்தும்" என்று. அந்தப் பெண்ணைத் தமது கோஷ்டியில் வந்து சேருமாறும் அழைத்தார். அவளும் உடையவர் கோஷ்டியில் சேர்ந்து, பின்னால் பெருமாள் பக்கலில் சேர்ந்து நிற்கும் பெரும் பேற்றையும் பெற்றாள்.

அங்கிருந்து பயணகதியில் பாண்டி நாட்டுக்குச் சென்ற உடையவர் ஸ்ரீ ஆண்டாளின் மனத்திலிருந்த ஒரு பெரும் குறையையும் தீர்த்து வைத்தார். ஸ்ரீ ஆண்டாள் எம்பெருமானுடன் இணையுமுன்பு தனது திருக் கல்யாணத்தின் போது நூறு அண்டாக்கள் அக்கார வடிசில் செய்து சீர்படைக்க வேண்டுமென்று கொண்டிருந்த அபிலாஷையை நிறைவேற்ற அக்கார வடிசில் தயாரித்து பெருமாளுக்கு நிவேதனம் செய்தார். இப்படி ஒரு தமையன் தங்கைக்கு செய்யவேண்டிய சீரைச் செய்து முடித்ததற்காக எம்பெருமானார் ஸ்ரீவில்லிபுத்தூரில்

ஸ்ரீஆண்டாளை சேவிக்கச் சென்றபோது சந்நிதியில் ஓர் அற்புதம் நடந்தது. அர்ச்சா ரூபத்தில் விக்ரகமாக நின்றிருந்த ஸ்ரீஆண்டாளின் உருவம் சிறிது அசைந்தது. அதிலிருந்த ஸ்ரீ ஆண்டாளே வெளியே வந்து உடையவரை நோக்கி, "எம் அண்ணாவே" என்று அழைத்தாள். இந்த நிகழ்ச்சியை ஒட்டித்தான் ஸ்ரீஆண்டாளின் வாழித்திரு நாமத்தில், "'பெரும்பூதூர் மாமுனிக்கு பின்னாள் வாழியே" என்ற வரி அனுசந்தானம் செய்யப்படுகிறது.



ஆண்டாள்

இப்படியாக திருக்குறுங்குடி நம்பியை சீடனாகவும். ஸ்ரீ ஆண்டாளை தங்கையாகவும் முறைகொண்ட ஸ்ரீ உடையவர் சோழ, பாண்டிய, சேர நாடுகளில் யாத்திரை முடித்த பிறகு மேலைக்கடலோரமாக வடநாடு சென்றார். அங்கு காச்மீரத்தில் சரஸ்வதி பீடத்திற்குச் சென்றதும் சரஸ்வதியே ஆசனத்திலிருந்து இறங்கி அவரை வர வேற்றாள்.

"ராமானுஜா! கப்யாஸம் புண்டரீகாக்ஷம் என்ற சுருதி வாக்யத்துக்கு எப்படி வியாக்கியானம் செய்தாய்?" என்று கேட்டாள்.

"தேவி! தங்களுக்குத் தெரியாததல்ல பொருள். இருப்பினும் நியமனத்தை முன்னிட்டுச் சொல்கிறேன்" என்ற ஸ்ரீ ராமானுஜர் "சூரிய மண்டலத்தில் குடி கொண்டிருக்கும் ஸ்ரீமன்நாராயணனுடைய திருக்கண்கள்



உஷ்ணமான சூரியக் கிரணங்களால் முத்தமிடப்படும் பங்கஜ மலரை ஒத்திருக்கின்றன. இப்படிப் பொருள் கொண்டேன்" என்றார்.

"நன்கு பொருள் கொண்டாய் ராமானுஜா. உன் பிரம்ம சூத்ர பாஷ்யம் சிறப்பானது. அது ஸ்ரீபாஷ்யம் என அழைக்கப்படும். உனக்கு ஸ்ரீபாஷ்யகாரர் என்ற சிறப்புப் பெயர் முற்றும் பொருந்தும். இந்த விமர்சனக் கிரந்தத்

துக்குப் பரிசாக ஹயக்ரீவ மூர்த்தியை அளிக்கிறேன்" என்று கூறி அந்த மூர்த்தியையும் அருளினாள்.

இந்த நிகழ்ச்சியைக் கேட்ட காச்மீர மன்னன் ஸ்ரீராமானுஜரைத் தன்னிடமே இருத்திக்கொண்டான். அவருடைய சீடனாகி அவரது அருளுரைகளைத் தினம் கேட்டும் வந்தான். இதனால் அந்த அரசனின் அவைப் புலவர்கள் பொறாமை கொண்டு மந்திர தந்திரங்களால் ஸ்ரீராமானுஜரை ஒழித்துவிடத் தீர்மானித்து அதற்கான க்ஷீத்ர ஜபங்களில் இறங்கினார்கள். இதை ஸ்ரீராமானுஜரிடம் பாகவதர்கள் தெரிவிக்க, "அந்த வேடிக்கையையும் பார்ப்போம்" என்று புன்முறுவலுடன் கூறினார் யதிராஜர்.

திடீரென்று ஒருநாள் அந்த ஸ்ரீநகரில் விபரீதக் காட்சியொன்று ஏற்பட்டது. ஸ்ரீராமானுஜருக்கு சூன்யம் வைக்க முயன்றவர்கள் மீது க்ஷுத்ரதேவதைகளே திரும்பவே அவைக்களப் பண்டிதர்கள் திடீரெனத் தெருக்களில் நிர்வாணமாகத் தலைமயிரைப் பிய்த்துக்கொண்டு ஓடலானார்கள். ஒருவர் கழுத்தை இன்னொருவர் பிடித்துப் புரளவும் செய்தார்கள்.

இதைக் கேட்ட மன்னன் ஸ்ரீராமானுஜர் திருவடிகளில் தண்டனிட்டு, "சுவாமி! இந்த புழுக்களை தேவரீர் பொருட்படுத்தமாட்டீரென்று நம்பினேன். ஆனால் இவர்கள் தங்களிடம் அபசாரப்படவும் முற்பட்டார்கள்" என்று வருத்தத்துடன் கூறினான்.

"மன்னவா! இவர்களை நான் ஏதும்செய்யவில்லை. க்ஷுத்ர தேவதைகளுக்கு ஒரு குணம் உண்டு. அவற்றை நாம் இன்னொருவர் மீது ஏவும்போது, ஏவப்பட்ட மனிதன் அவை அணுக முடியாத சுத்தனாயிருந்தால் திரும்ப ஏவியவர்மீது அவை திரும்பிவிடும். அதனால்தான் இந்த நிகழ்ச்சி" என்று சொன்னார்.

"தேவரீர் எனக்காக இவர்களை மன்னித்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டான் மன்னன்.

"அப்படியே ஆகட்டும்" என்ற உடையவர் தமது ஸ்ரீபாத தீர்த்தத்தை அவர்கள்மீது புரோட்சிக்க உத்தர விட்டார். அதனால் மறுபடியும் சித்தஸ்வாதீனத்துக்கு வந்த அவைக்களப் புலவர்கள் அவரை சரணடைந்தனர்.

இதனால் பெரிதும் மகிழ்ச்சி கொண்ட காச்மீர மன்னன், ஸ்ரீராமானுஜர் அங்கிருந்து புறப்பட்டபோது நீண்டதூரம் நடந்து வந்து அவரை வழியனுப்பிவிட்டுச் சென்றான். காச்மீரத்திலிருந்து வாராணசி, ஸ்ரீகூர்மம், அஹோபிலம் முதலிய தலங்களில் யாத்திரை செய்த ஸ்ரீராமானுஜர் கடைசியாக திருமலைக்கு வந்து சேர்ந்தார்.

திருமலையிலும் ஒரு பிரச்னை அவரை எதிர்நோக்கி நின்றது. திருமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமாளின் திருக்கோலம் சிவமா, விஷ்ணுவா என்ற சர்ச்சை எழுந்தது. சிவனடியார்கள் அந்த சிலை சிவன் தான் என்று வாதாடினார்கள். "இல்லை, விஷ்ணுவின் தோற்றந்தான்" என்று வைணவர்கள் சாதித்தார்கள். இந்தச் சர்ச்சையை ஸ்ரீராமானுஜரே தீர்த்து வைக்கட்டுமென்று இருதரப்பாரும் சொல்ல, ஸ்ரீராமானுஜர் ஒரு யோசனை சொன்னார். "அங்கிருக்கும் உருவம் எதுவாயிருந்தாலும் அதன் முன்பு மழு, உடுக்கை முதலிய சிவச் சின்னங்களையும், சங்கு சக்கரங்களாகிய வைஷ்ணவச் சின்னங்களையும் கர்ப்பக் கிரகத்தில் வைத்துப் பூட்டிடுவோம். அந்த விக்ரகம் எதை ஏற்றுக் கொள்கிறதோ அதை நாமும் ஏற்றுக்கொள்வோம்" என்றார்.

அதற்கு இருதரப்பாரும் சம்மதிக்க அன்றிரவு மழுவு, உடுக்கை, சங்கு, சக்கரங்கள் எல்லாம் கர்ப்பக்கிரகத்தில் வைக்கப்பட்டு சந்நிதிக் கதவும் பூட்டப்பட்டது. இரவு

முழுதும் இருதரத்தாரும் கண்விழித்துக் காவல் செய்தனர். மறுநாள் காலை ஸ்ரீராமானுஜர் தீர்த்தமாடி பன்னிரண்டு திருமண் காப்பும் சாத்திக்கொண்டு கோயிலுக்கு எழுந்த ருளினார். சிவனடியார்களும் அங்கு வர, எல்லோர் முன்னிலையிலும் சந்நிதி திறக்கப்பட்டது. இருதரப்பாரும் வியப்பில் ஆழ்ந்து நின்றனர். சிலை சங்கு சக்கரங்களை ஏந்தி நின்றது. சிவச்சின்னங்கள் கிடந்த இடத்திலேயே கிடந்தன. வைணவர்கள் "கோவிந்தா, கோவிந்தா" என்று வெற்றி கோஷம் எழுப்பினார்கள். ஏழுமலையானைப் பற்றிய ஐயமும் தீர்ந்தது.

திருப்பதியிலிருந்து காஞ்சீபுரம், திருவல்லிக்கேணி. மதுராந்தகம், திருவஹீந்திரபுரம் முதலிய தொண்டை மண்டல திருப்பதிகளையும் சேவித்துக் கொண்டு முடிவாக ஸ்ரீரங்கத்துக்கு வந்து சேர்ந்தார். ஆசார்யனை வரவேற்க ஸ்ரீரங்கவாசிகளும் அக்கம்பக்கக் கிராமங்களிலிருந்த பாகவதர்களும் ஏராளமாகத் திரண்டிருந்தார்கள். அவர் ஸ்ரீரங்கத்தில் திருவடி வைத்தவுடனே ஆயிரக்கணக்கான வர்கள் தரையில் தண்டனிட்டனர். ஸ்ரீராமானுஜர் அவர்களைக் குளிரநோக்கிக் கோவிலுக்குச் சென்று அரங்கனை சேவித்து நின்றார். "எப்படியிருந்தது யாத்திரை?" என்று பெருமாள் கேட்டார்.

"எம்பெருமான் உடனிருக்கும்போது அடியார்களுக்கு என்ன குறையிருக்க முடியும்?" என்று விண்ணப்பித்த ஸ்ரீராமானுஜர் தீர்த்தப்பிரசாதம் பெற்று மடத்துக்குத் திரும்பினார்.





# 38. பதிவிரதையும் பகவானும்

திருத்தல யாத்திரை முடித்து, சென்றவிடத்தி லெல்லாம் ஸ்ரீவைணவ மதத்தைப் பரப்பி, புகழ் எங்கும் பிரகாசிக்க, திருவரங்கம் திரும்பிய ஸ்ரீராமானுஜர், காலத்தைச் சிறிதும் வீணாக்காமல் தினம் தவறாமல் தமது சீடர்களுக்கு ஸ்ரீபாஷ்ய கிரந்த சூக்ஷ்மங்களை எடுத்து உபந்நியாசம் செய்து நல்லறிவு புகட்டிக்கொண்டிருந்த காலத்தில் வியக்கத்தக்க சில விசேஷங்கள் நடந்தன.

ஸ்ரீராமானுஜ கோஷ்டியில் எல்லோரும் சமம் என்றாலும் சாஸ்திர ஞானத்தாலும் அனுஷ்டானக் கிரமத்தாலும் முதல்வர் என கூரத்தாழ்வானே கருதப் பட்டார். அவரைப் பஞ்சகால பராயணர் என்று குரும்பரை எனும் கிரந்தம் அழைக்கிறது. கூரத்தாழ்வான் தமது அன்றாட வாழ்க்கையை (பஞ்சால கட்டங்களாக) ஐந்து விதமாகப் பிரித்துக்கொண்டார். விடியற்காலம் அவரது நீராட்டம் நியமநிஷ்டைகளுக்கும் பிரார்த்த னைக்கும் ஒதுக்கப்பட்டது. அடுத்து, அவர் உபதானத் துக்குக் கிளம்பி எந்த இல்லங்களில் அனாசாரமில்லையோ, தூய்மை இருக்கின்றதோ, அந்த இல்லங்களில் மட்டும் பிக்ஷை எடுத்து நாளின் இரண்டாவது பகுதியை முடித்தார்.

மூன்றாவதாக, தாம் உபதானமெடுத்ததை அதிதிகளுக்கு இடக் காத்திருந்தார். அதிதி சத்கர்மா பண்ணி தாமும் உண்ட பின்பு பிற்பகலை வேத பிரபந்தங்களை ஓதுவதில் கழித்தார். இந்த நாலாவது கடமைக்குப் பின்பு ஐந்தாவ தாக அந்த நாளை நன்னாளாக முடிக்க இரவில் பக வானைத் துதித்துப் படுத்தார். இப்படி ஐந்து காலக் கிரமங் களை ஏற்படுத்திக்கொண்டு மகாஞானியாய் இல்லறத்தில் தாமரை இலை தண்ணீர் போல் வாழ்க்கையை நடத்தின மகானான ஆழ்வானின் மனைவியான ஆண்டாளும் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாய் இருந்ததால் தெய்வீகம் ஆழ்வான் வீட்டில் உலாவந்தது.

இந்த பஞ்சகால வாழ்க்கைக்கும் சில சமயங்களில் தடை வந்தது. ஒரு நாள் மழை அதிகமாகக் கொட்டவே ஆழ்வான் உபதானத்துக்குச் செல்லாமல் வாளாவிருந்து விடவே அந்தப் புனித இல்லத்தில் அடுப்பு புகையவில்லை. அன்று ஆழ்வானும் ஆண்டாளும் உபவாசமிருக்க நேரிட்டது. ஆண்டாள் தான் பட்டினி கிடப்பதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் கணவன் பட்டினியோடு படுத்துக் கிடப்பதை அந்தப் பதிவிரதையால் தாங்கமுடிய வில்லை. அந்த இரவு ஆழ்வான் படுத்திருக்க, நள்ளிரவில் 'பெரிய அவசரம்' அதாவது நள்ளிரவு பிரசாத நிவேதனம் முரசுகள் ஒலிக்க ஸ்ரீரங்கநாதனுக்குப் படைக்கப்பட்ட சமயத்தில், அந்த நகராவின் ஒலி கேட்டு ஆண்டாள் அமைதியாக உறங்கிக்கொண்டிருந்த தன் கணவனைப் பார்த்தாள். அப்பொழுது தனக்குள் சொல்லிக் கொண்டாள். "பெருமானே! உமது அடியவர் இங்கு பட்டினியுடன் உறங்கிக் கொண்டிருக்கையில் நீர் நன்றாக குதூகலத்துடன் சாப்பிடுகிறீர். ஆனால் உமக்கென்ன? நீர் உபதானத்துக்குப் போக அவசியமில்லை. யார் சாப்பிட்டா லும் சாப்பிடாவிட்டாலும், உமக்கு வேளை தவறாமல் உணவு கிடைத்துவிடுகிறது."

இந்தச் சொற்களை மனவேதனையுடன் சொல்லிக் கொண்டாள் ஆண்டாள். அந்த மகாபதிவிரதைக்கு எல்லாம் தனது கணவன்தான். அவர்தான் தனது வாழ்க்கை, குரு, என்று எண்ணியவள். ஆகையால் ஸ்ரீரங்கநாதனைப் பற்றி அவள் கவலைப்படவில்லை. "ஆடு மாடுகளை உடையவர்கள்கூட அவற்றுக்குத் தீனிபோட்டு பராமரிக் கிறார்கள். ஸ்ரீரங்கநாதன் என்ன செய்கிறார்?" என்று கேள்வி எழுப்பினாள்.

இது யார் காதில் விழாவிட்டாலும் பக்தர்களை ரட்சிக்கும் ஸ்ரீரங்கநாதன் காதில் விழுந்தது. அந்த பத்தினி சொன்னது முற்றும் சரி என்று நினைத்தார் பகவான். ஆகவே அன்றிரவு திருமடப்பள்ளி தலைவரான உத்தம நம்பியின் கனவில் தோன்றி "நமது ஆழ்வான் பட்டினி கிடக்கிறான். இன்றிரவு எனக்கு சமர்ப்பித்த பிரசாதத்தை நீர் தலையில் சுமந்துகொண்டு எனக்கு அளிக்கப்படும் மரியாதைகளுடன் ஆழ்வானுக்குக் கொடுத்துவாரும்" என்று கட்டளையிட்டார். சொப்பனமும் துயிலும் நீங்கிய உத்தமநம்பி உடனடியாக எம்பெருமான் கட்டளையை நிறைவேற்றினார். கொட்டு மேளத்துடன் பிரசாதத்தை தலையில் சுமந்து ஆழ்வான் இல்லத்துக்கு விரைந்தார். வெளியே கொட்டுமேளம் கேட்டதும் நித்திரை கலைந்த ஆழ்வான் பெருமாள்தான் எழுந்தருளுகிறார் என்று கருதி இல்லத்துக்கு வெளியே வந்தார். உத்தமநம்பி தலையி லிருந்த பிரசாதத்தை இறக்கி "பெருமாள் இதை தேவரீருக்குக் கொடுத்துவரக் கட்டளை இட்டார்" என்று விண்ணப்பித்து உள்ளே பிரசாதத்தையும் கொண்டுபோய் வைத்தார்.

ஆழ்வானுக்கு ஏதும் புரியவில்லை. 'பெருமாளை நான் பிரசாதம் கேட்கவில்லையே' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார். பிறகு தமக்கு வேண்டிய இரண்டு திரளை பிரசாதத்தை எடுத்துக்கொண்டு மீதியைத் திருப்பி அனுப்பினார். பிறகு தமது மனைவியை விசாரித்தார்,

"ஆண்டாள்! நீ பெருமாளை ஏதாவது கேட்டாயா?" என்று.

"நான் எதுவும் கேட்கவில்லை. ஆனால் நள்ளிரவுப் பிரசாத முரசுகள் சப்தித்ததும் எனக்குள் சொல்லிக் கொண்டேன். "அடியவர் பட்டினியுடன் படுத்திருக்கும் போது பெருமாள் கோலாகலத்துடன் அமுது செய்கிறார் என மனத்துள் நினைத்தேன்" என்றாள் ஆண்டாள்.

அதற்மேல் ஆழ்வான் ஏதும் பேசவில்லை. "எல்லாம் அவன் சங்கல்பம்" என்று கோவிலிலிருந்து வந்த இரண்டு திரளைப் பிரசாதத்தைத் தாமும் உண்டு பத்தினிக்கும் அளித்தார். காலக்கிரமத்தில் அந்த இரண்டு திரளைப் பிரசாதங்களும் ஆழ்வான் குடும்ப வாழ்க்கையில் பெரும் விசித்திரத்தை விளைவித்தன. இரண்டு திரளைகளுக்கு பராசரன், வியாசன் என்ற இரு குழந்தைகளைப் பெரும் மேதைகளை ஆண்டாள் ஈன்றாள். அந்த மகாபதிவிரதை யின் வயிற்றில் கௌஸல்யையின் வயிற்றில் எம்பெருமான் அவதாரம் எடுத்தது போலவே ஸ்ரீரங்கநாதனே பராசர, வேதவியாச பேரொளிகளாகத் தோன்றினான். ஸ்ரீவைஷ் ணவ சமுதாயத்திற்கு அவை வீசிய ஒளி ஸ்ரீவைணவ சமயத்தை ஒளிமிகுந்த சமயமாக அடித்தன. அவர்களில் பராசரப்பட்டர் குழந்தையிலேயே மகாஞானியானார். அவர் கேள்விகள் சகல சாஸ்திர விற்பன்னர்களை, அவர் தந்தையான ஆழ்வானைக் கூட திணற அடித்தன.

மகாமேதையான பராசரன் பிறந்தபோதும் பிறகுங் கூட புத்ர வாஞ்சையை அதிகமாகக் காட்டவில்லை ஆழ்வான். ஸ்வாமி உடையவர் இருக்கிறார், பார்த்துக் கொள்வார் என்று பேசாமல் இருந்துவிட்டார். அவர் அப்படி நினைத்ததில் தவறு இல்லை. குழந்தையைத் தம்மிடம் கொண்டுவரச் சொல்லி எம்பாரைப் பணித்தார் உடையவர். எம்பார் எடுத்து வந்த குழந்தையைத் தமது திருக்கைகளில் வாங்கிக்கொண்டு அதன் தேஜஸ்ஸைக்

கண்டு வியந்தார். குழந்தையின் ஆத்மீகப் படிப்பைக் கவனிக்கும்படி எம்பாருக்கு உத்தரவும் இட்டார். குழந்தைக்குப் பராசரன் என்று பெயரும் இட்டார். இதனால் ஆளவந்தாருக்கு அளித்த இரண்டாவது பிர மாணத்தை நிறைவேற்றினார். சிறிது காலம் கழித்து எம் பாருடைய சகோதரருக்கு ஓர் ஆண்குழந்தை பிறக்க, அதற்கு ஸ்ரீசடகோபன் என்று திருநாமம் சாத்தி ஆள வந்தாருக்கு அளித்த மூன்றாவது பிரமாணத்தையும் நிறைவேற்றினார்.

பராசரபட்டருக்கு ஐந்தாவது பிராயம் நடக்கையில் ஒரு நாள் ஆழ்வான் திருவாய்மொழியைச் சொல்லிக் கொண்டிருக்கையில் 'நெடுமாற்கடிமை' என்ற பாசுரத்தில் 'சிறுமாமனிசர்' என்ற இடம் வந்தபோது பராசரர் பிரமித்து ஒரு கேள்வி கேட்டார். "அப்பா! சிறுமனிசர் மாமனிசர் என்ற இரு சொற்களும் முற்றும் முரண் பாடானவை. இவற்றைச் சேர்த்து ஆழ்வார் எப்படிப் பாடினார்?" என்று வினவினார்.

ஆழ்வான் திகைத்தார். அக்கேள்வி கேட்டுப் பிறகு சொன்னார்: "குழந்தாய்! உனக்கு இன்னும் முறைப்படி, பாடம் சொல்லவில்லை நான். உனக்குப் புரியும்படியாகச் சொல்கிறேன் கேள்.. இங்கு நீ தேவராஜ முனியையும் சிறியாழ்வானையும் பார்த்திருக்கிறாயல்லவா? அவர்கள் பார்ப்பதற்கு எவ்வளவு சிறியவர்களாயிருக்கிறார்கள். ஆனால் உடலை வைத்துக் கணக்குப் போடக் கூடாது. இருவரும் அறிவிற் பெரியவர்கள். ஆத்மவித்தையில் சிறந்த வர்கள். இதே உதாரணம் சிறுமாமனிசர் என்ற சொல்லுக் குப் பொருந்தும். இதையே உடல் சிறியரென்றிருக்க வேண்டாம் என்று பழந்தமிழர் சொல்லியிருக்கிறார்கள்.

வெகு சீக்கிரம் இன்னோர் அற்புதமும் நிகழ்ந்தது. சர்வ ஞான பண்டிதர் என்ற பட்டத்துடன் ஒரு பண்டிதர் பல்லக் கில் வந்தார் ஸ்ரீரங்க வீதிகளில். அப்பொழுது வீதியில் விளை

யாடிக் கொண்டிருந்த பராசரர் பல்லக்கின் அருகில் சென்று, "ஐயா சர்வஞான பண்டிதரே!" என்று அழைத்தார்.

பண்டிதர், "யாரப்பா நீ" என்று கேட்டார்.

"நீர் சர்வஞானவான் என்று சொன்னார்கள். ஒரு கேள்வி கேட்க வந்தேன்" என்றார் பராசரர்.

"கேள் குழந்தாய்" என்றார் பண்டிதர்.

கீழேயிருந்து தமது சிறு கை நிறைய மண்ணெடுத்து, "இதில் எத்தனை மண் இருக்கிறது?" என்று கேட்டார் பராசரர்.

சர்வஞானர் விழித்தார். பராசரர் சிரித்து, "இது ஒரு பிடி மண் என்று சொல்லக்கூடத் தெரியாத நீர் சர்வஞானரா? கற்றது கைமண் கூட இல்லையே?" என்று கேட்டார்.

சர்வஞானப் பண்டிதர் தமது ஞான சூன்யத்தைப் புரிந்து கொண்டார். குழந்தை தெய்வீகமானதென்பதையும் புரிந்து கொண்டார். குழந்தையை எடுத்துத் தமது மடியில் வைத்துக்கொண்டு ஆழ்வான் இல்லம் நாடினார்.

இதற்குப் பிறகு பராசரபட்டர் பள்ளியில் சேர்க்கப் பட்டார். அங்கு முதல் நாள் வேத பிரபந்தப் பாடங்கள் நடந்தன. மறுநாளே பராசரர் பள்ளிக்குப் போகாமல் விளையாட ஆரம்பித்தார். ஆழ்வான் மகனைக் கண்டித் தார், "ஏன் பள்ளிக்கூடம் போகவில்லை?" என்று.

"அங்கு சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல் கிறார்கள்" என்றார் பராசரர்.

"என்ன சொன்னார்கள் நேற்று?" என்று தந்தை கேட்டார். கடகடவென வேத பாடங்களை வரிக்கு வரி ஒப்புவித்தார் பராசரர். பிரமித்தார் ஆழ்வான். இனி பரா சரனைப் பள்ளிக்கு அனுப்புவது பிசகு என்று ஆழ்வானும் எம்பாருமே பராசரனின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள்.



# 39. மண்ணைத் தாண்ட இயலாத மாவீரர்

வயது ஏறுவது என்பது ஒரு பெரிய வித்தையல்ல. உயிரோடிருக்கும் எந்த மனிதனுக்கும் ஒவ்வோர் ஆண்டுக்கும் ஒரு வயது ஏறவே செய்கிறது. அந்த வயது எப்படி ஏறுகிறது? எத்தனை உபயோகத்துடன் ஏறுகிறது? அந்தந்த ஆண்டின் முடிவில் அவன் நிலை என்ன? இந்தக் கேள்விகளுக்குக் கிடைக்கும் விடையில்தான் ஒவ்வொரு மனிதனின் பிறவிப் பயனை உணருகிறோம். அந்தக் காலத்தில் உலகிலிருந்த எல்லோருக்கும் தான் வயதேறியது. பராசர பட்டரும் வயது ஏறி வாலிபத்தை அடைந்தார். ஆனால் ஒவ்வோர் ஆண்டிலும் அவரது அறிவும் மேதா விலாசமும் வளர்ந்தது. சாஸ்திர ஞானத்தில் இணையற்றவராக உடலழகோடு அறிவழகும் பெற்று விளங்கினார் பராசரர். அந்த வாலிப வயதிலேயே அவர் சிறந்த காலக்ஷேபங்களையும் மிக அருமையாகச் செய்து வந்தார். அவருடைய உபந்யாசத்தை ஒருமுறை கேட்ட ஸ்ரீராமானுஜர் அவருக்கு வேதாந்தாசார்யார் என்ற விருதையும் அளித்து மகிழ்ந்தார்.

இப்படிப் பலராலும் போற்றும்படி வளர்ந்த பராசர பட்டருக்கு வாலிப வயதாகியும் திருமணமாகாததை

எண்ணிய அவர் தாய் வியாகூலப்பட, ஆழ்வான், இதைப் பற்றி அன்றிரவு பெருமாளிடமே முறையிட்டார். அன்று நள்ளிரவில் ஸ்ரீ ரங்கநாதன் பெரிய நம்பி குடும்பத்தாரின் சொப்பனத்தில் வந்து முதலில் ஆழ்வான் பிள்ளைக்குப் பெண் கொடுக்குமாறு உத்தரவிட மறுநாள் பராசரனுக்குக் கிராக்கி மிக அதிகமாக வந்தது. பெரிய நம்பி வட்டாரங்கள் நான் நீ என்று போட்டி போட்டிக்கொண்டு பெண் கொடுக்க முன்வந்தார்கள். அந்தப் பெண்களில் ஒரு அக்கச்சியை பராசர பட்டருக்கு தாரை வார்த்துக் கொடுத்தார்கள். பராசரபட்டர் கிருகஸ்தாசிரமத்திலும் கிரந்த காலக்ஷேபாதிகளிலும் சிறந்த ஒரு லக்ஷிய புருஷராய், மகா மேதையாய் ஊரும் பேரும் சிறக்க வாழ்ந்து வந்தார். இத்தகைய ஒரு மேதை ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்துக்குக் கிடைத்ததை எண்ணி ஸ்ரீராமானுஜர் பரவசப்பட்டார்.

ஸ்ரீராமானுஜ மதம் எங்கும் துரிதமாகப் பரவ முயன்ற காலம். ஸ்ரீவைஷ்ணவ தத்துவங்களை உயர்வு தாழ்வு பாராது, பணக்காரர் ஏழை எளியவர் என்று பாராது. சகலரையும் ஸ்ரீவைஷ்ணவமாகிற பெரும் ஜோதியில் ஈடுபடுத்திக் கொண்டிருந்த காலம். ஸ்ரீராமானுஜர் மாத்திரமின்றி, அவரது 74 சீடர்களும் எங்கும் பரவி எட்டு திக்கிலும் பரப்பிக்கொண்டு அன்பையும் பக்தியையும் சமத்வத்தையும் சாந்தியையும் பரப்பி வந்ததால் உலகமே வைணவ மயமாகிவிட்டது போன்ற பெருநிலை ஏற்படவே, எந்த நல்ல பெரிய காரியங்களுக்கும் எதிரிகள் முளைப்பதுபோல ஸ்ரீவைஷ்ணவத்துக்கும் ஒரு எதிரி ஏற்பட்டான். அவன் தான் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்த சோழ மன்னன். அவன் சிவபக்தியில் சிறந்தவன். அவனை ஊக்கியவன் நாலூரான் என்ற ஆழ்வானின் சீடன், சோழ மன்னனின் அமைச்சன்.

ஸ்ரீராமானுஜர் மதம் பெரிதும் பரவுவதைக் கண்ட சோழ மன்னன் சைவ மதத்தைத் தனது அரசாங்க மத

மாக்கினான். அதில் தவறு ஏதுமில்லை. எந்த அரசனும் தனது அரசாங்க மதத்தை நிர்ணயிப்பது பிசகில்லை. ஆனால் அரசன் மத வெறியனாகி பிற மதத்தை அழிக்கும் முயற்சியில் ஈடுபடுவதுதான் நீதிக்குப் புறம்பானது. சோழன் குடிகளுக்கு மத உரிமை விஷயத்தில் சுதந்திரம் அளிப்பதை விட்டு "சிவனே உயர் தெய்வம்" என்று எழுதி பிரமுகர் களிடம் கையெழுத்து வாங்க ராஜ்ய அதிகாரிகளுக்கு உத்தரவிட்டான். சிலர் அரசனுக்குப் பயந்து அப்படியே கையெழுத்துப் போட்டும் கொடுத்தார்கள். இப்படி அரசியல் விஷயத்தில் கையெழுத்து வாங்கும் முறை அந்தக் காலத்திலேயே இருந்து வந்ததாகத் தெரிகிறது.

இப்படி நிர்ப்பந்தத்தால் வாங்கிய கையெழுத்துப் பட்டியலை மன்னன் தனது மந்திரியிடம் காட்டினான் பெருமையுடன். அதைப் பார்த்த மந்திரி நாலூரான் நகைத்தான். "மன்னவா! எதற்கும் தலையாட்டும் ஆடு களிடம் கையொப்பம் வாங்கியிருக்கிறீர்கள். சிங்கங்கள் இன்னும் படியவில்லை. ஸ்ரீராமானுஜரும் ஆழ்வானும் கையெழுத்து இட்டாலன்றோ இதற்கு அர்த்தமுண்டு!" என்று தூண்டினான் அந்த துன்மந்திரி.

உடனே மன்னனும், "ஸ்ரீராமானுஜரை கைப்பிடியாகக் கொண்டு வாருங்கள்" என்று உத்தரவிட ராஜபடர்கள் திருவரங்கம் நோக்கி விரைந்தார்கள். திருவரங்கத்துக்கு அவர்கள் வந்த சமயத்தில் ஸ்ரீராமானுஜர் நீராடிக் கொண்டிருந்தார். மடத்து வாயிலுக்கு வந்த ராஜபடர்கள், "ராமானுஜர் எங்கே?" என்று வினவினார்கள்.

மடத்துப் பணிமக்களில் ஒருவர், "எதற்கு ராமானுஜர்?" என்று விசாரித்தார்.

"அவரை அழைத்துவர மன்னர் உத்தரவு" என்று வீரர்கள் சொல்ல பணிமகன் உள்ளே விரைந்து விஷயத்தை ஆழ்வானிடம் ரகசியமாகத் தெரிவித்தார்.

அரசு உத்தரவின் காரணத்தை மகாமேதாவியான ஆழ்வான் விநாடிநேரத்தில் புரிந்துகொண்டு, ஸ்ரீராமானுஜ ரின் காஷாயத்தையும் த்ரிதண்டத்தையும் தாம் தரித்துக் கொண்டு மடத்துக்கு வெளியே வந்தார். அவர் ராஜ படர்களுடன் செல்வதைக் கண்ட பெரிய நம்பியும் அவரு டன் சென்றார். இப்படி இவர்கள் புறப்பட்டுப் போனதை அறியாத உடையவர் தமது நீராட்டத்தை முடித்துக் கொண்டு, "திரிதண்ட காஷாயாதிகளைக் கொடுங்கள்" என்று கேட்டார் அடுத்திருந்த அடியார்களிடம்.

அங்கிருந்த முதலியாண்டான், ஆழ்வானும் பெரிய நம்பியும் நீண்ட தூரம் போயிருப்பார்களென்று தீர் மானித்து விஷயத்தை ஸ்ரீராமானுஜரிடம் விண்ணப்பித்துக் கொண்டார். இதைக் கேட்ட ஸ்ரீராமானுஜர் வியா கூலத்தின் வசப்பட்டு, "என்னால் ஆழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் இந்தத் தீமை ஏற்பட வேண்டுமா?" என்றார் வருத்தத்துடன். பிறகு ஏதோ சிந்தித்துவிட்டு, "அப்படி யானால் ஆழ்வானுடைய உடைகளை எனக்குத் தாருங்கள்" என்று கேட்டு அவற்றைத் தாம் அணிந்து கொண்டார்.

அப்பொழுது அங்கிருந்த ஸ்ரீவைணவ தாஸர்கள் "ஸ்வாமி! தாங்கள் இனி இங்கிருப்பது அபாயம். ஆகை யால் இந்த இடத்தைவிட்டுச் சிறிதுகாலம் போய் வருவது நல்லது" என்று விண்ணப்பித்தார்கள்." அப்பொழுதும் தயங்கினார் உடையவர். அந்தத் தயக்கத்தைக் கண்ட அடியார்கள், "ஆழ்வானும் பெரிய நம்பியும் எம்பெருமான் அருளால் தீங்கு ஏதுமின்றித் திரும்புவார்கள். அவர்கள் அழைத்து வந்தது வேறு மனிதர்கள் என்று அறிந்ததும் சோழ மன்னன் அவர்களைப் போக விடுவான்" என்று கூறினார்கள்.

அப்படியும் ஸ்ரீராமானுஜருக்கு மன நிம்மதியில்லை. அடியார்கள் வற்புறுத்தினார்கள். "தாங்கள் தப்ப வேண்டி

யது தங்களுக்காக அல்ல. ஸ்ரீவைஷ்ணவம் இன்னும் தங்களைத்தான் நம்பியிருக்கிறது. ஸ்ரீவைஷ்ணவத்தின் ஆணிவேர் அழிந்தால் ஸ்ரீவைஷ்ணவ கல்பதரு அழிந்து போகும். மதத்தை உத்தேசித்து தேவரீர் இங்கிருந்து போக வேண்டும்" என்று வலியுறுத்தினார்கள்.

ஸ்ரீராமானுஜர் அப்பொழுதும் மிகுந்த கிலேசத்துடன் தமது ஆராதனப் பெருமாளான வரதராஜனிடம் சென்று, "எம்பெருமானே! உன் திருவுள்ளம் இப்படியானால் சில காலம் இங்கிருந்து போகிறேன். உன் சித்தப்படி சகலமும் நடக்கும்" என்று கூறிவிட்டு மடத்திலிருந்த தமது கோஷ்டி



யில் சில பேர்களை அழைத்துக்கொண்டு கிளம்பி மேல் திசை நோக்கிப் பயணமானார்.

தனது வீரர்கள் அழைத்து வந்தது ஸ்ரீராமானுஜரல்ல என்பதைப் புரிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை சோழ மன்னனுக்கு. "ஸ்ரீராமானுஜனைப் பிடித்து வாருங்கள்" என்று எரிந்து விழுந்தான் வீரர்களை நோக்கி.

சோழ வீரர்கள் மிகத் துரிதமாக ஸ்ரீரங்கம் வந்து ஸ்ரீராமானுஜர் தப்பிவிட்டதை அறிந்து அவர் சென்ற திசையில் வேகமாகச் சென்றார்கள். தூரத்தே

ஸ்ரீராமானுஜரும் அவரது கோஷ்டியும் சென்றதையும் கண்டு அவர்களை அணுகவும் முற்பட்டார்கள். ஸ்ரீராமானுஜர் திரும்பி நோக்கினார். ராஜபடர்களைக் கண்ட தாஸர்கள் அஞ்சினார்கள். ஸ்ரீராமானுஜர் கீழே யிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து, "கோடி சூர்யப் பிரகாசமான சுதர்சன சக்கிரத்தை ஏந்தி நிற்பவனே! உன் சார்ங்கமும் இருப்பது அலங்காரத்துக்காக அல்லவே! இந்தப் படர்களை தடுப்பது உனக்கு எம்மாத்திரம்!" என்று மனத்துள் துதித்து தமது காலடியிலிருந்த ஒரு பிடி மண்ணை எடுத்து, தாஸர்களைப் பார்த்து, "இந்த மண்ணை ராஜபடர்கள் வரும் வழியில் தூவி விடுங்கள்" என்றார்.

தாஸர்கள் மண்ணை இரைத்தார்கள் வீரர்கள் வரும் வழியில். அந்த மண் விழுந்த இடத்தை ராஜபடர்கள் தாண்ட முடியவில்லை. அது கிடந்த இடத்தைத் தாண்ட முடியாமல், "போகிற பார்ப்பார் மந்திரவாதம் பண்ணிப் போனார்கள்" என்று நொந்தவண்ணம் வந்த வழியே திரும்பிச் சென்றார்கள்.

ஸ்ரீராமானுஜரும் தமது வழி நடந்தார் தமது கொள்கை பரப்ப, மேற்றிசை நோக்கி.





# 40. ஸ்ரீராமானுஜ பாதுகா பிரபாவம்

மணலையே மந்திரக் கணைகளாக்கி சோழ வீரர் களை விரட்டிய பிறகு ஸ்ரீராமானுஜர் தமது சிஷ்ய கோஷ்டியுடன் மேல் திசை நோக்கி, அரங்கனே வழித் துணையாக, த்வயத்தின் உச்சரிப்பே உயிர் மூச்சாக, நாட் கணக்கில் நடந்து, தமது திருப்பாதத்தால் நடந்த இடங் களை யெல்லாம் புனிதமாக்கிக்கொண்டு, கடைசியாக நீலகிரித் தொடரைச் சேர்ந்த ஒரு மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தார். பல நாட்களாகச் சரியான உணவில்லை. மழை கொட்டோ கொட்டென்று கொட்டுகின்ற சூழ் நிலை. உடல் உதறும் குளிர், மையிருட்டு. இந்தநிலையில் எம்பெருமானாரைத் தூக்கிக்கொண்டு செல்லவேண்டிய நிலை ஏற்பட்டது சீடர்களுக்கு. சீடர்கள் எந்த நிலைக்கும் சித்தமாக உடையவரைச் சுமந்துகொண்டு இருட்டில் நடந்த போது தூரத்தே ஒரு வெளிச்சம் தெரிய அதை நாடிச் சென்றனர் ஸ்ரீவைஷ்ணவதாஸர்கள்.

அந்த விளக்கு எரிந்த இடத்திலும் ஒரு வைணவ அடியார் கூட்டம் இருந்தது. அவர்கள் அனைவரும் வேட்டுவ இனம். அனைவரும் திருமலை நல்லான் சீடர் கள்; பரம வைணவர்கள். இங்கு திருமலை நல்லானைப்

பற்றியும் அந்த வேடர் கூட்டத்தையும் பற்றிச் சில விவரங் களைக் கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. திரு மலை நல்லான் என்ற அடியார் உடையவரின் சீடர்களில் ஒருவர். சமநோக்கில் எல்லோரையும் மிஞ்சியவர். ஒருநாள் மதுரையில் வைகை நதிக்கரையில் நிற்கையில் வைகை வெள்ளத்தில் சண்டாளன் பிணமொன்று வரு வதைக் கண்டார். அந்தப் பிணத்தின் உடலில் திருமண் காப்பு இருப்பதையும் பார்த்து அது சண்டாளன் உடல் என்றிருந்தும் ஆற்றில் குதித்து நீந்தி அந்தப் பிணத்தை கரை சேர்த்து அதற்கு ஈமக்கிரியைகளை முடித்தார்.

சண்டாளனுக்கு சம்ஸ்காரம் செய்த நல்லானை அங்கிருந்த உயர் ஜாதிகள் எல்லோரும் நிந்தித்தார்கள். ஆனால் சகல வரங்களையும் கொடுக்கும் வரதராஜன், "நன்று செய்தாய் நல்லான். இந்த நாடே நல்ல நாடு. அதில் நீ மிகவும் நல்லவன்" என்று வாழ்த்தினார். "பெருமாளே! சண்டாளனுக்கு ஈமக்கிரியை செய்தான். இவன் நல்ல வனல்ல" என்றார்கள் தலத்தார். "அவன் நாட்டிற்குப் பொல்லான் நமக்கு நல்லான்" என்று பெருமாள் சாதித் தருளினார். அன்றிலிருந்து திருமலை நல்லான் சக்கர வர்த்திக்கு நல்லான் என்று சிறப்புப் பெயர் உலாவலாயிற்று. அப்பேர்ப்பட்ட மனப்பக்குவம் முதிர்ந்த நல்லான், நாடு தோறும் ஸ்ரீ வைஷ்ணவ பிரசாரம் செய்து ஜாதிமதம் பாராது பலரையும் வைணவப் பெரு சமூகத்தில் சேர்த்தார். அப்படிச் சேர்க்கப்பட்டவர்களில் நீலகிரி வேடர்களும் ஒரு கூட்டத்தார்.

எம்பெருமானாருடைய பிரபாவத்தை நல்லான் சொல்லக் கேட்டு அவரைப் பார்க்க ஆசையுள்ளவர்களா யிருந்த அந்த வேடர்கள் குடிசைக் கூட்டத்தை நோக்கி ஸ்ரீவைஷ்ணவப் பிராம்மணர் ஒருவர் எம்பெருமானாரைத் தேடிக்கொண்டு வந்தார். அவருடைய திருநாமத்திலிருந்து அவரை ஸ்ரீவைஷ்ணவரென்று புரிந்துகொண்ட வேடர்

கள், "ஸ்வாமி எங்கிருந்து வருகிறீர்?" என்று கேட்டான் வேட முதலிகளில் ஒருவன்.

"ஸ்ரீரங்கத்திலிருந்து வருகிறேன்" என்றார் அந்தப் பிராம்மணர்.

"அங்கு எம்பெருமானாருக்கு ஒரு குறையுமில்லையே, பெரிய பெருமாள் திருச்செல்வத்துக்கு ஒரு குறையு மில்லையே?" என்று வேடர்கள் வினவினர்.

அந்தப் பிராம்மணோத்தமரும், "என்ன பெரிய பெருமாள், என்ன திருச்செல்வம்! எம்பெருமானார் சோழ விரோதமென்ற வியாஜத்தாலே வெண்ணிற ஆடை பூண்டு ஸ்ரீரங்கத்தைவிட்டுச் சென்றுவிட்டார்" என்று அலுத்துக் கூறினார். "அவரைத் தேடிக்கொண்டு தான் நானும் திரிகின்றேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

இதைக் கேட்ட வேடர்கள் வியாகூலம் அதிகமாயிற்று. அன்று முதல் அவர்கள் எம்பெருமானார் நலனுக்காகவும், அவரைத் தங்களிடம் கொண்டு சேர்க்க எம்பெரு மானுடைய கடாட்சத்திற்காகவும் உபவாசம் மேற் கொண்டார்கள்! ஆறுநாட்கள் அந்த வேடர் சேரியே உப வாசமிருந்தது. உபவாசத்தின் பலன் ஏழாம் நாளிரவு கிடைத்தது வேடர்களுக்கு. அந்த வேடர் குடிசைக் வட்டத் தின் விளக்குதான் உடையவரைத் தாங்கி வந்த அடியார் கூட்டத்துக்குத் தெரிந்தது.

மழையால் நனைந்த உடைகளுடனும், குலைநடுக்கம் எடுக்கும் குளிருடனும் உடையவரைத் தூக்கிக்கொண்டு வந்த சீடர்கூட்டம் அந்த வேடர் சேரிக்கு வந்தது. அதிக இருளில் வழி தெரியாததால் சீடர்களில் ஒருவர், "பிள்ளை காள் வழி எது?" என்று குரல் கொடுக்க அந்த வேடர்களும் பிராம்மணர் குரலாயிருக்கிறது என்று சொல்லி ஓடி வந்து தங்கள் சேரியின் தடுப்பு வேலியைத் திறந்து உள்ளே அழைக்க, உடையவரைத் தூக்கிக்கொண்டு அடியார்குழாம்

உள்ளே நுழைந்தது. அங்கு வேடர்கள் அவர்களுக்கு வேறு உடைகள் கொடுத்து ஈர உடைகளைக் களைந்து உலர்த்தச் சொல்லி தீமூட்டிக் குளிர்காயச் சொன்னார்கள். அவர்கள் சிறிது சிரம பரிகாரம் செய்துகொண்டதும் "எங்கு நின்றும் எழுந்தருளியிருக்கிறீர்கள்?" என்று வேட முதலிகள் கேட்க, "கோயிலில் நின்றும் வருகிறோம்" என்று அடியார்கள் பதில் சொல்ல வேடர்கள், "எம்பெருமானார் செய்கிற தென்?" என்று எம்பெருமானாரின் நலனைப் பற்றிக் கேட்டார்கள்.

இதைக் கேட்டு பிரமித்த சிஷ்ய கோஷ்டியிலொருவர் "எம்பெருமானாரைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

வேடர்கள் தலைவன் இப்படிப் பதில் சொன்னார். "நாங்கள் நல்லான் அடிமைகள். அவர் எங்களுக்கு உப தேசம் செய்தபோது நமக்கெல்லாம் பரமாசார்யர் திரு வரங்கத்திலிருக்கும் எம்பெருமானார். ஆகையால் எம் பெருமானார் திருவடிகளே சரணம் என்று இருங்கள் என்று கூறினார். அதன்படி இருந்து வருகிறோம்" என்று கூறினார்கள்.

"அப்படியானால் இவர்தான் எம்பெருமானார்" என்று சீடர்கள் காட்ட, வேடர்கள் அவர் திருவடிகளில் விழுந்து திருவடிகளைப் பிடித்துக்கொண்டார்கள். பிறகு தேனும் தினையும் கொண்டுவந்து கொடுத்து, 'இதை அமுது செய்ய வேணும்" என்று சீடர்களை வேண்ட அவர்களும் அமுது செய்து அன்று கண்வளர்ந்தருளி னார்கள்.

மறுநாள் பொழுது விடிந்ததும் வேடர்கள் மலைக்கு மேலே உடையவரையும் கோஷ்டியையும் அழைத்துக் கொண்டுபோய் ஒரு வேடர் தலைவனிடம் விட, அவன் "பிராமணர் பட்டினியிருக்க நாம் உண்ணலாகாது," என்று

நினைத்து அருகே ஒரு கிராமத்திலே வசித்து வந்த கட்டளைவாரியென்ற பிராம்மணன் இல்லத்துக்கு அனுப்பி அவர்கள் ததியாராதனைக்கு வேண்டிய பொருள் களையும் கொடுத்தனுப்பினான்.

அப்பொழுது அந்தப் பிராம்மணன் இல்லத்தில் இல்லை. அவன் மனைவி இருந்தாள். அவள் அவர்களை வரவேற்று, "அமுது செய்யவேண்டும்" என்று விண்ணப்பம் செய்ய அவள் யாரோ என்னவோவென்று "வேண்டாம்" என்று சீடர்கள் கூறிவிட்டனர். அவள் அந்தச் சீடர்களுக்கு ஓர் அதிர் வெடியை எடுத்து வீசினாள். "ஸ்வாமிகளே! உங்களுக்கு இங்கு அமுது செய்வதில் சந்தேகம் ஏதும் வேண்டாம். அடியாளும் எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை உடையேன்" என்றாள்.

இதைக் கேட்ட உடையவர் ஸ்ரீபாதத்து முதலிகளில் ஒருவர் (சீடர்களில் ஒருவர்) "நீ எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தது எப்படி? எப்போது?" என்று கேட்டார்.

அந்த அந்தணப் பெருமாட்டி அந்தப் பழைய நிகழ்ச்சியைச் சொன்னாள். "இங்கு ஒருசமயம் மழை யில்லாமல் பஞ்சம் வந்தது. ஆகவே நானும் எனது கணவரும் ஸ்ரீரங்கம் சென்று வசித்து வந்தோம். அங்கு எம் பெருமானார் தினம் வீதிகளில் மதுகரம் பண்ண (பிக்ஷை எடுக்க) வருவார். அவர் அடியில் பிரபுக்களும் வித்வான் களும் விழுந்து வணங்குவார்கள். மச்சில் குடியிருந்த நான் ஒரு நாள் மச்சு விட்டிறங்கி எம்பெருமானார் வந்ததும் அவர் திருவடிகளில் தண்டனிட்டு, "ஸ்வாமி! நீரோ பிக்ஷை எடுக்கிறீர். மகாராஜாக்களும், பிரபுக்களும் உமது திரு வடிகளில் விழுந்து வணங்குகிறார்கள். இது எதனால்?" என்று கேட்டேன்.

எம்பெருமானார் மெல்லப் புன்முறுவல்கொண்டு, "நாம் அவர்களுக்குப் பகவத் விஷயத்தில் சில வார்த்தை களைச் சொன்னோம்" என்றார்.

"அந்த வார்த்தைகளை அடியவளுக்கும் அருளக் கூடாதா?" என்று கேட்டேன்.

அவரும் மனமுவந்து என் காதில் அந்த மகா மந்திரத்தை ஓதினார். அப்பொழுது இன்னொரு வரம் கேட்டேன். "ஸ்வாமி! நாங்கள் ஊர் திரும்புகிறோம். தேவரீர் நினைவுச் சின்னமாக எதையாவது கொடுத்தருள வேணும்"என்று கேட்டேன்.

எம்பெருமானார் கருணையை என்னவென்று சொல்லுவேன்? தாம் தரித்திருந்த திருவடி ஜோடைக் கழற்றி "இதை எடுத்துப்போ" என்று பணித்தார். நான் புறப்படு முன்பு மீண்டும் ஒரு முறை த்வயத்தை நெஞ்சிலே நிலைக்கும்படி உபதேசித்தார். அந்த உபதேசத்துடனும் அவருடைய ஸ்ரீபாதுகைகளுடனும் இங்கு வந்து சேர்ந் தோம் நானும் எனது கணவரும். பிறகு இங்கு மழைக்குக் குறைவில்லை. வாழ்வும் வளம் பெற்றது. சுகமாக இருக் கிறோம். ஆகவே நீங்கள் இங்கு அமுது செய்யலாம்" என்றாள்.

அவளை போஜனம் தயாரிக்கச் சொன்ன உடையவர் அவள் சென்றபின் அவள் உணவு தயாரிப்பதையும் பார்க்கச் சொன்னார். அந்த அந்தண மாதும் உள்ளே சென்று பழைய புடவையை அவிழ்த்து சுத்தமாகப் புதுப் புடவை தரித்து சமையலறை சென்று, "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று கூறி, தளிகை பண்ணிக் கதவைச் சாத்திக்கொண்டு எம்பெருமானார் திருவடி சோடுகளை அலம்பி அதற்கு அமுது செய்யலா.ம்" என்றாள்.

நடந்ததை வேவுகார அடியார் சொல்ல, எம் பெருமானார் அந்த ஸ்திரீயைக் கேட்டார், "உள்ளே கதவைச் சாத்தி என்ன செய்தாய்?" என்று.

"எம்பெருமானார் ஸ்ரீ பாதுகைகளைச் சோதித்து அவற்றுக்கு அமுது கண்டருளப் பண்ணினேன்" என்றாள் அவள்.

"அவற்றைக் காட்டு" என்றார் எம்பெருமானார்.

அவளும் அதைக்கொண்டு வந்து காட்ட தமது பாதுகைகளுடன் அவை ஒத்திருந்ததைக் கண்டார் இராமானுஜர். "இராமானுஜரிடம் நீ உபதேசம் பெற்றது உண்மையாகில் எங்களில் யாராவது இராமானுஜர் போலிருக்கிறாரா?" என்று சீடர் கேட்டார்.

அப்பொழுது அஸ்தமனமாகி விட்டதால் திருவிளக் கொன்றை ஏற்றிவந்த அந்த அடியாள், ஒவ்வொருவராகப் பார்த்துக்கொண்டு வந்து ஸ்ரீராமானுஜர் முன்பு வந்ததும் நின்று ஊன்றிக் கவனித்தாள். அடுத்து அவர் காலடியில் விழுந்து, "எம்பெருமானே! இப்படியும் அடியவளை சோதிக்கலாமோ" என்று புலம்பினாள்.

அவளைத் தேற்றிய உடையவர் தமது கோஷ்டியுடன் அங்கேயே உணவருந்தினார். அந்த அடியவளின் வேண்டு கோளுக்கிணங்க அவள் பர்த்தாவையும் தமது அடியார் குழாத்தில் சேர்த்துக்கொண்டு அன்று அங்கேயே தங்கினார். அங்கு திரிதண்ட காஷாயாதிகளைத் தயாரிக்கச் சொல்லி, அவற்றைத் தமது ஆராதனப் பெருமாளான தேவப் பெருமாள் விக்ரகத்தின் முன்பு சமர்ப்பித்து அடி பணிந்து காஷாய திரிதண்டங்களுடன் பழைய எம்பெரு மானாராகித் தமது பயணத்தை மேலும் துவக்கலானார்.





# 41. உடையவர் இருக்க பயமேன்?

ஸ்ரீராமானுஜ பாதுகையே சகல புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லது என்ற அசையாத நினைப்புடன் இருந்த பெருமாட்டியையும், அவளுக்காக அவள் கணவனையும் ஸ்ரீ வைஷ்ணவ சமுதாயத்தில் சேர்த்துக் கொண்டு அவர்கள் கிருகத்தில் சில நாட்கள் வசித்த உடையவர், பழையபடி திரிதண்ட காஷாயதிகளைத் தரித்துக்கொண்டு அங்கிருந்து தமது கோஷ்டியுடன் மேலும் மேல்திசையை நோக்கிச் சென்றார். மைசூருக்கு மேற்கே 40 மைல் தூரத்திலுள்ள வன்னி புஷ்கரிணி கிராமத்தை அடைந்து அங்குள்ளவர்களையும் ஆட் கொண்டார். அங்கிருந்தும் கிளம்பி ஸ்ரீஸாளக் கிராமம் (மைசூருக்கு மேற்கே 30 மைல் தூரத்திலிருக்கிறது) என்ற ஊரை அடைந்து அங்கு மகாபக்திமானான வடுக நம்பியைச் சந்தித்தார். பிறகு சிங்கபுரி (நரசிம்மபுரம்) என்ற ஊரில் சில நாட்கள் வசித்து வடுகநம்பிக்கு ஸ்ரீவைஷ்ணவ தர்சன மார்க்கத்தை உபதேசித்தார். அங்கு தங்கிய காலத்திலும் அவர் மனம் ஸ்ரீரங்கத்திலும் ஆழ்வானும் பெரிய நம்பியும் என்ன ஆனார்களோ என்ற கிலேசத்திலும் இருந்தது. மகான்கள் கிலேசம் எத்தனை விபரீதத்தில் கொண்டுவரும் என்பதை அயோக்கியனான சோழன்

உணர்ந்து கொள்ளும்படியாகப் பெரும் வியாதி அவனைப் பிடித்துக் கொண்டது. பகவானுடைய அடியாட்களை இம்சித்தது, தில்லை கோவிந்தராஜப் பெருமாளை எடுத்துக் கடலில் போட்டது, ஆழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் இழைத்த கொடுமை. அனைத்தும் அவன் மீதே திரும்பியது. எந்தக் குரலை மன்னன் ஸ்ரீவைஷ்ணவ அடியார்களுக்கு எதிராக உபயோகித்தானோ, அந்தக் குரல்வளையை, இத்தனை பாவங்களுக்கும் தண்டனையாகத் தீரா வியாதி யொன்று பிடித்தது. தொண்டையில் பிடித்த வியாதி வெளியிலும் துளைத்துவர கிருமிகள் கழுத்து மூலம் வந்து உடலில் உலாவத் தொடங்கின. அதன் விளைவாக கிருமி கண்டன் (புழுக்கழுத்தன்) என்ற சிறப்புப் பெயரை அந்தச் சோழன் வரலாற்றிலேயே பெற்றான்.

ஆழ்வான், ஆசார்யன் காஷாயத்தை அணிந்து கொண்டு ராமானுஜனாக சோழ வீரர்களுடன் சென்ற பிறகு என்ன நடந்தது என்பதை அறியாத உடையவர் மிகவும் மனக்கிலேசத்துடனிருந்தபடியால் தமது சீடர் களான மாருதி என்பவரையும் அம்மங்கி என்பவரையும் நடந்ததை அறிந்து வருமாறு ஸ்ரீரங்கம் அனுப்பிவைத்தார். பிறகு உடையவர் சிங்கபுரியிலிருந்து கிளம்பி தொண்டனூர் என்ற நகரத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்த உடையவர் சீடரான தொண்டனூர் நம்பி உடையவர் கோஷ்டியை மிகுந்த பக்தியுடன் எதிர்கொண்டு தமது கிருகத்துக்கு அழைத்துச் சென்றார்.

தொண்டனூர் நம்பியின் இல்லம் விதுரன் குடிசை போலிருந்தது. நம்பி தனித்து ஏழை வாழ்க்கை வாழ்ந்து வந்தார். ஸ்ரீராமானுஜர் கோஷ்டியைப் போன்ற ஒரு கூட்டத்தை சமாளிக்கமுடியாத நிலையில் இருந்தார். அவர் நிலையைக் கண்ட ஸ்ரீராமானுஜர் தமது திருவடிகளை ஆராதித்து வந்த தம்பதிகளுக்குச் சொல்லி அனுப்ப, அந்த தம்பதிகள் துரிதமாகத் தொண்டனூர் வந்து ஆயிரம்

பொற் காசுகளை உடையவர் திருவடியில் சமர்ப்பித்து ஆசி பெற்றுப் போனார்கள். அந்தத் திரவியத்தைக் கொண்டு ஸ்ரீராமானுஜ கோஷ்டியின் நித்யததீயாராதன காலட்சேபாதிசயங்கள் நடந்துகொண்டிருந்தன.

தொண்டனூர் என்பது ஹொய்சாள வல்லாள மன்னர்களின் பிரதான நகரங்களில் ஒன்று. இந்தத் தொண்டனூர் இப்பொழுது தொண்ணூர் என்று அழைக்கப்படுகிறது. மைசூருக்கு வடக்கே 16 மைல் தூரத்திலிருக்கிறது. இதை ஆண்ட ஹொய்சாள வல்லாள மன்னர்கள் சமண மதத்தைச் சேர்ந்தவர்கள்.

ஸ்ரீராமானுஜர் தொண்டனூர் வந்த சமயத்தில் அதை விட்டல தேவராயன் என்ற வல்லாள மன்னன் ஆண்டு வந்தான். அவனுடைய தொண்டனூர் அரண்மனையில் எப்பொழுதும் சோகம் குடிகொண்டிருந்தது. தொண்டனூர் நம்பி அரண்மனைக்குச் சென்றபோது அதில் பெரும் துக்கம் நிலவியிருப்பதையும், யார் முகத்திலும் சிரிப்பு வராததையும் கவனித்து ராணியிடம் அதன் காரணத்தை வினவினார்.

ராணி சாந்தலதேவியின் கண்களில் நீர் சுரந்தது. "நம்பி! இந்த அரண்மனை நிலவரம் தெரியாதா உமக்கு?" என்று வினவினாள் துயரம் நிரம்பிய குரலில்.

"தெரியாது, மகாராணி" என்றார் நம்பி.

"என் மகளை பிசாசு பிடித்திருக்கிறது. எப்பொழுதும் ஆடைகளைக் களைந்தெறிந்து நிர்வாணமாக ஓடுகிறாள். எங்கள் சமண குருக்களால் எதுவும் செய்ய முடியவில்லை" என்று சொன்னாள்.

"மகாராணி! இதை ஏன் என்னிடம் முன்னமே சொல்லவில்லை? நல்லவேளை இப்பொழுதாவது சொன்னீர்களே" என்றார் நம்பி.

"இப்பொழுது நீங்கள் என்ன செய்யமுடியும்?" என்று ராணி கேட்டாள்.

"உங்களுக்கு நல்லகாலம் திரும்பிவிட்டது. நல்ல வேளை ஸ்ரீராமானுஜர் இங்கிருக்கிறார். உடையவர் இருக்க பயம் ஏன்? அவர் த்ருஷ்டிபட்டால் உங்கள் மகளை ஆவேசித்திருக்கும் பிசாசு பறந்துவிடும்" என்றார் நம்பி.

இந்த உரையாடலைக் கேட்டுக்கொண்டு வந்த மன்னன் விட்டல தேவன், "அப்படி என் மகளின் பிசாசை ஓட்டி விட்டால் நான் ஸ்ரீராமானுஜரின் சீடனாகி விடுகிறேன்' என்று கூறினான். இருப்பினும் நீண்டகால அனுபவத்தால் அவன் குரலில் நம்பிக்கை ஒலிக்கவில்லை.

அதை உணர்ந்த நம்பி சொன்னார், "மன்னவா! இந்தப் பிசாசை ஓட்டுவது எனது குருநாதருக்கு ஒரு பிரமாதமல்ல. காஞ்சி மன்னன் மகளைப் பிடித்திருந்த பிரும்ம ரக்ஷஸே உடையவரைக் கண்டதும் அவர் திருவடிகளில் வணங்கி ஓடிவிட்டது" என்று.

மன்னனும் ஸ்ரீராமானுஜரை அழைத்துவர நம்பியிடம் விண்ணப்பித்துக்கொண்டான். உடையவரை அழைத்து வர உறுதிகூறி நம்பியும் தமது இல்லம் சென்றார். நம்பி யிடம் விண்ணப்பித்ததோடு வாளா விருக்கவில்லை வல்லாள விட்டலதேவன். தனது சமண குருமார்களுக்கும் விருந்துக்கு அழைப்புவிடுத்தான். இதற்கு அரசி ஆட் சேபித்தாள். "நேர் எதிர் போக்குள்ள இருமத குருமார் களையும் அழைப்பது தவறு. தவிர உங்கள் குருமார்கள் வர மாட்டார்கள். நீங்கள் ஒரு விரலை இழந்திருப்ப தால் உங்களை அங்கஹீனனென்றும் உங்களுடன் உண வருந்துவது பாவமென்றும் நினைக்கிறார்கள்" என்று சொன்னாள்.

டில்லி பாதுஷாவுடன் ஏற்பட்ட ஒரு விவகாரத்தில் பாதுஷா விட்டல தேவனைச் சிறைசெய்து டில்லி

கொண்டு போய் ஒரு விரலை மாத்திரம் வெட்டி அவமானப்படுத்தி அனுப்பினான். அதனால் அவனுக்குப் பிட்டி தேவன் (விரலிழந்த மகாராஜா) என்ற பெயர் நிலவலாயிற்று. அதன் பிறகு சமண குருமார்கள் அவனிடமிருந்து விலகி நின்றார்கள். இருப்பினும் அவர்களைத் திரும்ப அழைக்க இதை ஒரு சந்தர்ப்பமாக வைத்து விருந்து ஓலையொன்றும் மன்னன் அனுப்பினான்.

ஆனால் அன்றிரவு சமண குருக்களில் ஒருவர் கூட அரண்மனைக்கு வரவில்லை. ஸ்ரீராமானுஜர் மட்டும் தமது ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியுடன் வந்தார். விட்டல தேவனும் ராணியும் உடையவர் திருவடிகளைப் பிடித்துக் கொண்டனர். அவர்கள் கைகளின் பிடிப்பிலிருந்தே அவர்கள் மன வேதனையைப் புரிந்து கொண்ட உடையவர் உள்ளே சென்று மன்னன் சித்தம் செய்திருந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

அப்பொழுது அந்த நிகழ்ச்சி நடந்தது. "வீல்" என்ற கூச்சலுடன் அரசகுமாரி நிர்வாணமாகக் கூடத்துக்குள் ஓடிவந்தாள். ஸ்ரீராமானுஜர் தமது சீடர்களில் ஒருவரைத் திரும்பிப் பார்த்தார். அந்த சீடரும் தயாராகக் கொணர்ந்திருந்த கமண்டலத்திலிருந்து உடையவரின் ஸ்ரீபாத தீர்த்தத்தை எடுத்து அரசகுமாரி மீது தெளித்தார். அரச குமாரியின் உடல் ஒருமுறை நடுங்கியது. பிறகு அவள் ஒரு விநாடி சுற்று முற்றும் மிரள மிரளப் பார்த்தாள். பிறகு தனது நிலையைக் கவனிக்க அவள் முகத்தில் வெட்க வெள்ளம் கரைபுரண்டது. அடுத்த விநாடி உள்ளே ஓடி விட்ட அரசகுமாரி சிறிது நேரத்திற்கெல்லாம் அரசகுமாரி அணியவேண்டிய ஆடைகளை அணிந்து சகல மங்களச் சிலையாய்க் கூடத்துக்கு வந்து உடையவர் திருவடிகளில் விழுந்து வணங்கினாள்.

இத்தகைய திடீர் மாறுதலை அறவே எதிர்பார்க்காத மன்னன் அந்த இடத்திலேயே உடையவர் திருவடிகளில்

ராணியுடன் விழுந்து தங்களைச் சீடர்களாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். உடையவரும் அவனை ஏற்றுக் கொண்டு அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்ற சிறப்புப் பெயரையும் சூட்டினார்.

விஷ்ணுவர்த்தனனும், அவனைச் சேர்ந்தவர்களும் ஸ்ரீ வைஷ்ணவ தாஸர்களாகி எங்கும் ஸ்ரீராமானுஜ மதத்தைப் பரப்ப உறுதி கொண்டனர்.

ஆனால் ஸ்ரீ ராமானுஜர் வெற்றி மன்னன் உடன் பாட்டுடன் முடியவில்லை. வேறொரு புயலும் அவருக்கு எதிராகக் கிளம்பியது.





# 42. உத்ஸவரைத் தேடி

**வி**ட்டல தேவராயனை ஸ்ரீ வைஷ்ணவனாக்கி அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்ற சிறப்புப் பெயர் நல்கியதோடு விவகாரம் முடியவில்லை. விட்டல தேவனின் சமண குருமார்கள். ஸ்ரீராமானுஜரால் தங்கள் மதத்துக்கும் தங்கள் செல்வாக்குக்கும் தாழ்வு ஏற்பட்டதை சகிக்கச் சித்தமாயில்லை. அவர்கள் அனைவரும் கூடி யோசித்து உடையவரை வாதம் செய்ய அழைக்கத் தீர்மானித்து அதற்காகத் தூதும் விடுத்தார்கள். "எங்கள் மன்னனை வெற்றி கொண்டு அவனை மதமாற்றம் செய்துவிட்டதால் பெருமை கொண்டு பயனில்லை. எங்களுடன் தர்க்கம் செய்து எங்களையும் வெற்றி கொண்டாலொழிய உமது கட்சி வெற்றி பெற்றது ஆகாது. ஆகவே வாதத்துக்கு வாருங்கள்" என்று செய்தி அனுப்பினார்கள்.

வாதத்துக்கு வருபவர்கள் எத்தனை பேர் என்று ஸ்ரீராமானுஜர் விசாரித்தார். 12000 பேர்கள் என்று பதில் வந்தது. வந்த தூதருக்குப் பதில் சொன்னார் உடையவர். "உங்கள் ஒருவொருவருடனும் வாதம் செய்வதானால் வாதம் முடிய பல வருஷங்களாகும். ஆகவே நீங்கள் மொத்தமாக வாருங்கள்" என்று. அதற்காக ஒரு நாளைக் குறிப்பிட்டு ஒரு பெரிய மண்டபத்தில் சமணர்களைக்

கூட்டினார். பிறகு ஒரு திரைக்குப் பின் சென்றார். சிறிது நேரத்திற்குப் பின், "உம் கேள்விகளைத் தொடுக்கலாம்." என்று திரைமறைவிலிருந்து உத்தரவு வந்தது. மண்டபத்தின் மூலை முடுக்குகளிலிருந்த பல சமணர்கள் ஒரே சமயத்தில் கேள்விகளை வீசினார்கள். திரைக்குள் சென்றதும் ஆதிசேஷனாக மாறிவிட்ட ஸ்ரீராமானுஜர் தமது ஆயிரம் நாக்குகளால் ஒரே சமயத்தில் பதில் சொன்னார். கேள்விகள் முடிவதற்கு முன்னமே பதில்கள் வந்ததை சமணர்கள் கவனித்துப் பிரமித்தார்கள். பதில்கள் உக்கிரமாகவும் உஷ்ணமாகவும் வருவதையும் இடையிடையே பாம்பு சீறுவதைப் போன்ற மூச்சு வருவதையும் கவனித்த சமணர்கள் அச்சமும் கொண்டார்கள். இருப்பினும் கேள்விகளும் பதில்களும் சரமாரியாகத் தொடர்ந்தன. ஏதும் கேட்பதற்கில்லாத நிலை ஏற்படவே சமணர்கள் மௌனம் சாதித்தார்கள். திரைக்குள்ளிருந்து உத்தரவிட்டார் ஸ்ரீராமானுஜர். "உங்கள் கேள்விகள் முடிந்துவிட்டால் அமைதியாக இல்லம் செல்லுங்கள். விருப்பமுள்ளவர்கள் சாந்தியையும் முக்தியையும் அளிக்கும் ஸ்ரீவைஷ்ணவ மதத்தைத் தழுவுங்கள். இந்த ராஜ்யத்தில் இனி வேறு மதங்களுக்கு இடமில்லை" என்று கூறினார். இந்த உத்தரவின் விளைவாக சமணர்களில் பெரும்பாலோர் ஸ்ரீவைஷ்ணவர்களாகி விடவே, விஷ்ணுவர்த்தன மகாராஜாவும் மன நிறைவுடனும் நிம்மதியுடனும் காலம் கழித்தான். உடையவரும் சிங்கர் கோயிலுக்கு எழுந்தருளி வேதாந்த விசாரம் செய்து கால க்ஷேபாதிகளில் ஈடுபட்டார்.

இப்படியிருக்கும் ஒரு நாளில் தம்மிடமிருந்த திருமண் செலவழிந்து மிகவும் குறைந்துவிட்டதைக் கவனித்து கிலேசப்பட்டு வருத்தத்துடன் அன்றிரவு சயனித்தார். அப்பொழுது பெருமாள் அவர் சொப்பனத்தில் வந்து "யது கிரியிலே உம்மை எதிர்பார்த்து நிற்கிறோம். இங்கு

திருமண் நிரம்ப உண்டு. சீக்கிரம் புறப்பட்டு வாரும்" என்று அழைக்க மறுநாள் காலையே இதைப்பற்றி ஸ்ரீராமானுஜர் தமது சீடர்களுடன் கலந்தார். எள்ளுக்கு முன் எண்ணெய் என்று நிற்பாரைப்போல யதுகிரிக்கு விரைய சீடர்கள் சித்தமானார்கள். மன்னனும் இதுகேட்டு யதுகிரி காட்டை சீர்திருத்த தனது படைகளை அனுப்பி னான். ஸ்ரீராமானுஜரும் மன்னனிடம் விடைகொண்டு யதுகிரிக்குப் புறப்பட்டார்.

யதுகிரியை அடைந்ததும் அங்கிருந்த வேதஸரஸில் நீராடி நித்ய அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு மலையிலேறி அங்கிருந்த புதர்களிலெல்லாம் திருமண் குவியலைத் தேடினார். நாள் பூராவும் ஓய்வின்றித் தேடியும் பெருமாள் சொப்பனத்தில் சொன்னபடி திருமண் குவியல் கிடைக்காது போகவே சிந்தாக்கிராந்தராய் மனம் உடைந்து உறங்கினார். அப்பொழுது சொப்பனத்தில் மீண்டும் தோன்றிய பெருமாள், "பொருள் இல்லாத இடத்தில் தேடி அலுத்து விட்டீர். நாளைக் காலையில் கல்யாணி புஷ்கரிணிக்கு தென் மேற்கே செண்பகமரம் இருக்கிறது அதற்கருகே வந்தால் கப்புங்கிளையுமாய் பெரிதாயிருக்கிற திருத்துழாய் மரமிருக்கிறது. அங்குள்ள புற்றின் கீழே நாமி ருக்கிறோம். உமக்கு வழிகாட்ட இங்கிருந்து திருத்துழாய் செடிகளின் காய்ந்த சுள்ளிகளை உடைத்து வைக்கிறோம். அந்த வழியைப் பற்றி வாரும். கல்யாணிஸரஸின் வட மேலை மூலையிலே திருமண் புற்றும் நிரம்ப இருக்கிறது" என்று கூறி மறைந்துவிட மறுநாள் உடையவர் விடியற் காலை எழுந்து நீராடி பெருமாள் காட்டிய வழியில் நடந்து சென்றார். கும்பலாக இருந்த செண்பக மரக்கூட்டத்தை உடைந்த திருத்துழாய்க் கிளைகளைப் பற்றி நடந்து எய்தினார். அந்த மரக்கூட்டத்தின் அருகே கப்புங்கிளை யுமாக திருத்துழாய் செடியும் மரம் போல நின்றது. அதன் அடியிலிருந்த புற்றிலிருந்து ஜோதியொன்று கிளம்பியதைப்

பார்த்த ஸ்ரீராமானுஜர் அப்படியே அந்த ஜோதியைப் பார்த்து நின்றார். மனத்தில் பெருமாளைத் தியானம் பண்ணினார். பிறகு புற்றை லேசாகத் தம் கையால் கலைக்க பொற்கோயில் சிகரம்தெரிந்தது. பிறகு திருநாராயணனும் தோன்றினார். இதைக் கண்டதும் மன்னனுக்கு ஸ்ரீராமானு ஜர் செய்தி விடுக்க, விஷ்ணுவர்த்தனனும் வந்து அந்த அற்புதத்தைக் கண்டான். வெகு சீக்கிரம் அரசன் ஆணை யால் ஒரு கோயிலும் அங்கு எழுந்தது. அங்கு திருநாரா யணப் பெருமாளைத் தமது கைகளாலேயே பாஞ்சராத்ர ஸத்வ ஸம்ஹிதைப்படி பிரதிஷ்டை செய்து பெருமாள் கைங்கர்யத்துக்கு ரங்கராஜபட்டர் என்பவரை நியமித்தார். பெருமாள் காட்டிய இடத்திலிருந்து திருமண்ணையும் யதேஷ்டமாகத் திரட்டிக் கொண்டார்.

இத்தனைக்கும் உடையவர் மனத்தில் பூர்ணசந்துஷ்டி யில்லை. சந்நிதிக்கு ஓர் உற்சவமூர்த்தி இல்லையே என்று ஏங்கினார். இந்தக் கவலையைப் போக்கவும் திருநாரா யணர் கைகொடுத்தார். உடையவர் சொப்பனத்தில் மீண்டும் தோன்றி, "எனது உத்ஸவ விக்ரகம் ராமப்பிரியர் டில்லி பாதுஷாவின் அரண்மனையில் இருக்கிறார். அங்கு போய் அவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வாரும்" என்று நியமிக்க மறுநாளே ஸ்ரீராமானுஜர் டில்லி நோக்கிப் பயணமானார்.





## 43. ஜனானாவில் ராமப்ரியர்

உற்சவமூர்த்தியான ராமப்பிரியரைக் கொண்டுவர டில்லி நோக்கிப் பயணப்பட்ட ஸ்ரீராமானுஜரை விஷ்ணு வர்த்தன மகாராஜா, அங்கு செல்லத்தகுந்த காவல் வேண்டு மென்று வற்புறுத்த "நாராயணனைவிடச் சிறந்த காவல் எதற்கு?" என்று தமது பரிஜனங்களையும் சில பாகவதர் களையும் அழைத்துக்கொண்டு டில்லிக்குப் பயணமானார். ராமப்பிரியரைக் காண உள்ளம் துடித்ததால் எங்கும் நிற்காமலும் நிதானிக்காமலும் வெகுவேகமாக டில்லியை அடைந்து அதன் வெளிப்புறத்தே தங்கி, தாம் வந்திருக்கும் விஷயத்தை டில்லி சுல்தானுக்குச் சொல்லியனுப்பினார். அவனும் அவரைத் தமது அரண்மனைக்கு வரவழைத்து அவரது தெய்வீகக் களையால் கவரப்பட்டு. "உமக்கு என்ன வேண்டும்?" என்று விசாரிக்க, "எங்கள் எம்பெருமான் ராமப்பிரியர் தங்களிடம் இருக்கிறார், அவரைத் தந்தருள வேண்டும்" என்று கேட்டு அவனுக்கு ஆசி வசனங்களையும் சொன்னார். அவருடைய சிவந்த திடமான நெடிய மேனி யாலும், அருள்பாலிக்கும் விசாலமான பார்வையாலும். பன்னிரெண்டு திருநாமங்களால் ஜொலித்த சரீரப் பிரகாசத் தாலும் கவரப்பட்ட சுல்தானும் "நாம் கொண்டு வந்திருக் கும் விக்ரகங்களினைக் காலையில் நீரே பார்த்து உமக்கு

வேண்டியதை எடுத்துக்கொள்ளும்" என்று அனுமதி கொடுத்துத் தனது மந்திரிகளிலொருவரையும் விக்ரக சாலையைத் திறந்துவிடுமாறு பணித்தான். சுல்தான் கொள்ளையடித்து வந்திருந்த ஏராளமான விக்ரகங்கள் கொண்ட கிடங்கைப் பார்த்து பிரமித்தார் ஸ்ரீராமானுஜர். இருப்பினும் மிகுந்த அக்கரையுடன் அன்று முழுவதும் அந்த சிலைகளில் ராமப்பிரியரைத் தேடிப் பார்த்து, திரு நாராயணப் பெருமாள் ஜாடை எந்த சிலைக்குமிராது போகவே மிகுந்த கிலேசத்துடன் அன்றிரவு தமது இருப் பிடம் வந்தார். "எம்பெருமான் நீ எங்கிருக்கிறாய்?" என்று ஏங்கி அன்று உபவாசத்துடன் கண்ணயர்ந்தார். அன்றிரவு சொப்பனத்தில் ராமப்பிரியர் எழுந்தருளி, "ராமானுஜா! நான் இல்லாத இடத்தில் தேடி என்ன பயன்? நான் இருப்பது சுல்தான் மகளின் ஜனானாவில் (அந்தப்புரத்தில்) அங்கு வா" என்று அருளிச் செய்து மறைந்தார்.

மறுநாள் விடியற்காலை ஸ்ரீராமானுஜர் மிகுந்த உற்சாகத்துடன் எழுந்து, காலைக்கடன்களை முடித்து, நீராடி, பன்னிரண்டு திருநாமங்களும் செவ்வனே சாத்திக் கொண்டு காஷாயதாரியாய் சுல்தான் சபாமண்டபம் சென்றார். யாருக்கும் மசியாத அந்த நவாபும் புன்முறுவலு டன் ஸ்ரீராமானுஜரை வரவேற்று, "பெரியவரே! நீர் தேடி வந்த சிலை கிடைத்ததா?" என்று கேட்டான்.

"மந்திரி காட்டிய விக்ரகக் கும்பலில் ராமப்பிரியர் இல்லை" என்றார் ஸ்ரீராமானுஜர்.

"அப்படியானால் வருந்துகிறேன். போய் வாரும்" என்றான் சுல்தான்.

"நவாப்! தயாளனே! தர்மசிந்தனை படைத்தவனே, என் ஆண்டவன் இருக்குமிடம் வேறு" என்றார் உடையவர்.

"எங்கிருந்தாலும் எடுத்துப்போம்" என்றான் நவாப்.

"அவனிருக்குமிடத்திற்குச் செல்ல தங்கள் உத்தரவு வேண்டும்" என்றார் உடையவர்.

"உத்தரவு கொடுத்து விட்டேன். போய்ப் பாரும்"

"தாங்களும் வரவேண்டும்."

"நான் எதற்கு?"

"எம்பெருமான் தங்கள் செல்வியின் ஜனானாவில் (அந்தப்புரத்தில்) இருக்கிறான்" என்றார் உடையவர் சிறிது சிந்தனையுடன்.

நவாப் அசந்து போனான். "என் பெண்ணின் அந்தப் புரத்திலா? அங்கிருப்பது எப்படித் தெரியும்?" என்று வினவினான்.

"பெருமாளே சொன்னார்" என்றார் ராமானுஜர்.

"எப்பொழுது சொன்னார்?" என்று சந்தேகத்துடன் கேட்டான் சுல்தான்.

"நேற்றிரவு சொப்பனத்தில் சொன்னார்" என்றார் உடையவர்.

"சொப்பனமா?" என்று நகைத்தான் சுல்தான். இருந் தாலும் வேடிக்கை பார்ப்போம் என்று எண்ணி, "வாரும் அந்தப்புரம் போவோம்" என்று ராமானுஜரையும் அழைத்துக் கொண்டு அந்தப்புரத்தை நாடிச் சென்றான். அங்கு அரசகுமாரி இல்லை. ஆனால் சுல்தான் அதை ஒரு சாக்காகக் காட்டவில்லை. "உமது பெருமாள் இருந்தால் அழைத்துப்போம்" என்றான் சிரித்துக் கொண்டே.

அடுத்த விநாடி அவன் சிரிப்பு உதடுகளில் உறைந்தது. எங்கோ ஜல்ஜல் என்ற சலங்கை சத்தம் கேட்டது. ராமப் பிரியன் அரசகுமாரியின் பஞ்சணையிலிருந்து இறங்கி அறைவாசலை நோக்கி நடந்து வந்தான். எப்படி வந்தார் ராமப்பிரியர் என்பதை குருபரம்பரை அழகாக வர்ணிப்ப

தால் அதையே இங்கு எழுதுகிறேன். "இட்ட சட்டையும், கட்டின சிறு சதங்கையும், இட்ட கஸ்தூரித் திருநாமமும், முடித்த மைவண்ண நறுங்குஞ்சியும், தன்முகத்து சுட்டி தூங்கத் தூங்க, ஸஜ்ஜையிலும் குதித்து, தன்னியலோசை சலன்சலனென்றிட என்கிறபடியே செம்பொஞ்சதங்கைகள் சலசலவென்று ஒலிக்க, அகிலமும் காணும்படி நவாப் இட்ட ஆசனத்தில் உட்கார்ந்திருந்த உடையவர் மடியில் வந்து அமர்ந்தார். உடையவரும் ஆனந்தக் கண்ணீர் அருவி யோட "என் செல்லப் பிள்ளையே" என்று ராமப்பிரியனை அணைத்துக்கொண்டார்.

நவாப் அசந்து நின்றான். சிலை இப்படி நடந்துவரும் என்று அவனால் நம்பமுடியவில்லை. இருப்பினும் உடைய வரின் அபிமானத்துக்கு இடங்கொடுத்து ராமப்பிரியரை எடுத்துப்போக அனுமதித்தான்.

தில்லி அரசன் அனுமதி பெற்று உடையவர் அவனை வாயார வாழ்த்தி அங்கு தாமதிப்பது உசிதமில்லையென்ற காரணத்தால் அந்த விநாடியிலேயே அரண்மனையிலிருந்து வெளியே வந்து, ராமப்பிரியரை அணைத்து தமது காஷாயத்தால் போர்த்தி மறைத்து எடுத்து வந்து, சிறிதும் தாமதம் செய்யாமல் மன்னன் கொடுத்த பல்லக்கில் பெரு மாளை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு திருநாராயண புரம் நோக்கி விரைந்தார். ஆனால் அவர் பயணம் அத்தனை சுலபத்தில் முடியவில்லை.

அந்தப்புரத்துக்குத் திரும்பிய அரசகுமாரி தனது ராமப்பிரியனைக் காணாமல் அவர் எங்கேயென்று விசாரிக்க, தனது தந்தை அவரை உடையவரிடம் கொடுத்து விட்டதைக் கேள்விப்பட்டு அவரைத் திரும்பிக் கொண்டு வரப் புரவியொன்றில் ஏறி வெகுவேகமாகப் பயணம் செய்தாள். அவள் ராமானுஜ கோஷ்டியை இரண்டாவது நாள் அணுகியதும், "பிரியா! என்னை விட்டு எப்படி

வந்தாய்?" என்று கூவிப் பல்லக்கை நெருங்கினாள். பெரு மாளிடத்தில் அரசகுமாரிக்கு இருந்த அன்பைக் கண்ட உடையவரும், "அம்மா! நீயும் ராமப்பிரியனுடன் வா" என்று பல்லக்கில் அவளையும் உட்கார வைத்தார். பல்லக்கு ஆட்கள் பல்லக்கைச் சுமந்து விரைந்தார்கள்.

பல்லக்குச் சிறிது தூரம் தான் சென்றிருக்கும். திடீரெனக் கனத்த பல்லக்கு மிக லேசாகி விட்டதை உணர்ந்த பல்லக்குத் தூக்கிகள் உடையவரிடம் அதைப் பற்றித் தெரிவிக்க உடையவர் பல்லக்குச் சீலையை நீக்கி உள்ளே பார்த்தார். அரசகுமாரி காணவில்லை. அதனால் சிந்தனையை ஓட்டிய உடையவர் அரச குமாரி ராமப் பிரியனுடன் ஒன்றி விட்டதை உணர்ந்து பரவசமடைந்தார். "ஜாதி எதுவானால் என்ன? பத்துடை அடியவர்க்கு அவன் எளியவன்" என்று நினைத்து - நினைத்து உள்ளம் உருகி, "தேவி! உன்னைப் போல் ஒரு விக்ரகம் செய்வித்து ராமப் பிரியன் திருவடியிலேயே நீ வசிக்கும்படி செய்கிறேன்" என்று சொல்லிப் பல்லக்கை மேலும் செல்ல படர்களைத் தூண்டினார்.

ஆனால் இடைஞ்சல் அத்துடன் முடியவில்லை. ஏதோ பல்லக்கில் பெரும் பொக்கிஷம் போவதாக நினைத்த சில திருடர்கள் ஒரு நாளிரவு பல்லக்கைத் தாக்க முயலவே பல்லக்கைப் பக்கத்திலிருந்த குடிசைகளை நோக்கித் துரிதமாக எடுத்துச் செல்லப் பணித்தார் உடைய வர். அந்தக் குடிசைகளிலிருந்த பஞ்சமர்கள் பல்லக்கைச் சுற்றி நின்றும் பெருமாளைக் காத்து, திருடர்களுடன் சண்டையிட்டு அவர்களை விரட்டியடித்தனர். உடையவர் பேருவகை எய்தி, "எம்பெருமானைக் காப்பாற்றிய உங்களை இனி உலகம் திருக்குலத்தார் என்றழைக்கட்டும். எம்பெருமான் கோயிலில் உத்ஸவக் காலங்களில் கொடிப் பீடம் வரையில் வர உங்களுக்கும் உரிமையிருக்கும்" என்று அருளிச் செய்தார்.

இத்தனை இடைஞ்சல்களைத் தாண்டித் திரு நாராயணபுரத்தை அடைந்த உடையவர் திருநாராயணன் கோவிலில் ராமப்பிரியரைப் பிரதிஷ்டை செய்து நவாப் மகளைப் போலவே ஒரு விக்ரகம் செய்து பீபி நாச்சியாராக அவளையும் பிரதிஷ்டை செய்து ஸம்ப்ரோட்சணம் நடத்தி உற்சவங்களைப் பலமாக நடத்தினார். இப்படி சேவை செய்து கொண்டே பன்னிரண்டு ஆண்டுகள் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் செய்து கொண்டு திருநாராயணபுரத்திலேயே காலம் கழித்தார். அந்த நிம்மதியையும் அறுக்கும் செய்தி ஸ்ரீரங்கத்திலிருந்து வந்தது.





# 44. கண்கள் புரிந்துவிட்ட பாவம்

சோழனுடைய உபத்திரவத்திற்கு அஞ்சி மேல்நாடு சென்றுவிட்ட ராமானுஜர், மேலக்கோட்டை என்கிற திருநாராயணபுரத்தைக் காடு திருத்தி, நாடாக்கி, திரு நாராயணன் கோயிலையும் புதுப்பித்து அங்கேயே நிம்மதி யோடு வாழ்ந்து கொண்டிருந்தாலும், தமக்குப் பதிலாக ராஜசபைக்குப் போன கூரத்தாழ்வானும் பெரியநம்பிகளும் என்ன ஆனார்களோ என்ற கவலைமட்டும் இருந்து கொண்டே தானிருந்தது. அச்சமயத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ண வர் ஸ்ரீரங்கத்திலிருந்து திருநாராயணபுரம் வந்தார். அவரிடம் கூரத்தாழ்வானைப் பற்றியும் பெரிய நம்பிகளைப் பற்றியும் கேட்டார் ராமானுஜர். அந்த ஸ்ரீவைஷ்ணவர் சொன்ன செய்தி நெஞ்சை நெருப்பாய் எரித்தது ஸ்ரீராமானுஜருக்கு.

ராஜசேவகர்களால் அரச சபைக்கு அழைத்துச் செல்லப்பட்ட கூரத்தாழ்வானைக் கண்டதும் அவரை ராமானுஜர் என்றே எண்ணி விட்டான் சோழ அரசன். காஷாயமும் திரிதண்டமும் அணிந்திருந்த அவரைப் பார்த்து "ராமானுஜரே! சிவனைக் காட்டிலும் மேம்பட்ட தெய்வமில்லை என்று எழுதிக் கையெழுத்திடும்" என்று அதிகாரத் தொனியில் ஆணையிட்டான்.

"வேதங்களில் சொல்லப்பட்ட விஷயங்களுக்குப் புறம்பாக ஸ்ரீவைஷ்ணவர்கள் எதையும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஸ்ரீமந்நாராயணன் உலகளந்த சரிதத்தை நீ அறியாயோ? அவன் மேலுலகங்களை அளக்கத் தன்னுடைய திருவடியை நீட்டினபோது அதைக் கங்கை நீராலே கழுவினான் பிரமன். அந்த கங்கை நீரைத் தன் தலையிலே தரித்தான் பரமசிவன். காலை நீட்டினவன் உயர்ந்தவனா? கழுவினவன் உயர்ந்தவனா? அந்த நீரைத் தலையிலே தரித்தவன் உயர்ந்தவனா? நீயே சொல்" என்றார் கூரத் தாழ்வான்.

"இந்த அதிகப்பிரசங்கமெல்லாம் வேண்டாம். 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்று கையெழுத்திடப் போகிறீரா இல்லையா" என்று கோபத்தோடு கேட்டான் சோழன்.

சட்டென கூரத்தாழ்வானுடைய மூளையில் ஒரு குறும்பு மின்னியது. "சிவம்' என்ற சொல்லுக்குப் பரம சிவன் என்பது பொருளானாலும், அதற்கு 'குறுணி' என்றொரு பொருளும் உண்டு. அதாவது மரக்கால், படி போன்ற அளவுகளையும் அந்த 'சிவம்' என்ற சொல் குறிக்கும். இதை நினைத்த கூரத்தாழ்வான் 'த்ரோணமஸ்தி தத:பரம்' சிவத்தைக் (குறுணியைக்) காட்டிலும் த்ரோணம் (பதக்கு) பெரியது என்று எழுதிவிட்டார்.

இதனால் சோழனின் கோபம் பன்மடங்கு அதிகமாகி விட்டது.

"இவ்விருவர் கண்களையும் பிடுங்கிவிடுங்கள்" என்று தன் ஏவலாளர்களுக்கு ஆணையிட்டான்.

அரசனுடைய ஆணையைப் பின்பற்றிய சேவகர்கள் முதலில் ஆழ்வானுடன் வந்த பெரியநம்பியை அரண்மனை யின் கொல்லைப் புறத்திற்கு அழைத்துச் சென்றனர் சிறிது நேரத்தில் கொல்லைப் புறத்திலிருந்து பெரும் கூக்குர லொன்று எழுந்தது.

அப்போது உள்ளே வந்த படர்களை நோக்கி அரசன் கேட்டான், "அந்த வைஷ்ணவப் புழுவை அழித்து விட்டீர் களா?" என்று.

உடனே கூரத்தாழ்வான் சீறி எழுந்தார்! "அடேய் பாதகா! பெரியநம்பிகளை என்ன செய்தாய்? அந்தப் பரம பாகவதருக்கு நீ செய்யும் ஒவ்வொரு தீங்கும் உன்னைச் சும்மா விடாது. அந்த மகானையா புழு என்கிறாய்? அட பாவி! புழுக்களைப்பற்றி வெகுசீக்கிரம் தெரிந்து கொள் வாய்" என்று கூறி அரண்மனையின் பின்புறத்திற்கு ஓடினார். அங்கே கண்கள் பிடுங்கப்பட்டு ரத்த வெள்ளத் தில் கிடந்த பெரியநம்பியைக் கண்டார் கூரத்தாழ்வான்.

நீதிமன்றத்தின் பின்பகுதியிலிருந்த பெரியநம்பியின் அவலநிலையைக் கண்டதும் எதற்கும் கலங்காத கூரத்தழ் வானே நிதானமிழந்து, "ஸ்வாமி! ஸ்வாமி! என்ன அநியா யம், இது என்ன அநியாயம்" என்று கதறிவிட்டார். அவர் சொற்களை ஆமோதிப்பனபோல் அந்த மண்டபத்தில் கற்றூண்களும், சுவர்களும் இது என்ன அநியாயம்! இது என்ன அநியாயம் என்ற பயங்கரமாக எதிரொலி செய்தன. அந்த எதிரொலியால் அரியணையில் அமர்ந்திருந்த அரசனே நடுங்கினான். அந்த சமயத்தில் உள்ளே வந்த கூரத் தாழ்வான், "என்ன காரியம் செய்தாய் மன்னா! பரம பாகவதரான பெரியநம்பிக்கு, நீ செய்த அபசாரம் உன்னை ஜென்ம ஜென்மத்துக்கும் விடாது. அத்துடன் நாங்கள் செய்யவேண்டியதை நீ செய்தாய்: உன்னைப் போன்ற ஒரு பாதகனைப் பார்த்த இந்த ஊனக் கண்களை நாங்கள் அல்லவா பிடுங்கி எறிந்திருக்க வேண்டும்" என்று கூறி தமது விரல் நகங்களை கொடுத்து கண்கள் இரண்டையும் பிடுங்கி மன்னன் முன்பு எறிந்தார். அந்த சாகஸ காட்சி யைக் கண்டு சபையிலிருந்த அனைவரும் நடுங்கினர். அரசன் நிலைகுலைந்து ஆசனத்தில் சாய்ந்து விட்டான். பின்னால் தோட்டத்திலிருந்த பெரியநம்பியின் ஆவி

பிரிந்து கொண்டிருந்தது. அங்கு சென்ற கூரத்தாழ்வான் மடியில் தலையை வைத்து தனது மகள் அத்துழாயின் மடியில் காலைநீட்டித் தமது இதயத்தை ஆசாரியன் திருவடிகளில் பிணைத்துப் பிராணனை விட்டுக் கொண்டிருந்தார் பெரியநம்பி. அதைக் கண்ட கூரத்தாழ் வான் கண் கலங்கினார். அவர் கண்களில் திரண்ட நீரில் இரண்டு துளிகள் பெரியநம்பியின் நெற்றியின் மேல் விழுந்தன. பெரியநம்பி ஆழ்வானை நோக்கி "ஆழ்வான்! ஆழ்வான்! கண்கலங்கும் நேரமல்ல இது. ஆசாரியன் என்னை அழைக்கிறார். அழகிய மணவாளனும் அழைக் கிறான். உத்தமமான பதத்திற்குச் செல்லும் என்னைப் பாரும்" என்று சமாதானம் சொன்னார். ஆனால் சமா தானம் அடையாத கூரத்தாழ்வான் எழுந்து, பெரிய நம்பியை ஸ்ரீரங்கத்தில் பள்ளி படுத்த எடுத்துப்போக முயன்றதற்கு பெரியநம்பி ஒப்புக்கொள்ளவில்லை. "நாம் இப்படி செய்தால், ஸ்ரீரங்கத்தில் பிராணன் போனால்தான் உத்தம கதி கிடைக்கும் என்று எல்லாருமே இதற்காக அங்கு வருவார்கள். ஆனால் அதற்கு நாம் வழிகாட்டக் கூடாது. இங்கேயே என் சரம கைங்கர்யங்களைச் செய்து விடுங்கள்" என்றார். ஆழ்வானும் பெரியநம்பியின் ஆணையை மீற முடியாமல் அப்படியே செய்தார். பிறகு தர்சனத்திற்கான (மதத்திற்காக) தர்சனத்தை (கண்களை) இழந்த கூரத்தாழ்வான் பெரியநம்பிகளையும் இழந்து ராமானுஜரையும் பிரிந்து மிக்க மனவருத்தத்துடன் ஸ்ரீரங்கத்தில் வசிக்க விரும்பாமல் திருமாலிருஞ் சோலைக்குச் சென்றுவிட்டார். இத்தனை விவரங்களையும் ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த ஸ்ரீ வைஷ்ணவர் திருநாராயண புரத்திலிருந்த ராமானுஜருக்குச் சொல்ல, ஒவ்வொரு சொல்லும் அவர்மீது இடியென இறங்கியது.





# 45. நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேணும்

சோழ ராஜஸபையில் பெரியநம்பிகள் உயிரையும் கூரத்தாழ்வான் கண்களையும் இழந்த விவரங்களைக் கேட்ட ராமானுஜர் மிகவும் வருத்தமுற்றார். தம்முடைய சிடர்களில் ஒருவரான மாருதிச்சிறியாண்டான் என்ப வரைக் கூரத்தாழ்வானிடம் அனுப்பினார். அவரும் திரு மாலிருஞ் சோலைக்கு வந்து கூரத்தாழ்வானைச் சந்தித்து ராமானுஜருடைய வருத்தத்தைத் தெரிவித்தார்.

"உலகுக்கெல்லாம் ஆசார்யரான எம்பெருமானார் சுகமாக வாழ்ந்தால் அதுவே அடியேனுக்குப் போதும்" என்று கூரத்தாழ்வான் சொன்னார்.

இதனிடையில் ஆழ்வான் கண்ணிழப்பதற்குக் காரண மாயிருந்த சோழவரசனின் வைஷ்ணவ த்வேஷம் அதிகமா யிது. கோபம் கண்களை மூட விஷ்ணுகோவில்களை இடிக்கத் தலைப்பட்டான். தில்லைத் திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளியிருந்த கோவிந்தராஜர் மூலவரை கடலில் எறிந்துவிட்டான். ஆனால் அர்ச்சகர்கள் எப்படியோ அரசனுக்குத் தெரியாமல் உத்ஸவரைத் திருப்பதிக்குக் கொண்டு சென்றுவிட்டனர்.

கோபம் வந்தால் மனிதனுக்குத் தான் இன்னது செய்கி றோம் என்பதே தெரிவதில்லை. ஆனால் செய்ததன் பலனை அவனே முழுவதுமாக அனுபவிக்கிறான். சோழன் கதியும் அப்படியே ஆயிற்று. வைணவத் துவேஷம் நாளுக்கு நாள் அதிகமாக, ஸ்ரீரங்கம் கோவிலையும் இடிப்பதற்காகப் பெரும்படையுடன் புறப்பட்டான்.

ஆனால் அவன் எண்ணம் பலிக்கவில்லை. அவன் ஒன்று நினைக்க, அரங்கன் வேறொன்றை நினைத்து விட்டான். வழியில் ஒரு கிராமத்தில் தங்கினான். அன்றி ரவே அவனது கழுத்தில் ஒரு புண் உண்டாயிற்று. அப் போதே புண்ணிலிருந்து ஏராளமான புழுக்கள் உண்டா யின. பெரிய நம்பியைப் 'புழு' என்று இகழ்ந்தவனுக்கு எத்தனை சரியான தண்டனை! "அந்த மகானையா புழு என்கிறாய்? விரைவில் புழுக்களைப்பற்றித் தெரிந்து கொள்வாய்" என்று ஆழ்வான் இட்ட சாபம் பலித்தது. மகான்களின் வாக்கு என்றைக்குமே பொய்ப்பதில்லை. இவை போதாதென்று அவனுக்குக் கடுமையான வயிற்று வலியும் வந்து அன்றிரவே துடிதுடித்துச் செத்தான். கழுத்திலே புழுத்து மாண்டதால் கிருமிகண்டன் (புழுக் கழுத்தன்) எனப்பெயர் பெற்றான் அவ்வரசன். நம் ஆசார் யர்களுக்குக் கொடுந்தீங்கு விளைவித்த அவனை அவ்யப தேச்யன் (பெயர் சொல்லவும் தகாதவன்) என்றே முன் னோர்கள் குறிப்பிடுவர்.

கூரத்தாழ்வானைச் சந்திப்பதற்காக வந்திருந்த மாருதிச் சிறியாண்டான், இவ்விவரங்களையெல்லாம் அறிந்து அம்மங்கியம்மாள் என்பவரையும் அழைத்துக்கொண்டு மீண்டும் திருநாராயணபுரம் புறப்பட்டார்.

திருநாராயணபுரத்திலே கல்யாணி புஷ்கரிணி எனும் குளத்தின் கரையிலே அனுஷ்டானத்திற்காக எழுந்தருளி யிருந்த ராமானுஜரைத் தண்டனிட்ட இருவரும் கிருமி

கண்டன் மாண்ட செய்தியைக் கூற ராமானுஜர் பேருவகை எய்தினார்.

"இந்த நல்ல செய்தியைக் கொண்டு வந்த உங்களுக்கு என்ன பரிசளிப்பேன்? ராவணன் மாண்ட செய்தியை அனுமன் வாயிலாகக் கேட்ட சீதாபிராட்டி அடைந்த மகிழ்ச்சியன்றோ எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது!" என்று கூறினார்.

பிறகு உடனடியாக ஸ்ரீரங்கத்திற்குப் பயணமாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி சீடர்களுக்கு நியமித்தார். இதைக் கேட்ட திருநாராயணபுரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் ராமானுஜரைப் பிரியவேண்டுமே என்ற வருத்தத்தில் ஆழ்ந்தார்கள். "தேவரீரைப் பிரிந்து ஒரு கணமும் நாங்கள் உயிர் வாழ்ந்திருக்க மாட்டோம். எங்களையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டும்" என்று வேண்டினர்.

"உங்களையெல்லாம் அழைத்துச் சென்றுவிட்டால் திருநாராயணனை யார் கவனித்துக் கொள்வார்கள்? எனவே நீங்கள் இங்கேயே தானிருக்க வேண்டும்" என்றார் ராமானுஜர்.

தம்மைப் பிரிய மாட்டாத சிஷ்யர்களுடைய வருத்தத்தைப் போக்குவதற்காகத் தம்மைப் போலவே ஒரு விக்ரகத்தைச் செய்து அதில் தம் சக்தியைய்ம் புகுத்தி அவர்களிடம் அளித்தார். அந்த விக்ரகத்தின் மூலம் அவர்களுடன் பேசவும் செய்தார் யதிராஜர். அதனைக் கண்ட சீடர்கள் அனைவரும் உகந்தனர். இன்றைக்கும் அந்த விக்ரகம் 'தமர் உகந்த திருமேனி' என்ற புகழுடன் திருநாராயணபுரத்தில் விளங்குகிறது.

இங்ஙனமாக அவர்களிடம் பிரியா விடை பெற்று ஸ்ரீரங்கம் திரும்பிய ராமானுஜருக்குக் கோலாகலமான வரவேற்பளிக்கப்பட்டது. பதினான்கு ஆண்டுகள் வன

வாசத்தை முடித்துக் கொண்டு ராமன் அயோத்தி திரும்பிய போது மக்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார்களோ அவ்வளவு மகிழ்ச்சியை ஸ்ரீரங்கம் வாசிகளும் அடைந் தார்கள்.

ராமானுஜர் வரப் போவதை அறிந்த கூரத்தாழ்வானும் திருவரங்கம் திரும்பினார். அவரைக் கண்ட ராமானுஜ ருக்குத் துக்கம் பீரிட்டது. அவரையும் அழைத்துக் கொண்டு சென்று அரங்கனைத் தரிசித்தார். பற்பல சிஷ்யர் களை வாழ்வித்துக் கொண்டு ஸ்ரீரங்கத்திலே வாழ்ந்து வரலானார். ஆனால் ஒரு விஷயம் மட்டும் அவர் மனதை உறுத்திக் கொண்டே இருந்தது. அது கூரத்தாழ்வான் கண்ணில்லாமல் இருப்பதுதான்.

"ஆழ்வான்! காஞ்சீபுரம் வரதராஜன் வேண்டியவர் களுக்கு வேண்டிய வரத்தை அருளுபவன் அவனிடம் சென்று உமது கண்களை வரமாகக் கேளும்" என்று வற்புறுத்த ஆசாரியரின் வார்த்தைகளை மீறமுடியாமல் ஆழ்வானும் இசைந்தார்.

காஞ்சீபுரம் வந்து வரதராஜனை 'வரதராஜ ஸ்தவம்' என்ற தோத்திரத்தால் துதித்தார். அகமகிழ்ந்து அவர் முன் தோன்றிய வரதராஜன் "ஆழ்வான்! உமக்கு என்ன வேண்டும்!" என்று கேட்டான் தமக்குக் கண்கள் வேண்டும் என்று கேட்கவில்லை. "நான் பெறும் பேறு நாலூரானும் பெறவேணும்" என்று கேட்டார். ஆம். இப்படித் தாம் கண்களை இழப்பதற்குக் காரணமாயிருந்த நாலூரானும் நல்ல கதியடைய வேண்டும் என்று கேட்டார் ஆழ்வான். வரதராஜனும் அப்படியே வரமளித்து விட்டான். அதைக் கேட்ட எம்பெருமானார் வருத்தமுற்றாலும் ஆழ்வானு டைய ஆத்ம குணத்தை வியந்து போற்றினார்.

அதற்குப் பிறகு நாடெங்கிலும் திக் விஜயம் செய்து ஸ்ரீவைஷ்ணவ மதப் பிரச்சாரம் செய்தார். திருப்பதிக்குச்

சென்று அங்கு எழுந்தருளியிருந்த தில்லை திருச்சித்திர கூடம் கோவிந்த ராஜரை முறைப்படிப் பிரதிஷ்டை செய்தார். தில்லையிலும் மறுபடிக் கோவிந்தராஜன் ஸன்னிதியைக் கட்டிக் கோவிந்தராஜனைப் பிரதிஷ்டை செய்தார்.

பிறகு ஸ்ரீரங்கம் திரும்பி அழகிய மணவாளனுக்குக் கைங்கர்யங்களைச் செய்து கொண்டு அங்கேயே எழுந்தருளியிருந்தார்.





# 46. தானான திருமேனி

இவ்வாறு ஸ்ரீராமானுஜர் தாம் இப்பூவுலகில் எழுந்தருளிய நாள்முதல் கடைசிவரை சரித்திரம் படைத்துக் கொண்டே இருந்தார்.

பற்பல சமயங்களையெல்லாம் வென்று உலகத்தை ஸ்ரீவைஷ்ணவ மயமாக்கினார்.

பற்பல அரசர்களையும் திருத்திப் பணி கொண்டு அவர்களையும் ஸ்ரீவைஷ்ணவர்களாக்கினார்.

கோயில் நிர்வாகங்களில் பல புதிய சீர்திருத்தங்களைச் செய்தார். எல்லாச் சாதியினருக்கும் அவரவர்களுக்கேற்ற திருப்பணிகளைச் செய்யும் உரிமைகளை அளித்தார்.

ஆழ்வார்கள் அருளிச் செய்த தமிழ்ப் பாசுரங்களை வடமொழி வேதங்களுக்கு இணையாகக் கருதும்படிச் செய்தார். அவற்றைத் திராவிட வேதம் என்றே அறிமுகப் படுத்தினார். கோவில்களில் எம்பெருமானுக்கு முன்பு திராவிட வேதமான திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களை ஓதும்படி ஏற்பாடு செய்து வடமொழி வேதங்களைக் காட்டிலும் தமிழ் வேதங்களுக்கு முன்னுரிமை அளித்தார். இதனால் “தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே” என்று அனைவராலும் போற்றப்பட்டார்.

ஸ்ரீராமானுஜர் வாழ்ந்த காலத்தில் அவருக்குச் சீடர்களாக 700 சன்னியாசிகளும் 12,000 ஸ்ரீ வைஷ்ணவர்களும் எண்ணற்ற அடியார்களும் இருந்தார்கள் என்று

ஸ்ரீராமானுஜர் காலத்திலேயே வாழ்ந்திருந்த வடுக நம்பி கூறியுள்ளார். ராமானுஜர், தமக்குப் பின்னரும் ஸ்ரீவைஷ்ணவ மதம் தழைத்தோங்குவதற்காக, தம்முடைய சீடர்களில் 74 மாணிக்கங்களைத் தேர்ந்தெடுத்து அவர்களை சிம்மாசனாதிபதிகளாக நியமித்தார்.

இப்படிப் பல சீர்திருத்தங்களையெல்லாம் செய்து கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்து கொண்டிருந்த எம்பெருமானாருக்கு வயது நூறுக்கும் மேலாகிவிட்டது.

ஒரு நாள் ராமானுஜருடைய சீடரான கூரத்தாழ்வான் நம்பெருமாள் முன் வந்து நின்றார்.

"ஆழ்வான்! என்ன வேண்டும்" பெருமாள் கேட்டார்.

"கேட்டால் நிச்சயமாகக் கொடுப்பாயா?"

"நம் ராமானுஜன் மீது ஆணை! என்ன வரம் கேட்டாலும் தருகிறேன்."

"அப்படியானால் எனக்கு இப்போதே மோக்ஷம் அருள வேண்டும்" என்றார் ஆழ்வான். அரங்கனும் தான் கொடுத்த வாக்குறுதியை மீற முடியாமல் சரியென்று சொல்லிவிட்டான்.

இதை அறிந்த ராமானுஜர் ஓடோடி வந்தார். "ஆழ்வான்! என்னை விட்டுவிட்டு நீர் மட்டும் பரமபதம் போவது நியாயமில்லை" என்றார்.

"தேவரீர் பரமபதம் எழுந்தருளும்போது தேவரீரை அங்கு அடியேன் எதிர்கொள்ள வேண்டாமா! அதற்காகத் தான் அடியேன் முன்னால் செல்கிறேன்" என்று பதில் சொன்னார் ஆழ்வான். இதிலும் இவருடைய ஆசார்ய பக்தியைக் கண்டு வியந்தார் ராமானுஜர். அன்றைய தினமே ஆழ்வான் பரமபதமடைந்துவிட, அவருக்குச் செய்ய வேண்டிய கைங்கர்யங்களைச் சிறப்பாக நடத்தி வைத்தார் ராமானுஜர்.

பிறகு சில வருடங்களுக்குள்ளேயே தாமும் திருநாடு செல்ல விரும்பி அரங்கனிடம் பிரார்த்தித்தார். "எம் பெருமானே! 'மனிதன் நூறாண்டுகள் வாழ்வான்' என்று வேதம் பகர்கிறது. அடியேன் அதற்கும்மேல் இருபது வருடங்கள் வாழ்ந்துவிட்டேன். எனவே அடியேனுக்குப் பரமபதமருள வேணும்" என்று வேண்டினார்.

"உமக்கு மட்டுமல்ல ராமானுஜரே! உம்மோடு தொடர் புடையை எல்லோருக்கும் நான் மோக்ஷமளிக்கிறேன்" என்று பகவான் வரம் கொடுக்க மிக்க மகிழ்ச்சி கொண்டார் எம்பெருமானார்.

ஆனால் ராமானுஜருடைய சீடர்கள் அவரைப் பிரிய முடியாமல் வருத்தமுற்றார்கள். அவர்களுடைய வருத்தத் தைப் போக்குவதற்காகச் சிறந்த சிற்பிகளை வரவழைத்து தம்மைப்போலவே ஒரு விக்ரகத்தைச் செய்யச் சொன்னார்.

சிற்பியால் வடிக்கப்பட்ட அந்த விக்ரகம் தத்ரூபமாய் தம்மைப் போலவே இருப்பது கண்டு மகிழ்ந்த ராமானுஜர் அந்த விக்ரகத்தை ஆரத் தழுவிக் கொண்டு உகந்து, தம் முடைய சக்தியையும் அதில் புகுத்தினார். அது '**தான் உகந்த திருமேனி**' என்று புகழ் பெற்றது. அந்த விக்ரகத் தைத் தம்முடைய அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் பிரதிஷ்டை செய்யுமாறு முதலியாண்டானுடைய குமாரரான கந்தாடையாண்டானுக்கு நியமித்தார். ராமானுஜர் நியமனப் படியே கந்தாடையாண்டான் ஒரு தைமாதம் புஷ்ய நக்ஷத்ரத் தன்று ஸ்ரீபெரும்பூதூரில் தானுகந்த திருமேனியை பிரதிஷ்டை செய்தபோது ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த ராமானுஜருக்கு உடலில் சிறிது சிறிதாகத் தளர்ச்சி ஏற்பட்டது. தம்முடைய சக்தியனைத்தையும் இப்படியாக ஸ்ரீபெரும் பூதூரில் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்ரகத்தில் புகுத்திவிட்டு, எம்பாரின் மடியிலே தலைவைத்து, வடுக நம்பியின் மடியிலே திருவடிகளை நீட்டி, த்வயமந்திரத்தை உச்சரித்துக் கொண்டே திருநாடு ஏகினார்.

எம்பெருமானார் பரமபதித்தசேதி கேட்டு மிகவும் வருத்தமுற்ற அரங்கன் அவரைத் திருப்பள்ளிப் படுத்துவதற் காகத் தன்னுடைய வசந்தமண்டபத்தையே அளித்தான். அங்கே ராமானுஜரை ஸ்ரீவைஷ்ணவ சந்யாசிகளுக்குரிய முறையில் திருப்பள்ளிப் படுத்திவிட்டுப் புதைத்து விட்டு அங்கே ராமானுஜருக்கு ஒரு ஸன்னிதியும் கட்டி அவருடைய விக்ரகத்தையும் பிரதிஷ்டை செய்தார்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். இன்றைக்கும் ஸ்ரீரங்கத்தில் அது **'தானான திருமேனி'** என்ற புகழுடன் விளங்கி வருகிறது.

இப்படியாக ஸ்ரீராமானுஜர் என்கிற அவதார புருஷர் இப்பூவுலகில் 120 ஆண்டுகள் (1017 A.D. to 1137 A.D) வாழ்ந்திருந்து சகல ஜீவராசிகளும் உஜ்ஜீவிக்கும்படி செய்தார். பாருலகில் ஆசையுடையோர்க்கு எல்லாம் ரகஸ் யார்த்தங்களைக் கூறுங்கள் என்று பரந்த திருவுள்ளத் துடன் பேசினார். அவர் ஒரு சமூக சீர்திருத்தவாதி; சமய சீர்திருத்தவாதி; அரசியல் சீர்திருத்தவாதி. இப்படிப் பல துறைகளிலும் புரட்சிகளைச் செய்த மகான் இவருக்கு முன்பு பிறந்ததுமில்லை. இனி அப்படியொருவர் பிறக்கப் போவதுமில்லை.

அவர் பரமபதம் செல்வதற்கு முன்னால் நமக்குப் பத்துக் கட்டளைகளைத் தந்துவிட்டுச் சென்றார். அவை யாவன:

1. பரப்பிரம்மம் என்பது ஒன்றே. அது அளக்க முடியாதது, அதன் வெளிப்பாடுகளே சித்து, அசித்து என்பன.

   சித்து என்பது ஜீவாத்மா, அசித்து என்பது கண் களுக்கு புலனாகும் உலகம்.

2. பகவானைச் சரணமடைந்த எவனும் தன் எதிர் காலத்தைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. அது இறைவன் பொறுப்பு என்றிருக்கவேண்டும்.

3. சரணமடைந்த பிறகு ஏற்படும் இன்ப துன்பங்கள் முன் வினைப் பயனாக ஏற்படுபவை என்று எண்ண வேண்டும்.

4. மோக்ஷத்தை அடைவதற்கு உபாயம் (சாதனம்) என்று எந்தச் செயலையும் செய்யக்கூடாது.

5. ஸ்ரீபாஷ்யத்தை அர்த்தத்துடன் முறையாகக் கற்க வேண்டும், கற்பிக்கவேண்டும். அது முடியாவிட்டால்.

6. நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை அர்த்தத்தோடு கற்கவேண்டும், கற்பிக்கவேண்டும். அதுவும் முடியா விட்டால்,

7. பகவான் கோயில் கொண்டுள்ள திவ்யதேசங்களில் வசித்து பகவானுக்குத் தொண்டு செய்தல், ஏழைகளுக்கு உதவி செய்தல் போன்ற நற்காரியங்களில் ஈடுபட வேண்டும்.

8. திருநாராயணபுரத்தில் ஒரு குடிலாவது கட்டிக் கொண்டு அமைதியுடனும், மனத்திருப்தியுடனும் வாழ வேண்டும். அல்லது.

9. இருந்தவிடத்தில் இருந்து கொண்டே பகவான் மீதோ, ஆசாரியன் மீதோ எல்லாப் பாரங்களையும் போட்டு விட்டு எப்போதும் அவர்களிருவரையும் சிந்தித்துக் கொண்டிருக்கவேண்டும். அல்லது,

10. எல்லா வைஷ்ணவ லக்ஷணங்களும் பொருந்தியவனும், அகங்கார மமகாரங்கள் அற்றவனும், எல்லா ஜீவராசி களிடத்தும் கருணையுள்ளவனுமான ஒரு ஸ்ரீவைஷ்ண வனின் ஆதரவில் ஒதுங்கி இருக்கவேண்டும்.

இப்பத்துக் கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு நம்மாலியன்ற வரை முயற்சி செய்வோமாக!

*ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்*
*ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்வலா*



